
கல்கி
– தில்லியிலிருந்து
ஒரு நேர்முக
வர்ணனை!
KALKI 26.9.99 ரூ. 4.50
வெற்றி யாருக்கு?

## காதில் விழுந்தவை

● சென்னையில் தேர்தலுக்கு முதல் நாள் மயிலாப்பூரிலுள்ள கூட்டுறவு வங்கி கட்டடத்தில் 'கள்ள வோட்டுப் போட வந்தவர்கள்' என்று சந்தேகப்பட்டு இருநூறு நபர்களை அ.தி.மு.க.வினர் + காங்கிரஸ் காரர்கள் சேர்ந்து 'சிறை'ப் பிடித்து விட்டார்கள் அல்லவா! இதனால் தி.மு.க.வினர் ரத்தம் சூடேற, ஒரே களேபரம். அப்போது தென்சென்னையைச் சேர்ந்த தி.மு.க. பிரமுகர், காங்கிரஸ் பிரமுகரான கராத்தே தியாகராஜனிடம் "ஏம்பா... நீ ஏன் அங்கே போய் கலாட்டா பண்றே? அவுங்கல்லாம் மத்திய சென்னைக்கு வந்திருக்காங்கப்பா... நீ ஒண்ணும் கண்டுக்காதப்பா" என்றாராம்! இது ஒருபுறம் இருக்க, ஒரு கட்சியின் தலைமையகத்தில் இருந்து தொண்டர்களுக்கு 'மை' அழிப்பதற்கான ரசாயன திரவம் சப்ளை செய்யப்பட்டதாம்.

● இப்போதைய மாநகராட்சி கவுன்ஸிலர்களுக்கான அடையாளங்கள் என்ன? டாட்டா சுமோவும், கையில் செல்போனும்தான். அதுவும் பெண் கவுன்ஸிலர்கள் காட்டில் மழை! சென்னையிலுள்ள ஒரு பெண் கவுன்ஸிலரின் வளர்ச்சியைப் பார்த்துக் கட்சிக்காரர்களே பொறாமைப் படுகிறார்கள். மேயர் எந்தக் கூட்டத்தில் பேசினாலும், முன் வரிசையில் வந்து உட்கார்ந்து கலக்குகிறாராம் அவர். இதனால் மேயருக்கு வேண்டியவர் என்ற முத்திரை அவர் மீது விழ அதிகாரிகள் கொஞ்சம் அதிகமாகவே சலாம் போட்டு கவனித்துக் கொள்கிறார்களாம்.

● 'அம்மா'வும் உ.பி.ச.வும் ஆந்திரத் தலைநகருக்கு ஓய்வெடுப்பதற்காகச் சென்று விட்டார்கள் அல்லவா. அவர்களைத் தொடர்ந்து சென்னையிலிருந்து தனி வேன்களில் ஆறு மாத காலம் ஹைதராபாத்திலேயே தங்கியிருப்பதற்கு ஏற்றபடி லக்கேஜ்கள் அனுப்பப்பட்டிருக்கிறதாம். தேர்தல் முடிவுகள் சாதகமாக இருப்பின் உடனே சென்னைக்குத் திரும்புவாராம்.



# தேர்தல் முடிவுக்கேற்றபடி ஹைதராபாத் வாசம்!

இல்லையேல் அங்கேயே சில மாதங்கள் வாசமாம். தாம் தேர்தல் பிரசாரத்தில் இருந்த போது ஜெயா தொலைக்காட்சி ஒளி பரப்பிய நிகழ்ச்சிகளின் வீடியோ காஸெட்டுகளையும் எடுத்துக்கொண்டு போயிருக்கிறார். வோட்டு எண்ணிக்கைக்கு இரண்டு நாட்கள் முன்பு திராட்சைத் தோட்ட வீட்டில் யாகம் ஒன்றும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதாம். கட்சி விவகாரம் எதுவென்றாலும் தினகரனிடம் எடுத்துச் சொல்லும்படி தலைமை நிர்வாகிகள் அறிவுறுத்தப்பட்டிருக்கிறார்கள்.

● தி.மு.க. - அ.தி.மு.க. இரண்டு கட்சிப் பிரமுகர்களிடமும் பேசினால் அவர்கள் புலம்புவது வேட்பாளர்களைப் பற்றித்தான். கட்சி கொடுத்த பணத்தைத் தவிர வேறு வகைகளில் வசூலான பணத்தையும் சேர்த்து வரவு வைத்துப் பார்த்தால் பெரும்பாலான வேட்பாளர்கள் 'கணிசமாக' கருட்டிக் கொண்டார்கள் என்கிறார்கள். இது பற்றித் தலைமை நிலையங்களுக்கு புகார்கள் வந்த வண்ணம் உள்ளதாம். 'இப்போதெல்லாம் வேட்பாளராக நின்று விட்டாலே வாழ்க்கையில் செட்டில் ஆனது போல்தான்' என்கிறார் முக்கியத் தி.மு.க. பிரமுகர் ஒருவர். வெற்றி பெற்றால் அது போனஸா?

— சஞ்சயன்

எப்போதோ ஒருமுறைதான் விளையாட்டுத் துறையில் உலக அளவில் நம் நாடு பெருமை பெறுகிறது. என்னதான் முயன்றும் நம் தங்க மங்கை உஷாவால் கடந்த ஒலிம்பிக்கில் வெண்கலத்தின் அருகில் வர முடிந்ததே தவிர அதைக் கைப்பற்ற முடியவில்லை. அதிக எதிர்பார்ப்புகள் இருந்தும் துப்பாக்கி சுடுவதில் வல்லவரான ஜஸ்பால் ராணா ஆசிய அளவிலேயே கூட ஏமாற்றத்தைத் தந்து வருகிறார். விஸ்வநாதன் ஆனந்த் ஒரு பொக்கிஷம்தான். என்றாலும் உலக சாம்பியன் என்ற லட்சியத்தை எட்டுவதற்கு இன்னும் ஒரே பாய்ச்சல்தான் பாக்கி என்கிற நிலையிலேயே பல ஆண்டுகள் இருக்க வேண்டியிருக்கிறது. கிரிக்கெட்டைப் பற்றியோ, ஹாக்கியைப் பற்றியோ கேட்கவே வேண்டாம் - ஜான் ஏறினால் முழம் சறுக்கிக் கொண்டிருக்கிறது. இந்தச் சூழலில்தான் லியாண்டர்பயஸ் - மகேஷ் பூபதியின் சாதனை மகத்தானதாகிறது.



# வெற்றி ஜோடிக்கு வாழ்த்து!

என்ன இது, யு.எஸ். ஓப்பன் இறுதிச் சுற்றில் தோற்றுப் போய்த் திரும்பியிருக்கிறார்கள். இப்போது போய் பாராட்டுப் பத்திரமா என்று கேட்க வேண்டாம். கிராண்ட்ஸ்லாம் என்று வழங்கப்படும் 'விம்பிள்டன், பிரெஞ்சு ஒப்பன், யு.எஸ்.ஒப்பன், ஆஸ்திரேலிய ஒப்பன்' ஆகிய நான்கு சர்வதேச டென்னிஸ் பந்தயங்களில் ஒரே ஆண்டில் இறுதிச் சுற்றை எட்டிய ஒரே ஜோடி என்ற பெருமையை பெற்றுத் தந்திருக்கிறார்களே!

முதலில் ஆஸ்திரேலிய ஒப்பன் பந்தயத்தின் இறுதிச் சுற்றில் இவர்கள் தோல்வியைத் தழுவியபோது, 'இந்தியர்கள் கிராண்ட்ஸ்லாம் பந்தயமொன்றில் வெல்லக்கூடிய ஒரே வாய்ப்பு நழுவிவிட்டது' என்று விளையாட்டு விமர்சகர்கள் வருத்தப்பட்டார்கள். ஆனால் தொடர்ந்து பாரீஸ் நகரில் நடைபெற்ற பிரெஞ்சு ஓப்பன் பந்தயத்தில் இவர்கள் கோப்பையை வென்றபோது உலகமே வாயைப் பிளந்தது. மகேஷ் பூபதி இருவருடங்களுக்கு முன்பே ஆண் - பெண் இரட்டையர் ஆட்டத்தில் பிரெஞ்சுக் கோப்பையை வென்றவர்தான். அப்போது அவருடன் இணைந்து ஆடியவர் ஜப்பானைச் சேர்ந்த ரிகா ஹிரகிரி என்ற பெண்மணி. ஆனால் இந்த ஆண்டின் இரட்டையர் பிரிவு பிரெஞ்சுக் கோப்பை நூறு சதவீதம் இந்தியர்களுக்கானதாயிற்றே!

அடுத்து விம்பிள்டன். பல வருடங்களுக்கு முன் ஜூனியர் பிரிவில் லியாண்டர் பயஸ் வெற்றிக் கோப்பையைப் பெற்றதுண்டு. ஆனால் பொதுவாக களிமண் பரப்பின் மீது ஆடும் லாகவம் புல் தளத்தின் மீது ஆடும்போது இவர்கள் இருவருக்குமே சற்றுக் குறைந்து விடுகிறது என்பது இவர்கள் இருவருமே ஒப்புக் கொண்ட விஷயம். இருந்

தும் எந்த சக்தி இவர்களை அப்படி பம்பரமாய் இயக்கியது? விம்பிள்டன் கோப்பை இவர்களுக்குத்தான் என்பது உறுதியானவுடன் இருவரும் ஒருவரையொருவர் உற்றுப் பார்த்துக் கொண்டார்களே தவிர ஒரு வார்த்தையும் பேசிக் கொள்ளவில்லை! சுமார் ஐந்து மணி நேரத்துக்குப் பிறகு "ஏதோ மந்திரம் போட்டது போல் இருக்கிறது. அப்படி ஒரு கணத்தை வார்த்தைகளால் எனக்கு வர்ணிக்கத் தெரியவில்லை" என்றார் பயஸ். "நாங்கள் ஆனந்த அதிர்ச்சியில் இருந்தோம். பயஸ் அழுது விடுவான் போலிருந்தது. நான் அழவே அழுது விட்டேன்" என்றார் மகேஷ் பூபதி. அதுவும் அடிவயிற்றுப் பகுதியில் கடும் வலியோடு மகேஷ் ஆடியதையும், ஆண், பெண் இரட்டையர் ஆட்டத்தையும் அன்றே லியாண்டர் ஆட வேண்டிய கட்டாயம் (அதிலும் அவருக்கு வெற்றி) என்பதையும் வைத்துப் பார்த்தபோது... வெளுத்துக் கட்டி விட்டார்கள்தான்!

டென்னிஸில் ஒற்றையர் ஆட்டத்துக்கு இருக்கும் புகழ், இரட்டையர் ஆட்டத்துக்கு இல்லைதான். அதுவும் போர்க்-மெக்கென்ரோ, க்ராஃப்-செலஸ், மார்ட்டினா நவ்ரோத்திலோவா-கிரிஸ் எவர்ட் ஆட்டங்களில் நடப்பது போல இதயத் துடிப்பை அதிகப்படுத்துவது ஒற்றையர் ஆட்டம்தான். ஆனால் இரட்டையர் ஆட்டத்துக்கென்றும் ஒரு தனியான விசிறி வட்டம் உண்டு.

இப்போது இந்தப் பிரிவிலும் போட்டி மிகக் கடுமையாக ஆகிக் கொண்டு வருகிறது என்பது குறிப்பிடத்தக்க விஷயம்.

யு.எஸ். ஓப்பன் இறுதிச் சுற்றில் கனடா – அமெரிக்க நாட்டு வீரர்களிடம் இவர்கள் தோற்றிருக்கலாம். ஆனால் பயஸைப் பற்றிப் பெருமையாக மகேஷும், 'ஹேஷ்' என்று அவரைச் செல்லமாக பயஸும் குறிப்பிட்டபோது அனைவர் மனமும் மகிழ்ந்தது. சில மாதங்களுக்கு முன் இவர்களுக்கிடையே நிலவிய மனவேறுபாடு தீர்ந்து விட்டதற்காக அல்லது குறைந்தபட்சம் அது தங்களுடைய இணைந்த விளையாட்டில் பிரதிபலிக்காமல் பார்த்துக் கொண்டதற்காக அனைவரும் மகிழ்ந்தனர்.

மனவேறுபாடுகளைக் கடந்த தொழில் ரீதியான அணுகுமுறை எந்தத் துறையிலும் வெற்றிக்கு வழிகோலும் என்பதற்கு லியாண்டர்பயஸ் ஜோடி வாழும் உதாரணம்!

— குல்ஜூ



• என். ரவி



• ஏவி.எம். சரவணன்



• புகைப்படக் கண்காட்சி



• திருமதி கல்கி...



• 'முதல்' தந்த எம்.எஸ்.



• எம்.எஸ்ஸுக்கு சால்வை போர்த்துகிறார் மங்களாரமேஷ்



• பரிசு பெற்ற அறுவருடன்...



• சோ



• நல்லி குப்புசாமி செட்டி



• 'கல்கி களஞ்சியம்' வெளியீடு...



• இறைவணக்கம் பாடிய காயத்ரி



• உரையாற்றுகிறார் வைரமுத்து



• மலர் வெளியீடு



• கேஸட் வெளியீடு



• கோயில்களிலிருந்து ஆசியும் பிரசாதமும்...



• மங்கல இசை: சேஷம்பட்டி சிவலிங்கம் குழுவினர்

# பொன்னியின் புதல்வருக்கு நமது சிகர விழா

ஆசிரியர் இருக்கையில் அமரர் கல்கி அமர்ந்திருந்தார். பத்திரிகை ஆசிரியர் என்றால் பேனா இருக்கிறதோ இல்லையோ, குப்பைக் கூடை இருக்க வேண்டாமா? இருந்தது! மேஜையில் ஒரு கை ஊன்றி, வலக் கை ஆள்காட்டி விரலை உயர்த்தி விநாயகர் படு மும்முரமாய்ப் பத்திரிகை ஆசிரியரை பேட்டி கண்டு கொண்டிருந்தார்!

– காமராஜர் அரங்க நுழைவுப் பகுதியில் அமைத்திருந்த கண் காட்சிக்கென ஓவியர் கோபுலு தயாரித்துத் தந்த 'மினி கட் அவுட்'டில்தான் மேற்படி காட்சி இடம் பெற்றது. ஒருபுறம் ம.செ கைவண்ணத்தில் மாமல்லை பின்னணியில் சிவகாமியின் நடனம்; இன்னொரு பக்கம் மணியம் வரைந்த வந்தியத்தேவன் – குதிரையுடன்!

இவற்றுக்கு நடுவே அமரர்

• கௌரி ராம்நாராயண்

• ஏற்புரையாற்றும் தி.தா. நாராயணன்

• டி.என். கிருஷ்ணன்

கல்கியின் வாழ்க்கையிலிருந்து பல முக்கிய நிகழ்ச்சிகளைச் சித்திரிக்கும் புகைப்படக் கண்காட்சியை அழகாகத் தொகுத்திருந்தார் ஓவியர் வேதா.

கல்கியின் நிஜப் பேனாவும் இருந்தது – அவர் உபயோகித்த மேஜை நாற்காலி, ஆரம்பக் காலத்தில் எழுத அவர் பயன்படுத்திய டிரங்கு பெட்டி போன்ற நினைவுச் சின்னங்களுடன்...

"இந்தப் பேனா மட்டும் கிடைச்சா...?" ஏக்கத்துடன் ஓர் இளைஞர் கேட்க, "பேனா எதுக்கு? அவர் எழுத்து போதும் தூண்டிவிட்டு சக்தி கொடுக்க" என்று மற்றொருவர் பதில் சொல்ல, சிறு கூட்டம் ஆர்வத்துடன் கண்காட்சியைச் சுற்றி வந்தது.

அரங்கத்தின் உள்ளே பெரிய கூட்டம். மும்பை டெல்லியிலிருந்தும், கோவை, திருச்சியிலிருந்தும் ஆர்வத்துடன் வந்திருந்த கல்கி ரசிகர்கள்; பத்திரிகை நிருபர்கள், பொதுமக்கள்...

சேஷம்பட்டி சிவலிங்கத்தின் நாதஸ்வரத்தையும் அரங்கின் எளிமையான குருத்தோலை அலங்காரத்தையும் சேர்ந்தாற்போல் ரசித்தனர். தந்த வெண்மையில் ஓலைகளை விளக்குக் குடுவைகளாக்கி உள்ளே மின்சார பல்புகள் பொருத்தியிருந்தார் தாமஸ். அவை ஒளிர்ந்தபோது இளம் மஞ்சளும் பசுமையும் கலந்த ரம்மியமான நிறம் வெளிப்பட்டது. மேடையின் இடது பக்கத்தில் கல்கியின் வாழ்க்கையோடு கலந்து போன பெரியோர்கள் டி.கே.சி, ராஜாஜி, சதாசிவம் ஆகியோரின் அலங்கரிக்கப்பட்ட படங்கள்–

சேஷம்பட்டி, 'காற்றினிலே வரும் கீதம்' வாசித்து முடிக்க, இறை வணக்கத்துடன் விழா தொடங்கியது. பள்ளி மாணவி காயத்ரி, ஸித்தி வரமருள் சக்தி விநாயகனை வேண்டிப் பாட, 'நான்தான் இங்கேயே இருக்கிறேனே' என்பதுபோல் மேடையின் இரு பக்கங்களிலும் கையுயர்த்திச் சிரித்தார் கணபதி! 'இந்த அழைப்பை எனது குடும்பத்தில் மற்றவர்களுக்கு அனுப்பி வைக்கிறேன்' என்று அவர் முடிவு செய்திருப்பார் போலும்! கபாலீஸ்வரும், பார்த்தசாரதி பெருமாளும், கந்தகோட்ட முருகனும் கோயில் பிரசாதங்கள் ரூபத்தில் மேடையை அடைந்து விழா அமைப்பாளர்களுடன் வந்திருந்தவர்களுக்கும் ஆசிகளை வழங்கினர்!

வரவேற்புரை வழங்க வந்தார் கல்கி நிறுவன பதிப்பாளர், நிர்வாக இயக்குனர் கி. ராஜேந்திரன். காலை நிகழ்ச்சிகளுக்கு அழைக்கப்பட்டிருந்த அனைவரையும் வரவேற்றதுடன் கடந்த ஓராண்டுக் காலமாக கல்கி நூற்றாண்டை நிறைவான வகையில் கொண்டாடிச் சிறப்பித்த அனைவருக்கும் நன்றி தெரிவித்தார்.

முதல் நிகழ்ச்சியாக, கல்கி இதழில் நூற்றாண்டு விழாவையொட்டி நடத்தப்பட்ட போட்டிகளுக்கான பரிசளிப்பு. நிகழ்ச்சித் தலைவர் நல்லி குப்புசாமி, விழா நாயகரின் வாழ்க்கை வரலாற்றுச் சுருக்கத்தை வண்ணமயமான உரையாக வழங்கினார்.

சிறப்புரையாளர் கவிஞர் வைரமுத்து. அவர் கரங்களில் பரிசைப் பெற்று மகிழ போட்டியில் வென்ற ஆறு பேரும் வந்திருந்தனர்.

நாவல் போட்டியில் பரிசு பெற்ற தி.தா. நாராயணன்; மினி தொடர் போட்டியில் பரிசைப் பகிர்ந்து கொண்ட ஈஸ்வர், நாராயணி கண்ணகி; பயணக் கட்டுரை புகழ் புவனேஸ்வரி, இசைப் பாடலால் வாசகர்களை இளகச் செய்த மதுரபாரதி... வாசகர் போட்டியில் வென்ற மும்பை குமார் மட்டும் தாமதமாக வந்தார்! (அலுவலக வேலையாம்!) அவரை முந்திக் கொண்டு முதல் ஆளாக அரங்கில் வந்தமர்ந்திருந்த மனைவி பானுகுமார் அவர் சார்பில் பரிசையும் சால்வையையும் பெற்றுக் கொண்டார்!

இசைப் பாடல் போட்டி என்பது அமரர் கல்கிக்கு நல்லதொரு நினைவாஞ்சலியாக அமையும் என்று கருதியபோதும் அது இவ்வளவு வெற்றிகரமாக அமையும் என்று ஆசிரியர் குழுவினர்கூட எதிர்பார்க்கவில்லை! பரிசுக்குத் தேர்வான பாடலை திருமதி பாரதி திருமகன் இசையமைத்துப் பாடியபோது உரிய இடங்களில் அளித்த இடைவெளிகளும், சுத்தமான உச்சரிப்பும்,

அளவான உணர்ச்சியும் சேர்ந்து அந்த தெற்கத்திய கிராமத்துத் தாலாட்டை ஒரு சமுதாய விழிப்புணர்வு கீதமாக உயர்த்தின.

இலக்கணமானாலும், நீதி நெறியானாலும், காதலானாலும், புராணமானாலும் செய்யுள் வடிவமே கையாளப்பட்ட தமிழ் மரபில் புரட்சிகரமான மாற்றம் செய்தார் கல்கி என்பதை கவிஞர் வைரமுத்து சுட்டிக் காட்டியபோது கரவொலி உயர்ந்தது. அவர் தமது இளமைக் காலத்தில், இரவோடிரவாக சிம்னி விளக்கு வெளிச்சத்தில் பொன்னியின் செல்வனைப் படித்ததை விவரித்த போதோ அத்தனை பேரும் அந்தப் பழைய நினைவுகளில் பங்கேற்றுத் திளைத்தனர். நூலகத்தில் எடுத்துப் படிக்க வசதியில்லாததால் அவ்வாறு எடுத்தவரிடம் இரவல் வாங்கி இரவெல்லாம் படித்தாராம் வைரமுத்து. சற்றைக்கொரு முறை சிம்னி விளக்கில் படிந்த கரியைத் திருநீறு கொண்டு துடைத்து விட்டுத் தொடர்ந்ததையும் நினைவு வைத்திருந்தார் – "நான்காம் பாகம் வந்தபோது மாட்டிக் கொண்டேன்! ஓர் இரவில் அதைப் படித்து முடிக்கவில்லை..." என்று அவர் சொன்னபோது அந்தத் தவிப்பையும் தாகத்தையும் அத்தனை கல்கி ரசிகர்களும் உணர்ந்து பங்கேற்றார்கள்.

பாரதிக்கும் இறைவணக்கம் பாடிய காயத்ரிக்கும் மங்கையர் மலர் ஆசிரியர் மஞ்சுளா ரமேஷ் சிறப்புச் செய்ய, முதல் நிகழ்ச்சி நிறைந்தது.

அடுத்த நிகழ்ச்சி, அனைவரும் எதிர்நோக்கிய அமரர் கல்கி நூற்றாண்டு மலர், காற்றினிலே வரும் கீதம் கேஸட் ஆகியவற்றின் இரட்டை வெளியீட்டு விழா!

வெளியீட்டு விழா நிகழ்ச்சி தொடங்கும் முன் கல்கி இதழின் ஸ்தாபகர் திருமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி (அவர் 'சாவித்ரி' படத்தில் நடித்துப் பெற்ற சன்மானம்தான் இந்தப் பத்திரிகைக்கு மூலதனம்), விழா நாயகரின் காரியம் யாவிலும் கைகொடுத்த திருமதி ருக்மிணி கல்கி கிருஷ்ணமூர்த்தி ஆகிய இருவருக்கும் சால்வைகள் அணிவிக்கப் பட்டன. அப்போது எழுந்த கைதட்டல் தமிழக வாசகர்களுடைய அன்பின் அடையாளமாக ஒலித்தது.

எம்.ஏ.எம். ராமசாமியின் பிரதிநிதியாகத் தலைமையேற்று ரத்தினச் சுருக்கமான உரையாற்றினார் செட்டிநாடு சிமெண்ட்ஸின் எக்ஸிக்யூடிவ் டைரக்டர் சபாரத்தினம். அண்ணாமலை அரசர் தமிழிசைத் தொண்டைத் தொடங்கியபோது கல்கி தோள் கொடுத்து, பேனா கொடுத்து, உதவியதை நினைவு கூர்ந்தார்.

நூற்றாண்டு மலரையும் கேஸெட்டையும் வெளியிட்ட ஹிந்து ஆசிரியர் ரவி மிகவும் முயன்று தமிழில் உரையாற்றியது, இது ஒரு தமிழ் விழா மேடை என்று வலுவாக அங்கீகரித்தது போல் அமைந்தது. சுதேசமித்திரன் ஆசிரியர் எஸ்.ஆர். ஸ்ரீநிவாஸன் கல்கிக்கு செலுத்திய அஞ்சலியை ரவி மேற்கோள் காட்டியதும் பொருத்தமாக அமைந்தது:

''அமரர் கல்கி பொது மக்களுக்காக ஆற்றியுள்ள பங்களிப்பு குறித்து எடை போடுவது கடினமான காரியம். காரணம், அவரது எழுத்தின் பல தளங்களிலான வீச்சும், அவற்றில் இழைந்துள்ள சேவை உணர்வும் சுலபத்தில் எடை போடக் கூடியவை அல்ல" என்று எழுதினாராம் ஸ்ரீநிவாஸன்.

மலரின் முதல் பிரதியைப் பெற்றுக் கொண்ட பெங்களூர் முகவர் எஸ்.ஆர். வெங்கடாசலம் தமது மன நிறைவையும் பெருமிதத்தையும் வெளிப்படுத்த, கேஸெட்டின் முதல் பிரதி பெற்ற வயலின் வித்வான் டி.என். கிருஷ்ணன் அவ்வாய்ப்புக்கு நன்றி கூற, காற்றினிலே வரும் கீதம்' கேஸெட்டிலிருந்து இரு பாடல்கள் ஒலிபரப்பப்பட்டன.

மூன்றாவதும்

(தொடர்ச்சி 20-ம் பக்கம்)


• அவ்வை நடராஜன்


• பொன்மணி வைரமுத்து


• மோகன்


• டி.எஸ். ரங்கராஜன்


• ராகவன்







• உமாபாரதி

— டில்லியிலிருந்து ஒரு நேர்முக வர்ணனை

# வெற்றி யாருக்கு?

வட இந்தியப் பகுதிகளில் தேர்தல் களம் என்பது யுத்த களம் போல்தான் காட்சியளிக்கிறது. உ.பியில் கல்யாண்சிங் (பிற்பட்ட ஜாதி) அரசு பிடிக்காத கன்ய குப்ஜ் பிராமணர்கள் (வாஜ்பாய் சார்ந்த ஜாதி) முஸ்லிம்களுடன் சேர்ந்து அறிக்கை விடுகிறார்கள். தலித்துகளின் வோட்டு வங்கியைக் கைப்பற்றுவதற்காக கன்ஷிராம்-மாயாவதி கட்சியினர் தலித்துகளை ஆவேசப்பட வைக்கிறார்கள். முலாயம் சிங் தமது சின்னமான சைக்கிளில் வலம் வருகிறார். பீஹாரில் லாலு யானைமேல் ஊர்வலம் வருகிறார். ராகுல்-பிரியங்கா கையசைப்பதை 'வைப்பர்'(துடைப்பான்கள்) என்று மேனகா காந்தி கிண்டலடிக்கிறார். 'அருண்நேருவைத் தோற்கடித்தே தீருவேன்' என்று பிரியங்கா சபதம் செய்கிறார்... இந்த நிலையில் வெற்றி யாருக்கு என்பதைக் கணிப்பது அத்தனை சுலபமில்லை என்றாலும் விஷயங்கள் சுவாரஸ்யமாகவே நடந்து கொண்டிருக்கின்றன....



• மேனகா காந்தி

**உத்திரபிரதேசம் (மொத்த தொகுதிகள் 85. 1998 நிலவரம்– பி.ஜே.பி.57; காங்கிரஸ் 0; முலாயம் சிங் சமாஜ் வாதி கட்சி 20; கன்ஷி ராம்–மாயாவதி பகுஜன் சமாஜ் கட்சி 5; மேனகா உள்பட உதிரிகள் 3.):**

ராஜீவ் காந்தி காலத்தில் வி.வி.ஐ.பி. தொகுதியாக இருந்த அமேதி இப்போது குடிநீருக்கே அல்லாடும் நிலையில் இருப்பதால், சோனியாவின் பிரசாரம் நன்றாக எடுபடுகிறது. இவரை எதிர்த்துப் போட்டியிடும் ராஜவம்சத்தைச் சேர்ந்த (வி.பி.சிங்கின் ஒன்று விட்ட சகோதரர்) சஞ்சய் சிங், "நான் ஒரு சாதாரண ஆள். என்னை எந்த நேரமும் வந்து உங்களால் சந்திக்க முடியும். ஆனால் சோனியா காந்தியின் பாதுகாப்புப் படையினரை மீறிச் சென்று உங்களால் அவரைச் சந்திக்க முடியுமா?" என்று எதிர்ப் பிரசாரம் செய்து கொண்டிருக்கிறார். இந்தப் பிரசாரம் ஓரளவுக்கு எடுபட்டாலும், நேரு குடும்பத் தொகுதியையே வென்றும் பி.ஜே.பி. அரசால் இவருக்கு அமைச்சர் பதவியேதும் கொடுக்கப்படாததால், தொகுதிக்கு ஏதும் பெரிதாகச் செய்துவிடவில்லை. இது சோனியாவுக்குச் சாதகமாக இருக்கிறது.

ராய்பரேலி தொகுதியின் பி.ஜே.பி. வேட்பாளரான அருண்நேரு, தாம்தான் நேரு குடும்பத்தின் உண்மையான வாரிசு என்று துண்டு போட்டுத் தாண்டி சத்தியம் செய்யாத குறையாகக் கிராமங்களில் பிரசாரம் செய்கிறார். குடும்ப உறுப்பினர்களுடன் உரையாடும் போது, 'திருமண உறவின் மூலம் அந்நியர் குடும்பத்துக்குள் நுழைந்து விட்டாலும் அவர்கள் பொது வாழ்க்கைக்கு வந்துவிடக் கூடாது' என்று இந்திராகாந்தி சொல்வது வழக்கம் என்றும் சோனியா கட்சிக்கு எதிராகப் பிரசாரம் செய்கிறார்!

• லாலு பிரசாத்

இவரை எதிர்த்து நிற்கும் காங்கிரஸ் வேட்பாளரான சதீஷ் சர்மாவுக்கு ஆதரவாகப் பிரசாரம் செய்யும் பிரியங்கா, "குடும்ப விஷயங்களைச் சந்திக்கு இழுக்கும் அருண்நேருவைத் தோற்கடியுங்கள்!" என்று மேடைதோறும் முழங்குகிறார். இதனால் அருண்நேருவின் வெற்றி வாய்ப்பு தடுமாறிக் கொண்டிருக்கிறது என்றும் சொல்கிறார்கள்.

பிலிபீட் தொகுதியில் போட்டியிடும் மேனகா, தமது பிரசாரத்தில் தமது மகன் வருண்காந்தியை முன்னிறுத்துகிறார். "விதேசி நாட்டுப் பெண்ணின் விதேசி வாரிசுகளை ஆதரிப்பீர்களா அல்லது சுதேசி மருமகளின் சுதேசி வாரிசை ஆதரிப்பீர்களா?" என்று ஆவேசமாகக் கேட்கிறார்.

மூன்று தொகுதிகளில் நேரு குடும்ப வாரிசுரிமைப் போராட்டம் என்றால், லக்னோவில் அடல் பிஹாரி வாஜ்பேயின் 'வழி தனி வழி'யாக இருக்கிறது. வாஜ்பாய் ஸ்லோகங்கள் சொல்லி மக்களைக் கவர்கிறார். இவரது ஒவ்வொரு சுலோகத்துக்கும் பதில் சுலோகம் சொல்லுவதற்காகத்தான் காங்கிரஸ்



• முலாயம்சிங் யாதவ்

கட்சி கரண்சிங்கை நிறுத்தியிருக்கிறது. இவரும் வாஜ்பாயிக்கு இணையாக சமஸ்கிருதம் படித்தவர் என்பதால் தொகுதியெங்கும் சுலோகங்களின் மயம்தான்!

இவை ஒருபுறம் என்றால் உபியிலுள்ள முஸ்லிம் வோட்டு வங்கியை வளைத்துப் போட சோனியா கட்சிக்கும் முலாயம்சிங் கட்சிக்கும் கடும்போட்டி. "பாபர் மசூதியின் கதவைத் திறந்தது காங்கிரஸ்; உடைத்தது பி.ஜே.பி." என்று பிரசாரம் செய்கிறார் முலாயம் சிங். "மதவாத பி.ஜே.பிக்கு மாற்று அரசாகக் காங்கிரஸ் வரவிருந்ததைக் கெடுத்துத் துரோகம் செய்தவர் முலாயம்!" என்று பதில் பிரசாரம் செய்கின்றனர் சோனியா கட்சியினர்.


• மாயாவதி


• கன்ஷிராம்

இந்த நிலையில், "அரசியலில் ஸ்திரத் தன்மையே கூடாது!" என்று பகிரங்கமாகப் பிரசாரம் செய்து வோட்டுக் கேட்கிறார் கன் கன்ஷிராம்- மாயாவதி கோஷ்டியினர். தலித் வோட்டுகளின் தனி சக்தியாகவே விளங்குவதால், "இம்முறை இன்னும் சில கூடுதல் இடங்களை வெல்வோம்!" என்று நம்மிடம் சொன்னார் கன்ஷிராம்.

ஆக, உ.பியைப் பொறுத்த வரை பி.ஜே.பி. தனது 57 இடங்களைத் தக்க வைத்துக் கொண்டு, பிறகு அதிகம் ஜெயிக்க வேண்டும். காங்கிரஸ் சென்ற தேர்தலில் ஜீரோ என்பதால் இப்போது ஒரு இடத்தில் வென்றாலும் அது அவர்களுக்கு வளர்ச்சிதான். சிறுபான்மையினர் வோட்டு தங்களுக்கு எப்போதுமே இல்லையென்பதால், தங்களுக்கே வெற்றி என்கின்றனர் பி.ஜே.பியினர்.

**பீஹார் (மொத்த தொகுதிகள் 54. '98 நிலவரம்– பி.ஜே.பி. அணி 30; லாலு கட்சி 17; காங்கிரஸ் 7):**

இப்போது பி.ஜே.பியுடன் சமதா கட்சியும் இணைந்த ஜனதா தளமும் சேர்ந்து விட்டதால் 'ஏழைகளின் தலைவன்' லாலுவுக்குக் கொஞ்சம் சிரமமாகிவிட்டது. முன்பெல்லாம் பசுமாட்டில் பால் கறந்து கொண்டே ஜெயித்துக் கொண்டிருந்தவர், இந்தத் தேர்தலில் யானை மீது ஏறி சர்க்கஸ் வித்தைகாட்ட வேண்டியிருக்கிறது.

லாலுவின் நூதனப் பிரசாரமே கலகலப்பானது. கூட்டம் தொடங்கும்வரை ஒழுங்காக இருப்பார். கூட்டம் தொடங்கியதும் திடீரென்று ஒரு பிடி கடுகெண்ணெய்யை எடுத்துத் தலையில் தேய்த்துக் கொள்கிறார். சமயத்தில் ஒரு பிடி மண்ணை எடுத்தும் முகத்தில் பூசிக் கொண்டு, "நான் உங்களில் ஒருவன்!" என்று மக்களைக் கவர்கிறார்!

ஜன்தா தல்(ஹிந்தி உச்சரிப்பு) என்பதை "ஜந்து தல்" (பூச்சிகளின் தளம்) என்று இவர் கேலி செய்யும் போது கூட்டத்தில் சிரிப்பு வெடிக்கிறது.

இருந்தாலும் "மாடுகளின் உணவைக்கூட தாம் தின்று கொழுத்தவர்!" என்று எதிரணியினர் செய்யும் பிரசாரமும் எடுபடத்தான் செய்கிறது. த்ருவகுமார் என்கிற மனித உரிமை இயக்கத்தைச் சேர்ந்த இளைஞர் ஒருவர், கழுதைகள், எருமை மாடுகள், பன்றிகள் என்று சகல விதமான பிராணிகளையும் ஊர்வலமாக ஓட்டிச் சென்று, அவற்றின் கழுத்தில், "எங்கள் உணவை லாலு தின்றுவிட்டார். எங்களுக்குப் பசிக்கிறது. பிச்சை போடுங்கள்" என்று எழுதப்பட்ட அட்டைகளை மாட்டிவிட்டு ஒரு புரட்சியே செய்து லாலுவைக் கலக்கி விட்டார்!

ஆனாலும், "ஜப் தக் ரஹேகா சமோசா மே ஆலு! தப் தக் ரஹேகா பீஹார் மே

லாலு!" (சமோசாவில் உருளைக் கிழங்கு இருக்கும்வரை பீஹாரில் லாலு இருப்பார்!) என்று லாலுவின் தர்பார் கவிஞர்கள் பாடிக் கொண்டிருக்கிறார்கள். இதன் காரணமாகத் தான் வெறும் 14 தொகுதிகளுக்காக லாலுவுடன் கூட்டணி சேர்ந்திருக்கிறது சோனியா கட்சி.

**ராஜஸ்தான் (மொத்த தொகுதிகள் 25. 98–நிலவரம்–காங்கிரஸ் 18; பி.ஜே.பி.5; உதிரிகள் 2):**

இங்கே கார்கில் பிரச்னை; வாஜ்பாயின் இமேஜ், சோனியா அந்நியர் என்கிற பிரச்னைகளெல்லாம் எடுபடவில்லை. ஜாட் ஜாதிக்கு இட ஒதுக்கீடு என்கிற பிரச்னைதான் பெரும் பிரச்னையாக இருக்கிறது.

சோனியா கட்சியின் முதல்வரான அஷோக் கெஹ்லாட் இட ஒதுக்கீட்டுப் போராட்டக்காரர்களுக்கு ஆதரவு கொடுத்தால்தான் வெற்றி பெற முடியும் என்று நினைத்தார். அதன் படியே வெற்றியும் பெற்று ஆட்சிக்கும் வந்து விட்டார். இப்போது இதுவே சோனியா கட்சிக்குப் பெரும் எதிரலையை உருவாக்கியிருக்கிறது. "பிரச்னை சரியாகக் கையாளப்படவில்லை என்பது உண்மைதான். இதனால் சில இடங்களில் பாதிப்பிருக்கும் என்பதும் உண்மை!" என்று சோனியா கட்சித் தலைவர்களில் ஒருவரான ராஜேஷ்பைலட் பகிரங்கமாகவே ஒப்புக் கொள்கிறார். எனவே, இத்தேர்தலில் பி.ஜே.பி. சிறிது முன்னேறும் என்று பலரும் கருதுகிறார்கள்.



• ப்ரியங்கா - சோனியா

**மத்திய பிரதேசம் (மொத்தம் 40. '98–நிலவரம்–பி.ஜே.பி. 30; சோனியா கட்சி 10):**

உமாபாரதிக்கு போபால் தொகுதி கொடுக்கப்பட்டதில் பி.ஜே.பி.க்குள் ஏக எதிர்ப்பு. குஷாபாவ் தாக்கரே கூறிய வேட்பாளரைப் புறந்தள்ளிவிட்டு, அத்வானி கோஷ்டி உமாபாரதியை நிறுத்தியதில் கோஷ்டிப் பூசல் அதிகரித்து விட்டது. அதனால் சில தொகுதிகளில் பி.ஜே.பி.யினர் முழுமையாக வேலை செய்யவில்லை.

இதற்கிடையில் கன்ஷிராம்–மாயாவதி கட்சி இங்குள்ள தலித்களின் எட்டு சதவிகித வாக்கு வங்கியை வைத்துக் கொண்டு பி.ஜே.பி.யையும் சோனியா கட்சியையும் சேர்த்து மிரட்டிக் கொண்டிருக்கிறது. அதாவது இந்த எட்டு சதவிகித வாக்கு பிரிவதால் சில இடங்களில் பி.ஜே.பியின் வெற்றி வாய்ப்பும் சில இடங்களில் சோனியா கட்சியின் வெற்றி வாய்ப்பும் பாதிக்கப்படும் என்கிற நிலை.

• அருண்நேரு



• கரண்சிங்



**— டெல்லி வெங்கட்**

படங்கள். **சௌந்தர்ராஜன்**

## — சி.பி.எம். பொதுச் செயலாளர் ஹர்கிஷன் சிங் சுர்ஜித்தின் தலைமறைவு அனுபவம்

# முந்நூறு போலீஸ்; முதுகிலே

**முக்கால் செஞ்சுரி போட்ட முதுபெரும் அரசியல் தலைவர் ஹர்கிஷன் சிங் சுர்ஜித். இந்திய கம்யூனிஸ்ட் (மார்க்சிஸ்ட்) கட்சியின் பொதுச் செயலாளர். விடலைப் பருவத்தில் கம்யூனிஸ இயக்கத்துக்கு வந்தவர். தள்ளாத வயதிலும் தளராமல் அரசியலில் ஆக்டிவ்வாக இருப்பவர். அண்மையில் சென்னை வந்திருந்தபோது, தி. நகரில் உள்ள கட்சி அலுவலகத்தில் ஓய்வெடுத்தபடியே, 'கல்கி'க்கு பிரத்யேக பேட்டியளித்தார். தொகுப்பு :**

"கூட்டணி ஆட்சி என்பது கல்கத்தாவில் வெற்றிகரமாகச் சாத்தியப்படுகிறது; ஆனால் தில்லியில் நிலைக்காமல் போகிறதே! இதற்கு அடிப்படைக் காரணம் என்ன?"

"மே. வங்காளத்தைப் பொறுத்தவரை, தனிப்பட்ட பெரிய கட்சி மார்க்சிஸ்ட் கட்சி. எங்களுடன் ஒத்த கொள்கைகள் கொண்ட கட்சிகளைக் கூட்டணி சேர்த்துக் கொண்டு, தேர்தலில் போட்டியிட்டு, வென்று, ஆட்சி அமைத்து வருகிறோம். ஆட்சியைப் பிடித்தவுடன், ஆட்சியின் மூலமாக எங்கள் கொள்கைகளை, வாக்குறுதிகளை செயல்படுத்துகிறபோதே, கட்சியையும் பலப்படுத்தி வருகிறோம். எனவே, அன்று முதல், இன்று வரை உழைக்கும் வர்க்கத்தினரின் ஆதரவைப் பெற்ற கட்சியாக எங்கள் கட்சி விளங்குகிறது. ஆனால், மத்தியில் அமைகிற கூட்டணி ஆட்சிகள் இப்படி அமைவதில்லை. எனவே முழு காலத்தையும் பூர்த்தி செய்யாமல், சீக்கிரமே கவிழ்ந்து விடுகின்றன."

"மே. வங்காளத்தைப் பொறுத்தவரை, 22 வருட கம்யூனிஸ்ட் ஆட்சிக்கு, ஜோதிபாசு என்கிற தனிமனித செல்வாக்குத்தானே முக்கியக் காரணம்? அவர் ஓய்வு பெற்றபின், பாதிப்பு ஏற்படுமல்லவா?"

"ஜோதிபாசு மிகச் சிறந்த நிர்வாகி. அவருக்கு மே. வங்காளத்தில் பெரும் செல்வாக்கு உண்டு என்பதெல்லாம் உண்மைதான். ஆனால், அது மட்டுமே காரணமில்லை. நிலச் சீர்திருத்தம் என்கிற கொள்கையை மார்க்சிஸ்ட் அரசாங்கம் அங்கே செயல்படுத்தியது. இதன் மூலம் நிலமற்ற ஏழைகள் பலருக்குக் கொஞ்சம் நிலம் கிடைத்தது. இந்தியாவின் வேறு எந்தப் பகுதியிலும் அந்த அளவுக்கு நிலச்சீர்திருத்தம் சிறப்பாக செயல்படுத்தப்படவில்லை. ஆக, மார்க்சிஸ்ட் கொள்கைகளை, திட்டங்களை, அவர் சிறப்பாக நிறைவேற்றினார் என்று குறிப்பிடலாம்."

"ஐக்கிய முன்னணி ஆட்சியை நீங்கள் ரிமோட்கண்ட்ரோலில் வைத்திருந்தீர்கள். ஆனால், மத்திய அமைச்சரவையில் பொறுப்பேற்க வாய்ப்பு வந்தபோதும் சரி, ஜோதிபாசுவை பிரதமர் ஆக்கும் பேச்சு வந்தபோதும் சரி, உங்கள் கட்சி அதை நிராகரித்ததேன்?"

"அமைச்சரவையிலும், பிர



தமராகவும் பொறுப்பு அளிக்க முன்வந்தார்கள். ஆனால், எங்களின் பலம் என்ன? எங்களால், எந்த அளவுக்கு, எங்கள் கொள்கைகளை நிறைவேற்ற அந்தச் சூழ்நிலை உதவும்? நாங்களும்



பங்கேற்றோம் என்று சும்மா பேர் பண்ண லாம் என்கிற சூழ்நிலையில், பொறுப்பேற்பது அர்த்தமில் லாதது. எனவே மறுத்து விட் டோம். அதில் எங்களுக்கு வருத்தம் ஏதுமில்லை."

"ஆனால், சி.பி.ஐ. கட்சி, அந்த வாய்ப்பை ஏற்றுக் கொண்டதே!

"அவர்கள் ஏற்றுக் கொண்டது வாஸ்தவம். ஆனால், அவர்களுடைய

# பியானோ!

அந்த முடிவின் மூலமாக அந்தக் கட்சிக்கு மக்கள் மத்தியில் செல்வாக்கு கூடிய தாக நான் நினைக்கவில்லை. இதற்கு மேல், தேர்தல் நேரத்தில், இன்னொரு கம்யூனிஸ்ட் கட்சி பற்றி நான் விமர்சிக்க விரும்ப வில்லை."

"மே. வங்காளத்தி லும், கேரளாவிலும் காங்கிரசை எதிர்ப்பது, மற்ற பகுதிகளில் அவர்களுடன் கூட்டணி அமைத்துக் கொள் வது. ஏன் இந்த முரண்பாடு?"

"மே. வங்காளத்திலும், கேரளாவிலும், எங்களுடைய நேரிடையான எதிர்க்கட்சி, காங்கிரஸ்தான். எங்கள் கொள் கைகளை எதிர்ப்பவர்கள் அவர்கள். ஆனால், மற்ற பகுதி களில் எங்களுக்கு அவ்வளவு பலம் இல்லை. இரண்டு பேரும் சேர்ந்து, பொது எதிரியான பி.ஜே.பி.யை எதிர்க்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டுள்ளது."

"பி.ஜே.பியை எதிர்க்க வேண்டும் என்ப தற்காக, உங்கள் கொள்கைகளை ஒதுக்கி வைத்து விட்டு, யாரை ஊழல் பெருச்சாளி கள் என்று கடுமையாய் விமர்சனம் செய்தீர் களோ அதே லாலு பிரசாத், ஜெயலலி தாவுடன் கூட்டு சேருவது என்பது சந்தர்ப் பவாதம் இல்லையா?"

"இன்றுள்ள சூழ்நிலையில், நாட்டுக்கு பெரும் ஆபத்து பி.ஜே.பி.தான். மாநிலங்களில் ஆட்சியைப் பிடிப்பது என்றாலாவது பரவாயில்லை. மத்தியில் ஆட்சி யைப் பிடிக்குமளவுக்கு அவர்கள் வளர்ந்து விட்டார்கள். இது நாட்டுக்கு அபாயமானது. அதைத் தடுக்க வேண்டி யதுதான் இப்போது முக்கியமானது. நாடெங்கும், பி.ஜே.பி.யை எதிர்ப்பதில் யார் யாருக்கு முக்கிய பங்கு உள் ளதோ அவர்களுடன் கைகோத்துக் கொண்டு, பி.ஜே.பி.யை எதிர்ப்பது மிகவும் அவசியமாகியுள்ளது."

"ஜெயலலிதா, எந்த இரண்டு காரணங்களுக்காக, பி.ஜே.பி.

அரசுக்கு அளித்து வந்த ஆதரவை விலக்கிக் கொண்டு, ஆட்சியைக் கவிழ்த்தார், இப்போது எதிர்க்கிறார் என்பது நீங்கள் அறியாததா?"

"அது பற்றி எனக்குத் தெரியாது."

"ஜெ. மீது உள்ள ஊழல் வழக்குகள்- அவற்றை நேருக்கு நேர் சந்திக்காமல் அவர் போடும் முட்டுக்கட்டைகளைக் கண்டித்து உங்கள் கட்சிப் பத்திரிகையான தீக்கதிரே எழுதியுள்ளதே!"

"ஊழல் வழக்குகளைப் பொறுத்த வரை, யாரும், யாரையும் விடுவித்து விட முடியாது என்பது இப்போது புரிந்திருக்குமே! வழக்குகள் நிருபணமானால், சம்பந்தப்பட்டவர்கள், கோர்ட் தீர்ப்புகளை ஏற்றுக் கொள்ளட்டும்."

"தாராளமயமாக்குதல், உலகளாவிய பொருளாதாரம் என்று ஆகிவிட்ட இன்றைய காலகட்டம், கம்யூனிஸ்ட்டுகளுக்கு ஒருவித தர்மசங்கடத்தை ஏற்படுத்தியிருக்கிறதல்லவா? தாராளமயமாக்கலைத் தடுத்து நிறுத்தவும் முடியவில்லை; ஏற்றுக் கொள்ளவும் மனமில்லை. அப்படித்தானே!"

"அயல்நாட்டு மூலதனம் இந்தியாவுக்கு வரவேண்டும்; அதனால் இந்தியப் பொருளாதாரம் முன்னேற வேண்டும் என்பது எங்களுக்கும் ஏற்புடையதுதான். ஆனால், இங்கே வரும் பன்னாட்டு கம்பெனிகள், அடிப்படை வசதிகள் மேம்பாட்டுத் துறை (infrastructure development) யில் முதலீடு செய்யத் தயங்குகின்றனவே! நம் அரசாங்கமும், அரசுத் துறைகளைத் தனியார்மயமாக்குவதில்தான் ஆர்வம் காட்டுகின்றன. இவை, எதிர்காலத்தில், பொருளாதாரத்தை சின்னா பின்னப் படுத்தி விடும். இதற்கு இலத்தீன் அமெரிக்க நாடுகளை உதாரணம் கூறலாம். கம்யூனிஸ்ட் (மார்க்சிஸ்ட்) கட்சி, இதை எதிர்த்துக் கொண்டிருக்கிறது - ஸ்பீடு பிரேக்கர் போல - இதனால் அடுத்த சில வருடங்களுக்கு ஆபத்து இல்லை என்று சொல்ல முடியும்."

"நீங்கள் இத்தனை வருடம் அரசியலில் இருந்தும், தேர்தலில் போட்டியிடுவதில்லையே ஏன்?"

"இப்போதுள்ள கட்சிப் பொறுப்பே மிகப் பெரியது. இதுதான் தேர்தலில் போட்டியிட்டு, அரசியல் பணியாற்றுவதை விட முக்கியமானது என்பது என் கருத்து. இந்த மாபெரும் இயக்கத்தை வழிநடத்திச் செல்வது என்பது அத்தனை சுலபமான பணியா என்ன? எனவேதான் ஐம்பதுகளின் துவக்கத்திலேயே தேர்தல், பாராளுமன்றம் எல்லாம் வேண்டாம் என்று ஒதுங்கி, கட்சிப் பணியிலேயே முழுமையாக என்னை ஈடுபடுத்திக் கொண்டு விட்டேன்."

"சிறு வயதிலேயே, கம்யூனிஸ இயக்கத்துக்கு வந்து விட்டவர் நீங்கள். உங்களை வரத் தூண்டியது எது?"

"நான் கம்யூனிஸ இயக்கத்தில் ஊறிய குடும்பத்தில் பிறந்தவன். இயக்கத் தலைவர்கள் பலர் எங்கள் வீட்டுக்கு வந்து தங்கியது உண்டு. சிறு வயதிலேயே கட்சிப் பிரசுரங்களைப் படித்து, கவரப்பட்டிருக்கிறேன். இத்தகைய சூழலில் பிறந்து வளர்ந்த நான், கம்யூனிஸ இயக்கத்துக்கு வராமல் போயிருந்தால்தான் ஆச்சரியம்."

"கம்யூனிஸ இயக்கத்தில் பல சமயங்களில் தலைமறைவு வாழ்க்கை நடத்த வேண்டியிருந்திருக்கும். அந்த அனுபவங்களில் மறக்க முடியாத ஒன்று சொல்லுங்களேன்."

"1940-ம் வருடம் என்று நினைக்கிறேன். பிரிக்கப்படாத இந்தியாவில் பஞ்சாபில் நான் வசித்தேன். தலைமறைவு வாழ்க்கை. போலீஸ் என்னை எப்படியும் பிடித்து விடத் துடித்தது. ஒருநாள் உள்ளூர் போலீசுக்குக் கூடத் தகவல் தராமல், லாகூரிலிருந்து சுமார் முந்நூறு போலீஸ்காரர்கள், எங்கள் ஊரைச் சுற்றி வளைத்துக் கொண்டு விட்டனர். எனக்குத் தகவல் கிடைத்தது. தப்பிப் போக வேண்டும். ஆனால் ஊரைச் சுற்றி போலீஸ் வளையம். ஆனாலும், அந்த போலீஸ் வளையத்தைத் தாண்டிச் சென்றது, மறக்க முடியாத அனுபவம். எப்படித் தப்பித்தேன் என்ற ரகசியத்தை இப்போது சொல்லட்டுமா? சீக்கியர் அடையாளமான தலைமுடி, தாடியை நீக்கி விட்டிருந்தேன். ஊருக்குள் ஒரு பழைய பியானோவைத் தேடிப் பிடித்து, அதை முதுகில் சுமந்து கொண்டு, அப்பாவி இசைக் கலைஞன் போல, போலீசாரை நோக்கிச் சென்றேன். அவர்கள் என்னை அடையாளம் தெரியாமல், யார் என்று விசாரித்தனர். நான் பியானோ கலைஞன் என்றதும், அவர்களும் நம்பி விட்டனர்! என்னை ஊருக்கு வெளியே போக அனுமதித்தனர். நான் தப்பித்து விட்டேன்! இது போல ஏகப்பட்ட அனுபவங்கள். சிறை அனுபவங்களும் ஏராளம்!"

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

மதுரை வடக்கு வெளி வீதியிலுள்ள ஒரு ஸ்வீட் ஸ்டாலின் பெயர்: "நான்தான் சந்தோஷமான மனிதர் அல்வாக் கடை." பார்த்து எழுதியவர்: திசைமுத்து



# ஜோடி

**நா**யகன் பிரசாந்த். நாயகி சிம்ரன். படத்தின் பெயர் 'ஜோடி'. அப்புறமென்ன இருவரும் ஜாடிக்கேத்த மூடி மாதிரி, காத லித்து ஜோடி சேர்கிற 'டிட்டோ' கதை. பெற்றோரின் சம்மதத்துடன்தான் ஜோடி சேர்வது என்ற சங்கல்பத்தோடு சிம்ரன், பிரசாந்த் வீட்டுக்கும் பிரசாந்த், சிம்ரன் வீட்டுக்கும் (நற்பெயரெடுக்க!) போவது 'உபகதை'. உப கதை 'பூவெல்லாம் கேட்டுப் பார்' படத்தை நினைவூட்டினாலும் 'ட்ரீட் மெண்ட்' புதுசு.

காதல் படமா? கதாநாயகனுக்குக் குறைந்தபட்சம் மூன்று நண்பர்களாவது இருக்க வேண்டும் என்பதும், அவர்கள் 'காமெடி' கடி வசனங்களை மென்று துப்ப வேண்டும் என்பதும் எழுதப்படாத விதி யாகி விட்டது. இந்தப் படமும் இதற்கு விதிவிலக்கில்லை. தாமுவும், கூட்டாளி களும் அடிக்கிற கடி ஜோக் நாராசம்.

ஜோக்கை விட சந்தர்ப்பத்துக்குத் தகுந்த மாதிரி(!) இவர்கள் அடிக்கிற கமெண்ட்தான் எரிச்சல். உதாரணத்துக்கு ஒன்று: இசைக் கல்லூரியில் படிக்கும் சிம்ரனை பிரசாந்த் விரட்டி விரட்டி காதலித்துக் கொண்டிருக்க, கல்லூரியின் பிரின்சிபால் அம்பிகா, பிரசாந்த்தைக் காதலிக்கிறார். இதையாவது சகித்துக் கொள்ளலாம். இதற்கு தாமு, "பழம் நழுவி பால்ல விழும்பாங்க, உனக்கு பால் பூத்ல விழுந்துருச்சுடா" என்று கமெண்ட் அடிக் கிறார்!

வழக்கமான கதை என்பதால் வழக்க மான நடிப்பு பிரசாந்துக்கு. டான்ஸ், கண் கலங்கல் என்று பார்த்துப் பழகிப் போன பழைய பிரசாந்த். என்றாலும், சண்டைக் காட்சிகளில் மனிதர் ஒரு கலக்கு கலக்கு கிறார் பாருங்கள், தியேட்டரில் விசில் பறக்கிறது. படம் முழுக்க மீசை இல்லாமல் வருகிற பிரசாந்த், டூயட் காட்சிகளில் மட்டும் ஏன் கருகருவென மீசை வைத்துக் கொள்கிறார்? இயக்குனருக்கோ மேக்-அப் காரருக்கோ ஏதாவது வேண்டு தலா?

ரசிகர்களுக்கு ஜுரம் வரு வதற்காகவே சிம்ரன் பாடல் காட்சிகளில் விதவிதமான கலர் உடைகளில் நடனமாடு கிறார். கூடவே கொஞ்சம் நடிக்கவும் செய்கிறார்.

ரொம்ப நாள் சினிமாவுக்கு 'லீவ்' போட்டுவிட்டு, 'ரீ-ஜாய்ன்' பண்ணியிருக் கும் ரமேஷ் அரவிந்திற்கு இதில் கௌரவத் தோற்றம். அருமையான ஒரு பாடல் காட்சியில் ரசிக்கிற மாதிரி, உறுத்தாமல் நடித்திருக்கிறார்.

இன்னும் கொஞ்ச நாளைக்காவது 'டாப்டென்', 'சூப்பர் சிக்ஸ்', 'கவுண்ட்வுன்' முதலிய தொலைக்காட்சி நிகழ்ச்சிகளில், திரும்பத் திரும்பக் காட்டப் போகிற ஒரு பாடலை இனிமையாக இசைத்திருக்கிறார் ஏ.ஆர். ரகுமான். இசைக்கு வைரமுத்து வின் கவிதை வரிகள் மிகவும் உதவியிருக் கிறது.

இடைவேளை வரை நத்தை மாதிரி ஊர்கிற திரைக்கதை, இடைவேளைக்குப் பிறகு எடுப்பது ஜெட் வேகம். புதுப்படம் தான் என்றாலும், எல்லாவற்றையும் எங் கேயோ பார்த்த மாதிரி ஒரு பிரமை.

— கே.பி.எஸ்.






1999 செப்டெம்பர் 26
பிரமாதி புரட்டாசி 9
மலர் : 58
இதழ் : 9

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## பண்டிகையா? பலப்பரீட்சையா?

விநாயக சதுர்த்தியையொட்டி கன்னியாகுமரி மாவட்டத்தில் எழுந்த கலவரத்தை முளையிலேயே கிள்ளி ஒடுக்கிய காவல் துறையினரும் மாவட்ட ஆட்சித் தலைவரும் பாராட்டுக்குரியவர்கள்.

ஊர்வலமாக எடுத்துச் செல்லப்படவிருந்த விநாயகர் சிலைகளை ஒரு குறிப்பிட்ட இடத்தில் வைக்கக்கூடாது என்று திருவட்டாறு பகுதியில் ஆட்சேபணை எழுந்திருக்கிறது. அதைத் தொடர்ந்து, காவல் துறையினர் தலையிட்டு, ஊர்வல அமைப்பாளர்களின் சம்மதத்துடன் சிலைகளை இடம் மாற்றியிருக்கிறார்கள். ஆனால், சிலைகள் விரைவிலேயே பழைய, பிரச்னைக்குரிய இடத்துக்கு மீண்டும் வந்து விட்டன!

ஆட்சேபித்தவர்கள் உணர்ச்சிவசப்பட, இருதரப்பினரும் வன்முறையில் ஈடுபட்டிருக்கிறார்கள். அமளியில் சில சிலைகள் காணாமல் போயிருக்கின்றன. சிலைகளைத் 'திருடியதாக'க் கருதப்பட்ட ஓர் இளைஞர் தாக்கப்பட்டு, மருத்துவமனையில் இறந்து போயிருக்கிறார்.

இறந்துபோன கிறிஸ்தவ இளைஞருக்கும் சிலைத் திருட்டுக்கும் தொடர்பே இல்லை என்பது மட்டும் உறுதிசெய்யப்பட்டிருக்கிறது. தங்கள் பிடிவாதத்தைக் கைவிடத் தயாராயில்லாத இருதரப்பினரின் கண்மூடித்தனத்தினால் அப்பாவி உயிர் பலியாகியிருக்கிறது.

இருதரப்பு வன்முறையாளர்களையும் கைது செய்ததன் மூலம் காவல் துறை நடுநிலைமை காத்திருக்கிறது.




வினாயக சதுர்த்தி ஊர்வலங்களின் விஸ்தாரமும் விதரணையும் ஆண்டுதோறும் பெருகி வருகின்றன. ஆனால் அவை பக்தியின் வெளிப்பாடு என்பதைக் காட்டிலும் ஹிந்து அமைப்புகளின் 'பராக்கிரமத்தைப்' பறைசாற்றும் முயற்சியாகவே அமைந்து வருகின்றன.

பிற மதங்களின் எதிர்ப்பையும் கலவரத்தையும் தூண்டுகிற இந்த அணுகுமுறையை மாற்றி வினாயக சதுர்த்தியை ஓர் ஆக்கபூர்வமான நிகழ்ச்சியாக உயர்த்தும் கடமை ஹிந்து மதத் தலைவர்களுக்கு இருக்கிறது.

வீட்டுக்குள் நடந்து வந்த வழிபாட்டை வீதியில் பொது நிகழ்ச்சியாக்கியவர்கள் அதற்குரிய பொறுப்பையும் வெளிப்படுத்த வேண்டும்.

கன்னியாகுமரி மாவட்டம், திருவட்டாறு பகுதியில் நிகழ்ந்த வன்முறைக்கு இதுவரை எந்த மதத் தலைவரும் கண்டனம் தெரிவிக்கவில்லை என்பது கவலைக்குரிய விஷயம்.

## வெற்றிகரமாய் வாபஸ் வாங்கிய தேர்தல் கமிஷன்!

உச்சநீதி மன்றத்தின் ஆணைக்குத் தலைவணங்கி, தேர்தல் கமிஷன் அபிப்பிராய வாக்கெடுப்புகள் குறித்த வழிகாட்டு நெறிகளையே வாபஸ் வாங்கி விட்டது!

தேர்தல் நடைபெற்றுக் கொண்டிருக்கையில் அபிப்பிராய வாக்கெடுப்பு, கருத்துக் கணிப்பு முடிவுகள் போன்றவை வெளியானால் வாக்காளர்களின் சிந்தனைப் போக்கை அவை திசை திருப்பக்கூடும்; தேர்தல்கள் நியாயமாக நடைபெறாது என்பது தேர்தல் கமிஷனின் கவலை.

இந்தக் கவலை காரணமாக, தகவல் தொடர்பு சாதனங்களைத் தமது வழிகாட்டு நெறிகள் மூலம் கட்டுப்படுத்த முயற்சி செய்தது தேர்தல் கமிஷன்! தேர்தல் முடிகிற வரை அபிப்பிராய வாக்கெடுப்பு முடிவுகள் அறிவிக்கப்படக்கூடாது என்று தடைவிதித்தது. இதை எதிர்த்து




உச்சநீதிமன்றத்தில் மனு செய்தன சில பத்திரிகை நிறுவனங்கள்.

உச்சநீதி மன்றம், அம்மனுவை ஏற்று, தேர்தல் கமிஷனின் நடவடிக்கை அத்துமீறிய செயல் என்று விமர்சித்தது. தேர்தலின் போது கடைப்பிடிக்க வேண்டிய வழிகாட்டு நெறிகளை தேர்தல் கமிஷன் சிபாரிசுதான் செய்யலாமேயொழிய சட்டபூர்வமாக அவற்றை அமுல்படுத்த முடியாது என்று தெளிவுபடுத்தியது.

இந்தத் தீர்ப்புக்காகவே காத்திருந்தது போல் தேர்தல் கமிஷன் தடையை நீக்கியதோடு, இது தொடர்பான சிபாரிசுகளையும் வாபஸ் பெற்று விட்டது!

அபிப்பிராய வாக்கெடுப்பு புள்ளிவிவரங்கள், வாக்காளர்களை பாதிக்கின்றனவா? எந்த அளவுக்கு? என்பது பற்றி நாடு தழுவிய விவாதம் தேவை என்ற கருத்தை கமிஷன் வெளியிட்டுள்ளது.

இதனை மறுப்பதற்கில்லை என்றாலும், பொதுத் தேர்தல் நடத்தப்படும் முறை குறித்தும் அதனை இன்னும் குறுகிய காலத்தில் நடத்தி முடித்து முடிவுகளை விரைவில் அறிவிக்க என்ன முயற்சிகள் மேற்கொள்ள வேண்டும் என்பது பற்றியும் நிபுணர்கள் விவாதித்து முடிவுக்கு வருவதே அதிக உபயோகமாயிருக்கும்.

தொழில்நுட்ப வசதிகள் பெருகிவிட்ட சாடிலைட் யுகத்தில், உலகின் ஒரு மூலையிலிருந்து மறு மூலைக்குச் செய்திகளும் கருத்துக்களும் நொடியில் பரவி விடும். அவற்றுக்குத் தடைபோடுவது குறித்து யோசிப்பது காற்றுக்கு வேலி போடுவது போல்தான்.

அதே தொழில்நுட்ப பலத்தைக் கொண்டு, தேர்தல் நடத்தும் முறையை விரைவானதாகவும் ஏமாற்றுவதற்கு வழியின்றியும் சீர்செய்ய முயற்சி மேற்கொள்ள வேண்டும். தேர்தல் கமிஷனின் முழுக்கட்டுப்பாட்டில் உள்ள இந்த அம்சத்தில் தீவிர கவனம் செலுத்தப்பட்டால், தேர்தல் முறையில் மட்டுமின்றி அரசியல் நிலைக்களனிலும் புரட்சிகரமான நல்ல மாற்றங்கள் உருவாக வாய்ப்பு இருக்கிறது. ○

(7-ம் பக்கத் தொடர்ச்சி)

காலை நிகழ்ச்சிகளுள் இறுதியானதுமான நூல்கள் வெளியீட்டு விழாவுக்குத் தலைமைப் பொறுப்பு ஏவி.எம். சரவணன். ஏவி.எம்மின் 'வாழ்க்கை' படத்தைப் பாராட்டிய கல்கி, கதாநாயகி வைஜயந்தி மாலாவின் படத்தை அட்டையில் வெளியிடாமல் ஏவி. மெய்யப்பச் செட்டியாரின் படத்தை வெளியிட்டதை நினைவு கூர்ந்து வாழ்த்தினார் சரவணன்.

வானதி பதிப்பகம் கல்கி நூற்றாண்டு வெளியீடாகத் தயாரித்துள்ள 'கல்கி களஞ்சியம்', பெங்குவின் நிறுவனம் வெளியிட்டிருக்கும் தேர்ந்தெடுத்த கல்கி சிறுகதைகளின் மொழி பெயர்ப்பு - இரு நூல்களையும் வெளியிட்டவர் இந்தியன் வங்கித் தலைவர் டி.எஸ். ராகவன். தாம் தனிமையில் பூனாவில் இருந்த காலத்தில் பொன்னியின் செல்வன் உறுதுணையாக இருந்ததைச் சொன்னார். தொகுப்பு நூலையும் மொழி பெயர்ப்பையும் வரவேற்றார்.

கல்கி கடலிலிருந்து ஒரு சிறு களஞ்சியத்தை மட்டும் தொகுக்கும் முயற்சியை மேற்கொண்ட டி.எஸ். ரங்கராஜன் தமது பணி "பூ தொடுக்கும் வேலைதான்" என்ற போதிலும் எண்ணூறு பக்கங்கள் கொண்ட அந்த நூலைப் பூச்சரம் என்று சொல்வதைக் காட்டிலும் மலர்மாலை என்பதே பொருத்தம்.

## படத்தில் ஊழலா!

ஒரிசா முதல்வர் கிரிதர் கோமாங் படத்தை அரசு அலுவலகங்களில் வைக்க முடிவானது.



ஒரே ஒரு உருவப் படத்திற்கு கிட்டத்தட்ட 5000 ரூபாய் ஆகிறது! நூற்றுக் கணக்கில் ஆர்டர் கொடுக்கப்பட்டு, முதல் தவணையாக 16 படங்கள் வந்து விட்டன. 16 படங்களுக்கான பில் ரூ. 70,000/- தான்!. இந்தப் படங்களைத் தயாரிக்க நூற்றுக்கணக்கானவர்கள் ஒரிஸ்ஸாவிலேயே இருந்த போதும் டெல்லியிலுள்ள நிறுவனத்திற்கு ஆர்டர் கொடுக்கப்பட்டது. காரணம் நிறுவன அதிபர் கோமாங்கின் சொந்தக்காரர் என்பதுதான்!

நன்றி: மிட்டே
— மன்மதன்

"மொழி பெயர்ப்பே விரயம்; 'கொட்டு முரசே' என்பதை ஆங்கிலத்தில் ஆக்க முடியுமா? - மொழி பெயர்ப்பில் உணர்வை முற்றும் கொண்டு வர முடியவே முடியாது!" என்று சர்ச்சையில் தொடங்கினார் நூல்களைப் பெற்றுக் கொண்ட சோ! சிந்தனையைத் தூண்டும் ஓர் ஆலோசனையையும் வெளியிட்டார். கல்கியின் எழுத்துகள் யாவும் மலிவுப் பதிப்புகளாக வெளி வர வேண்டும் என்று!

பெங்குவின் நூலின் மொழி பெயர்ப்பாளர் கௌரி ராம்நாராயண் சோவை மறுத்து மொழி பெயர்ப்பின் முக்கியத்துவத்தை எடுத்துச் சொன்னது விழாவுக்குச் சுவை கூட்டியது. நமது தலை சிறந்த எழுத்தாளர்களின் சிந்தனைகளும் உணர்வுகளும் பிற மொழி வாசகர்களைச் சென்றடையாவிட்டால் இன்றைய ஆங்கில எழுத்தாளர்கள் உணர்த்தும் இந்தியாவும், இந்தியப் பண்பும்தான் அவர்களுக்குப் படிக்கக் கிடைக்கும் என்பதைச் சுட்டிக் காட்டினார். மொழி பெயர்ப்புப் பணியினால் மொழி பெயர்ப்பாளரும் பல விதங்களில் மேம்பாடு அடைய முடியும் என்பதையும் பகிர்ந்து கொண்டார்.

சிறிதும் பெரிதுமாக ஒரு டஜனுக்கு மேற்பட்ட உரைகள் காலை நிகழ்ச்சிகளில்! ஆனாலும் 'பிற்பகல் மீண்டும் மேடைப் பேச்சா?' என்று யாராவது அலுத்துக் கொள்ள வேண்டுமே!

கல்கி கருத்தரங்கம் அவ்வை நடராஜனின் தலைமையில் களை கட்டியது. அமரர் கல்கியின் சிறப்புகளை அவர் நீரருவி போல் அடுக்கித் தள்ளினார். ஒரே ஒரு துளியை மாதிரிக்குத் தருகிறோம்:

'முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்' என்ற தேவாரப் பாடலைக் கேட்டால் சிவன் ஞாபகம் வருகிறதோ இல்லையோ, சிவகாமியின் ஞாபகம் வரும்! அந்த அளவுக்குக் கதையும் பாத்திரமும் பாடலும் இரண்டறக் கலந்துள்ளன!"

'வரலாற்றுக்குப் புதுவாழ்வு' என்பது வரலாற்று நாவல்களில் ஆராய்ச்சி செய்துள்ள பேராசிரியர் முனைவர் பூவண்ணனுக்குத் தரப்பட்ட தலைப்பு. பொன்னியின் செல்வன் எழுதப்பட்ட பிறகு சதாசிவ பண்டாரத்தாரின் சோழர் வரலாறு நூலுக்கு

ஏற்பட்ட புதுவாழ்வைப் பற்றி குதூகலத்துடன் பேசினார் பூவண்ணன்.

மதுரை பல்கலைக் கழகப் பேராசிரியர் இரா. மோகன், கல்கியின் பேச்சிலும் எழுத்திலும் வாழ்க்கையிலும் விரவிக் கிடந்த நகைச்சுவை உணர்வை எடுத்துக்காட்டுகளுடன் விவரித்தார்.

பொன்மணி வைரமுத்துவின் தலைப்பு கல்கியும் பெண்மையும். வாழ்க்கையில் தாம் மதித்துப் போற்றிய பெண்மையைத்தான் கல்கி தமது எழுத்துக்களிலும் உயிர்ப்பித்துக் காட்டினார் என்பதை பொன்மணி வைரமுத்து வெகு சரளமாகவும் ஆணித்தரமாகவும் நிலைநாட்டினார். அமரர் கல்கி, தமது மனைவிக்கு அளித்த ஆதரவையும் அரவணைப்பையும் அது குறித்து அவ்வம்மையார் கொண்ட பெருமிதத்தையும் திருமதி கல்கியிடமே பேசியுணர்ந்ததைப் பகிர்ந்து கொண்டார் பொன்மணி.



• பார்வையாளர்கள்

பாரதியிடம் பெற்ற உந்துதலில் கல்கி படைத்த பெண்மை யதார்த்த எல்லையைக் கடந்து விடவில்லை என்பதையும் சுட்டிக் காட்டினார் பொன்மணி வைரமுத்து. கல்கியின் வாழ்க்கையையும் அவரது கதாபாத்திரங்களையும் கருத்தூன்றி கவனித்துத் தயாரிக்கப்பட்டிருந்தது பொன்மணியின் உரை.

'கல்கியின் கைவண்ணமும் கால் வண்ணமும்' என்ற தலைப்பில் பேசினார் பேராசிரியர் ராசகோபாலன். மிக வலிமையான பேனாவை வைத்திருந்தபோதும் கல்கி அதனை மிக எச்சரிக்கையுடன் பயன்படுத்தியதைச் சுட்டிக் காட்டினார் ராசகோபாலன். விகடனை விட்டு அவர் விலகியபோது மௌனம் காத்த பண்பைப் பாராட்டினார். "இது ஒரு யுக சந்திப்புக்கான விழா" என்று அவர் குறிப்பிட்டது எழுச்சியூட்டுவதாக அமைந்தது.



• பூவண்ணன்



• ராசகோபாலன்



• மதுரபாரதியின் பாடலைப் பாடுகிறார் பாரதி திருமகள்

நான்கு பேச்சாளர்களின் முக்கியமான கருத்துகளையும் தொகுத்து சுதம்பமாலையாக்கி அவ்வை நடராஜன் கருத்தரங்கை நிறைவு செய்ய, நன்றி சொன்ன கி. ராஜேந்திரன், ஒரு முக்கியமான நபரை அந்த முக்கியமான தருணத்தில் நினைவூட்டினார்:

வண்ணமிகு திருவிழா போன்றதொரு வாழ்க்கையை வாழ்ந்த அமரர் கல்கியின் வரலாறை ஆராய்ச்சிக் கண்ணோட்டத்துடன் எழுதிய சுந்தாவை நினைவூட்டினார் கி.ரா.

சுந்தாவின் பொன்னியின் புதல்வர் மட்டும் எழுதப்பட்டிராவிடில் கடந்த ஓராண்டு காலமாக இந்த நூற்றாண்டு நிகழ்ச்சிகளை இவ்வளவு கருத்தாழத்துடனும் செறிவுடனும் நடத்த மிகவும் சிரமப்பட்டிருப்போம். கல்கி குறித்துப் பேச வந்தவர்கள் அனைவருக்கும் அந் நூல் ஏதேனும் ஒரு வகையில் கை கொடுத்து உதவியிருக்கிறது' என்றார்.

கி.ரா.வின் இந்தக் கூற்றுக்குச் சிகரமான சாட்சிதான் அன்றைய தினம் மாலையில் முதல்வர் ஆற்றிய உரை! 8.9.99 அன்று இரவு பதினோரு மணிக்கு மேல் அவர் படித்தது பொன்னியின் புதல்வரைத்தானே!

— ஜி.எஸ்.எஸ்

படங்கள்: யோகா

ஒவ்வொரு தேர்தலிலும் வாக்களிப்பவர்களின் சதவீதம் குறைந்து கொண்டே வருகிறது. 1998-ல் தேசிய அளவில் 62சதவீதம் வாக்குப் பதிவு ஆனது. ஆனால் இந்தத் தேர்தலில் முதல்கட்ட வாக்குப் பதிவின்போது அது 57 சதவீதமாகக் குறைந்து விட்டது. 1989-ல் வடசென்னைத் தொகுதியில் 60 சதவீதமாக இருந்த வாக்குப் பதிவு படிப்படியாகக் குறைந்து இந்தத் தேர்தலில் 43 சதவீதம்தான் பதிவாகியிருக்கிறது. வாக்கு சதவீதம் குறையக் காரணம் என்ன? இந்த போக்கு எதைக் காட்டுகிறது?

**இரா. செழியன் (லோக் சக்தி):**

"தேர்தலை அலட்சியப்படுத்தாதீர்; நாட்டு நலனில் அக்கறை காட்டாமல் இருந்து விடாதீர்கள்; அந்தப் போக்கு ஜனநாயகத்தையே அழித்து விடும்" என்றார் பிரான்ஸ் நாட்டு அரசியல் தத்துவஞானி மாண்டியெங்கோ. நமது நாட்டில் ஒவ்வொரு தேர்தலின்போதும் குறையும் வாக்கு சதவீதத்தைப் பார்க்கும் போது இதே போக்கு நீடித்தால் ஜனநாயகத்துக்கு ஆபத்து வந்து விடுமே என்றுதான் அஞ்சத் தோன்றுகிறது.



# ஜனநாயகத்திற்கு எச்சரிக்கையா?

மக்கள் தேர்தலைப் புறக்கணிப்பது ஏன்? தகுதியான வேட்பாளர்கள் போட்டியிடவில்லை என்ற குறைபாடா? கட்சிகளின் மீது இருந்த நம்பிக்கை தேய்ந்து விட்டதா? அல்லது தேர்தல் முறை மீதே மக்களுக்கு அவநம்பிக்கை வந்து விட்டதா? தமிழ்நாட்டில் பல கிராமங்களில் அடிப்படை வசதிகள் செய்து தராத காரணத்திற்காக மக்கள் இந்தத் தேர்தலைப் புறக்கணித்துள்ளனர். அவர்கள் செய்ததில் நியாயம் இருந்தாலும் விவேகம் இல்லை. சுதந்தர இந்தியாவில், இந்த 52 வருட காலத்தில் நமது நாட்டில் எல்லா கிராமங்களும் முன்னேறி விட்டதா? இன்னமும் மின் வசதி பெறாத கிராமங்கள் ஆயிரக்கணக்கில் இருக்கின்றன. இப்படிப் பல குறைபாடுகள். அதற்காக எல்லா கிராமங்களும் ஏதேனும் ஒரு காரணத்தைச் சொல்லி தேர்தலை பகிஷ்கரித்தால் என்ன ஆகும்? கொடுங்கோலாட்சி புரியும் யதேச்சாதிகாரியின் ஆபத்தைவிட அதிகமான ஆபத்து ஜனநாயகத்தில் அக்கறை காட்டாமல் இருக்கும்

குடிமகனால் விளைவிக்கப்பட்டு விடும். உண்மையில் இது போன்ற செயல்கள் எதிர்மறையான விளைவுகளையே ஏற்படுத்தும். மக்களின் தேர்தல் புறக்கணிப்பு, பொதுமக்களை புறக்கணித்த அரசியல்வாதிகளை ஆட்சி பீடத்துக்கு சிரமப்படாமல் இட்டுச் செல்வதில்தான் முடியும். இவைகளை மக்களுக்கு உணர்த்த வேண்டியது ஒவ்வொரு பொறுப்புள்ள அரசியல்வாதியின் கடமை ஆகும்.

நகரத்தில் இருக்கும் வசதியில்லாதவன் 'இந்த தேர்தலினால் எனக்கொன்றும் பயன் இல்லை' என்று புறக்கணிக்கிறான். வசதியுள்ளவனோ 'யார் ஆண்டாலும் என் வசதிக்கு எந்தக் குறையும் வராது'



என்று அலட்சியப்படுத்துகிறான். ஜனநாயகத்தில் ஒவ்வொரு குடிமகனுக்கும் ஆட்சி அதிகாரத்தில் 'தன்னுடைய பங்கும் உண்டு' என்ற ஈடுபாடு வரவேண்டும். அதற்கு கல்வியறிவைப் பரப்ப வேண்டும். வாக்குரிமை என்பது ஒரு ஜனநாயக உரிமை. வாக்களிப்பது ஜனநாயகக் கடமை என்பது மக்களில் ஒவ்வொருவருக்கும் உணர்த்தப்பட வேண்டும். இதைச் செய்யத் தவறுவோமேயானால் ஜனநாயகத்தின் அடிப்படையே ஆட்டம் கண்டுவிடும்.

**சோ:**

அடிக்கடி தேர்தல் வருவதால், எல்லா கட்சிகள் மீதும் மக்களுக்கு நம்பிக்கை குறைந்து வருகிறது. அரசியல் தலைவர்கள் மீது மக்கள் மதிப்பிழந்து வருவதையே குறையும் வாக்கு சதவீதம் சுட்டிக் காட்டுகிறது. 'யார் ஆட்சிக்கு வந்தாலும், நமக்கு எந்த விமோசனமும் கிடையாது; எல்லாம் ஒரே லட்சணம்தான்' என்ற மனப் போக்கு பாமர மக்களிடையே வளர்ந்து வருகிறது. 'எந்த அரசாங்கம் வந்தாலும் தங்கள் தேவைகள் கவனிக்கப்படப் போவதில்லை' என்ற எண்ணம் மக்களுக்கு ஏற்பட்டு விட்டது. கட்சித் தொண்டர்கள் மற்றும் அனுதாபிகள் தவிர மற்ற நடுநிலையான மக்கள் வோட்டுப் போடுவதில் ஆர்வம் இழந்து வருகிறார்கள். இந்த நிலை வருங் காலத்திலும் நீடிக்குமேயானால் ஜனநாயக ஆட்சியின் மீதே மக்களுக்கு அவநம்பிக்கை ஏற்படும் மாபெரும் அபாயம் இருக்கிறது. வேட்பாளர் தேர்விலிருந்து துவங்கி தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் வரை, தங்கள் தொகுதிகளை கவனிப்பது உட்பட, அரசியல் ரீதியான செய்கைகளைப் பற்றி எல்லாக் கட்சிகளும் பரிசீலனை செய்யும் கால கட்டம் வந்து விட்டது. 'தேர்தல் காலம் தவிர மற்ற நேரங்களில் அரசியல்வாதிகளுக்கும் மக்களுக்கும் தொடர்பில்லை' என்ற நிலை மாறவேண்டும்.

தங்கள் நடத்தையின் மூலம், ஜனநாயகத்தின் மீது மக்களைத் தொடர்ந்து நம்பிக்கை கொள்ளச் செய்ய வேண்டிய பெரும் பொறுப்பு அரசியல் கட்சிகளுக்கும் தலைவர்களுக்கும் இருக்கிறது.

ஆஸ்திரேலியாவில் இருப்பது போன்று கட்டாய வோட்டு முறையைக் கொண்டு வந்தால் குறைந்த பட்சம் தங்கள் தலையெழுத்தை நொந்து கொண்டாவது மக்கள் வோட்டளிப்பார்கள். ஆகையால் அதையும் முயற்சி செய்து பார்க்கலாம்.

சந்திப்பு: **ஸ்ரீநிவாசன்**
படம்: **சௌந்தர்ராஜன்**

(சென்ற இதழ் தொடர்ச்சி...)

அந்தமானில் மத்தியதரத்தினர் தங்குவதற்கேற்ற சுமார் 150 ரூபாய் அறைகள் முதல் போதுமான அளவு ஊழல் செய்து இன்னும் சி.பி.ஐயிடம் மாட்டாதவர்கள் தங்கும் 4000ரூபாய் அறைகள் வரை உண்டு. உல்லாசப் பயணிகள் வருகை ஒரே சீராக இல்லாததால் ஊர் சுற்றிக் காட்டும் அமைப்புகள் மிகக் குறைவு. ஆளே இல்லாததால் எங்களை மட்டும் ஒரு டாக்சியில் ஏற்றி, பல இடங்களுக்கு அழைத்துப் போன அதிசயமும் நடந்தது. ஆனால் இந்தியர்களை விட மேலை நாட்டினரும் கீழை நாட்டினரும் அதிகமாக வருகின்றனர். தென் கொரியாவைச் சேர்ந்த ஒரு குடும்பத்தைச் சந்தித்தோம். அந்தமானை சொர்க்கம் என்று வர்ணித்தவர்களுக்கு ஒருகுறை. அந்தமானுக்குக் கிழக்கே இருக்கும் நாடுகளிலிருந்து நேரடியாக அந்தமானுக்கு கப்பல், விமானத் தொடர்பு இல்லாததால் அவர்கள் சென்னை வந்துதான் அந்தமான் செல்ல வேண்டுமாம்.

சிறந்த உணவு வகைகளைக் குறைந்த விலையில் அளிக்கும் அன்னபூர்ணா காஃபெடேரியாவின் உரிமையாளர், கண்ணன் என்ற தமிழர். அங்கே சைவம்

## கா. புவனேஸ்வரி

மட்டும் தரப்படும் ஹோட்டல்கள் ஏதுமில்லை. பவுடர் பால் உபயோகித்து அவர்கள் தயாரிக்கும் தயிர் பிரமாதமாக இருக்கிறது. உணவுக்கு அடுத்தது தமிழனுக்கு வேண்டியது சினிமா. கவலையே வேண்டாம். நான்கு திரையரங்குகள் உள்ளன. தமிழ், இந்தி மற்றும் ஆங்கிலப் படங்களும் ஓடுகின்றன. நாங்கள் மவுண்ட்பேட்டன் டாக்கீசில் "மாச்சீஸ்" படம் பார்த்தோம். அதாவது பார்த்ததாக நினைத்துக் கொண்டிருக்கிறோம். ஏனென்றால் அதுவோ ஆர்ட் ஃபிலிம். புரொஜக்டரோ மவுண்ட்பாட்டன் காலத்தியது. கேட்கணுமா? முதல் தடவை பக்கவாட்டுத் திரைகள் விலக்கப்பட்ட





• மரினா பார்க்கின் தோற்றம்




• ராஸ் தீவில் ஜப்பானிய பங்கர்



• நேதாஜி ஸ்டேடியம்

• ஜெட்டர் ஸ்கூட்டரில் பயணிக்கலாம்

# அந்தமானைப் பாருங்கள் அழகு...

போது இடைவேளை என்றும் இரண்டாவது தடவை விலக்கப்பட்டபோது படம் முடிந்து விட்டது என்றும் புரிந்து கொண்டோம்!

இனி அந்தமான் பற்றிய சில அடிப் படைத் தகவல்கள்:

● மொத்தம் உள்ள தீவுகள் 572. இவை வடக்கில் அந்தமான் தெற்கில் நிக்கோபார் என்று இரண்டு தீவுக் குழுக்களாய் பிரிந் துள்ளன. வடக்கிலிருந்து தெற்காகச் சுமார் 700 கி.மீ. நீளம் உடையது. மொத்தப் பரப் பளவு 8249 சதுர கி.மீ. கிரேட் நிக்கோபார் தீவில் வற்றாத ஜீவநதி உள்ளது. இந்தத் தீவின் தெற்கு முனையான இந்திரா பாயிண்ட் கன்னியாகுமரியைவிட ஒரு "இணுக்கு" தெற்கே மூக்கை நீட்டிக் கொண் டிருப்பதால் அதுவே இந்தியாவின் உண்மை யான தென்முனை. (காஷ்மீர் முதல் கன்யா குமரிவரை என்று எதுகையுடன் பேசிவரும் அரசியல்வாதிகளுக்கு இது கசப்பாக இருக் கும்.)

● அந்தமானில் உள்ள பழங்குடியினர் இருவகைப்படுவர். ஒன்று நீக்ரோ முக முடைய ஓங்கே, ஜாவா மற்றும் சென்டி னலீஸ் இனத்தவர். மற்றொன்று மங்கோலிய முகமுடைய நிக்கோபாரீஸ் மற்றும் ஷோம் பென் இனத்தவர். இவர்களைத் தலைநகரில் பார்க்க முடியாது. உள்ளடங்கிய காட்டுப் பகுதிகளிலும், சுற்றியுள்ள தீவுகளிலும் வசிக்கிறார்கள். பொதுவாக நம்மை அங்கே போக அனுமதிப் பதில்லை. அயலாரை வர விடாமல் அம் பெய்தி விரட்டும் தீவிரமான தீவுவாசிகளும் உள்ளனர்.

● அந்தமான் நிலப்பகுதியில் 92% காடு. (வீரப்பனை இங்கு கொண்டு வந்துவிட்டால் அவனும் சந்தோஷமாய் இருப்பான். நமக் கும் பிரச்னை தீர்ந்தது.) இந்தியாவின் ஒரே எரிமலை BARREN ISLAND என்ற இடத்தில் உள்ளது. இது 91 மற்றும் 94ல் வெடித்துள் ளது. மே முதல் ஜனவரி வரை மழை பெய் யும். சராசரி ஆண்டு மழை அளவு 3000 மி. மீட்டர். மற்றபடி சென்னையில் உள்ள அதே தட்பவெப்ப நிலைதான் அங்கும். மே மாதம் சென்னையைவிட அந்தமான் கொதிக்கும். ஆனால் மதிய வேளைகளில் ஸ்விட்ச் போட்டாற்போல பருவநிலைமாறி லேசாகத் தூறல் விழும்.

● முக்கிய விளைபொருள்கள் தென்னை, பனை, பாக்கு, வாழை, கடல் பொருள்கள் (மீன், சங்கு, பவளப் பாறை)காடு தரும் பொருள்கள் (தேன், மூங்கில், மரம், பிரம்பு போன்றவை) மற்றும் இந்தியாவின் ஒரே சாதனையான மனித உற்பத்தி (மக்கள் தொகை 91 கணக்குப்படி 2,78,000). பள்ளிகள்,

• வைப்பர் தீவு தூக்குமேடை



கல்லூரிகள் உண்டு. நம்பினால் நம்புங்கள். கல்வி அறிவு பெற்றவர்கள் சதவிகிதத்தில் முதலிடம் அந்தமானுக்குத்தான்.

● தாங்கமுடியாத அளவுக்கு மின்வெட்டு என்று சொல்ல முடியாது. இந்தப் பகுதிக்கு இத்தனை நேரம் மின்சாரம் வராது என்று அறிவித்து அதன்படியே செய்கிறார்கள். (ஆற்காடு வீராசாமி கவனிக்கவும்.)

● இறுதியாக-அனுமான் பெயரை ஹண்டுமான் என்று மலாய்க்காரர்கள் உச்சரிப்பார்கள் என்றும் அதிலிருந்துதான் அந்தமான் என்ற பெயர் வந்தது என்றும் சொல்லப்படுகிறது.

● போர்ட் ப்ளேரின் பாரிஸ் கார்னர் அபர்டீன் பஜார். (ஆனால் தி.நகர், நுங்கம்பாக்கம் எல்லாம் கிடையாது!) இங்கு உள்ள மிகப் பழைய மணிக்கூண்டு ஓர் அதிசயம். அதில் நான்கு கடிகாரங்கள் உள்ளன. நான்கும் எப்போதும் சரியான நேரத்தைக் காட்டுகின்றன.

மிகத் தரமான மரச்சாமான்கள் மிகக் குறைந்த விலைக்கு இங்கு கிடைக்கும். ஆனால் சென்னை கொண்டு வருவது எளிதல்ல. சுமை கூலி முக்கால் பணம் ஆகும். சுண்டு விரல் நீளமுள்ள வித்தியாசமான வாழைப்பழமும் (கிலோ கணக்கில் விற்கிறார்கள். ஒரு கிலோவுக்கு 35 பழம் தேறும்) கட்டா என்ற அந்தமானுக்கே உரிய பழமும் இங்கு கிடைக்கும்.

● இங்கு உள்ள தொலைபேசிகளும் ஓர் அதிசயம். கோட்டூர்புரத்திலிருந்து அபிராமபுரம் தொடர்பு எளிதில் கிடைக்காது. அந்தமானிலிருந்து டயல் செய்தவுடன் அபிராமபுரம் கிடைத்தது. இனி உள்ளூர் தொடர்புகள் சரியாய்க் கிடைக்காத சென்னைவாசிகள் அந்தமான் போய் செய்யுங்கள். என்ன... செலவு கொஞ்சம் கூட ஆகும்.

## இனி அந்தமானில் பார்த்த இடங்கள்:

**முதல்நாள்:** காந்தி பார்க் (அபர்டீன் பஜார் அருகிலேயே) உள்ள பத்து ஏக்கர் பரப்பளவுள்ள இது, மூன்று வாரத்தில் நிர்மாணிக்கப்பட்டது. சிறுவர்களுக்கான JOY RIDES மிகக் குறைந்த கட்டணத்தில் உண்டு. பொதுத் துறை ஆனாலும் நிர்வகிப்பவர் மனம் வைத்தால் ஓர் இடத்தை எவ்வளவு சுத்தமாக வைத்துக் கொள்ளலாம் என்பதற்கு இதில் உள்ள சபர்மதி ரெஸ்டாரண்ட் உதாரணம்.

சிறிய குளமும் படகுகளும் உண்டு. இயற்கைக் காட்சிகளினூடே நடந்து செல்ல இரண்டு கிலோ மீட்டர் சுற்றுப் பாதை உண்டு. பல காதல் ஜோடிகளை இங்கு கண்டோம். (அருகே போகும்போது தலையைக் குனிந்து கொள்வார்கள்). இந்த இடத்தின் முந்திய பெயர் DILTHMAN TANK. அந்தமானுக்கு தண்ணீர் வழங்குவதற்கு வெள்ளைக்காரர்கள் கட்டி வைத்த குளம். அதைத் தூர்த்துத்தான் இதனை உருவாக்கி உள்ளனர். விளைவு? தண்ணீர்ப் பஞ்சம்! இனி மறுபடி வெள்ளைக்காரன் வந்து இன்னொரு குளம் வெட்டினால்தான் தண்ணீர் கிடைக்கும் போலிருக்கிறது.

பக்கத்திலேயே உள்ளது வெற்றிமலை முருகன் கோவில். பக்தி உள்ளவர்கள், இல்லாதவர்கள் அனைவரும் கண்டிப்பாக வெள்ளி மலை போக வேண்டிய இடம். ஏனென்றால் அந்த நேரம் அங்கு அருமையான சர்க்கரைப் பொங்கல் பிரசாதமாகக் கிடைக்கும். கூட்டமில்லாததால் இதன் குருக்கள் ''கடை விரித்தேன் கொள்வாரில்லை'' என ஏங்கி உட்கார்ந்திருப்பார். ஒரு பத்து ரூபாய் அழுத்தினால் ஏராளமான சர்க்கரைப் பொங்கல் கிடைக்கும். இரவு சாப்பாட்டுச் செலவு மிச்சம்.

**இரண்டாம் நாள்:** சிப்பிகாட் பண்ணை! அபர்டீன் பஜாரிலிருந்து 15 கி.மீ. தூரம். பேருந்து உண்டு. மலைத் தோட்டப் பயிர்கள் அத்தனையும் சிறு அளவில் காட்சிக்காக வளர்த்து வருகிறார்கள். தவிர, தீவில் மட்டுமே காணப்படும் சில பூ வகைகளும் உண்டு. மொத்தப் பரப்பளவு 80 ஏக்கர். பயிர்களில் காப்பி, டீ, ஏலம், சாதிக்காய், கிராம்பு, பைனாப்பிள் போன்றவை அடக்கம். நகரவாசிகளான நமக்கு இது புதிய காட்சி.

மகாத்மா காந்தி மரைன் நேஷனல் பார்க்: பண்ணையிலிருந்து இன்னும் 15கி.மீ. தூரம் போனால் வருவது. 15 தீவுகளை உள்ளடக்கியது. கரையிலிருந்து ஒரு மணி நேரம் படகில் போனால் JOLLY BUOY என்ற தீவை அடையலாம். சுற்றியுள்ள கடலில் சுமார் பத்தடி ஆழத்தில் பலவித பவளப்பாறைகள், வண்ண மீன்களைக் காணலாம். கண்ணாடி அடிப்பகுதி உள்ள படகில் சென்றோ அல்லது SNORKELLING EQUIPMENT வாங்கி கடலில் மூழ்கியோ பார்க்கலாம். இவ்வாறு இரண்டு மணி நேரம் மூழ்கிப் பார்த்த பிறகு படகோட்டி சாவதானமாக அந்த இடம்

சுத்தியல் தலை சுறாக்களும் பிரும்மாண்ட மான கடல் முதலைகளும் இனப்பெருக்கம் செய்து வாழும் இடம் என்று சொன்னார். முதலிலேயே சொன்னால் அவர் பிஸினஸ் என்ன ஆவது! அந்த இடத்தின் அழகில் சொக்கிப் போய் "இங்கு வந்து இட்லி தின்னுட்டுப் போறவன் முட்டாள்" என்று எனக்குப் பின்னால் ஒரு பெரிய குடும்பமே உட்கார்ந்து இட்லி சாப்பிடுவது தெரியாமல் சொல்லி மாட்டிக் கொண்டேன்!

**மூன்றாம் நாள்:** சிடியா தாபு! அந்த மானின் கடைக்கோடி. தென் முனையான இது அபர்டீன் பஜாரிலிருந்து 25 கி.மீ. கடலில் வளரும் மாங்குரோவ் (சதுப்பு நிலக்) காடுகளையும் அதில் வசிக்கும் பலவகைப் பறவைகளையும் காணலாம். அதிர்ஷ்டம் இருந்தால் மிச் சிறப்பான சூரிய அஸ்தமனம் பார்க்கலாம். இங்கிருந்து இரண்டு கி.மீ. தள்ளி உள்ள SYLVAN SAND என்ற பகுதிக்குப் போனால் 'இனிது இனிது ஏகாந்தம் இனிது' என்பதற்கு முழுப் பொருளும் தெரியும்.

**நான்காம் நாள்:** ராஸ் தீவுக்கு, அபர்டீன் பஜாரிலிருந்து சுமார் அரைமணி நேரம் படகில் செல்ல வேண்டும். கைதிகள் இருக்கும் போர்ட் ப்ளேரில் தாங்களும் தங்க விரும்பாத வெள்ளையர்கள் தாங்கள் மட்டுமே வசிக்க-தங்களுக்கு என்றே சகல வசதிகளோடும் உருவாக்கிக் கொண்ட தீவு இது. ஒரு காலத்தில் சர்ச், மெஸ், ஆஸ்பத்திரி, அஞ்சல் அலுவலகம், பேக்கரி, தூய தண்ணீர் தயாரிக்குமிடம், நீச்சல் குளம், டென்னிஸ் மைதானம் ஆகிய பல வசதிகளோடு கிழக்கின் பாரீஸ் என்று அழைக்கப்பட்ட இடம். இப்போது சுத்தமாகப் பாழடைந்து, பொதுத்துறை நிறுவனம் போல காட்சியளிக்கிறது!

வைப்பர் தீவு: துறைமுகத்திலிருந்து அரை மணி நேர படகுச் சவாரி. வெள்ளையர்கள் பெண்களுக்கு எவ்வளவு மரியாதை கொடுத்தார்கள் என்பதை நிரூபிக்கும் தீவு. அதாவது செல்லுலர் சிறை கட்டப்படும் முன்பு பல கைதிகளை அடைத்து வைக்கவும், தூக்கிலிடவும் பயன்பட்ட இந்தத் தீவு பிறகு பெண் கைதிகளை மட்டும் மரியாதையுடன் தூக்கிலிடப் பயன்பட்டது. பெண்களுக்காக அழகு உணர்ச்சியுடன் பிரத்யேகமாக தூக்குமேடை கட்டப்பட்டுள்ளது.

**ஐந்தாம் நாள்:** நேதாஜி ஸ்டேடியம். சர்வதேச தரம் வாய்ந்த இந்தியாவின் நான்காவதான ராஜீவ் காந்தி மிதிவண்டி ஓட்டும் தளம். சர்வதேச தரம் வாய்ந்த நீச்சல் குளம் மற்றும் ஃபிட்னெஸ் சென்டர் (ஐந்து நட்சத்திர ஹோட்டல்களில் இருப்பவற்றுக்கு இணையானது). ஆகியவை அடங்கியதே நேதாஜி ஸ்டேடியம். கிரிக்கெட், கால்பந்து எல்லாம் விளையாடக் கூடிய இந்த ஸ்டேடியம் நமது சேப்பாக்கம் ஸ்டேடியத்தைப் போல இரண்டு மடங்கு பெரியது. இதை ஒட்டியுள்ள மரினா பார்க்கிலும் அந்தமான் வாட்டர் ஸ்போர்ட்ஸ் காம்ப்ளெக்சிலும் உலகத்தில் எத்தனை விதமான நீர் விளையாட்டுக்கள் உண்டோ அத்தனையும் உண்டு. இதன் கூட சென்னை சுற்றுலா பொருட்காட்சியில் நீங்கள் பார்த்த அத்தனை JOY RIDES ஐயும் சேர்த்துக் கொள்ளுங்கள். அத்துடன் இடைவிடாத கடல் காற்றையும் திட்டமிட்டு வளர்த்த புல் தரைகளையும் மரங்களையும் கூட்டிக் கொள்ளுங்கள். பர்சைக் கடிக்காத கட்டணங்களையும், படு சுத்தமாக வைக்கப்பட்டிருக்கும் விளையாட்டுப் பொருள்களையும், விசித்திரமான நீரூற்றுக்களையும் சேர்த்துக் கொள்ளுங்கள். என்ன விடை வரும் தெரியுமா? பூமியிலே சொர்க்கம் என்றால் அது இதுதான் என்று தோன்றும். (இந்த இடத்தில் அந்தமானின் பழங்குடியினரும், பிரிட்டிஷ்



## குஷ்வந்த் சிங்கின் ஜோக்!

**ஒரு சர்தார்ஜி உலகம் சுற்றி வந்த பெருமையைத் தம்பட்டம் அடித்துக் கொண்டிருந்தார்.**

**"நான் பாரீஸ், ரோம், நியூயார்க்... இப்படி உலகத்தைச் சுற்றியிருக்கிறேன்...!"**

**"அப்படியானால் உங்களுக்கு 'ஜாகரபி' நன்றாகத் தெரியும்...!"**

**"ஆம்! அங்கும் நான் போய் வந்திருக்கிறேன்...!"**

**— மஞ்சு தேவன்**



**"அந்த டைரக்டர்/தயாரிப்பாளர் சரியான ஜம்பமா, எப்படி?"**

**"ஐந்தே ஐந்து நாள் ஓடின படத்துக்கு எவர்சில்வர் ஜூப்ளின்னு கொண்டாடறார்னா பாரேன்."**

**— வெ. ராஜாராமன்**

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

காரர்களும் முதல் தடவையாக சந்தித்துக் கொண்டார்கள். விளைவாக, அந்தமான் பழங்குடியினருக்கு இங்கு நினைவுச் சின்னம் எழுப்பப்பட்டுள்ளது!)

**ஆறாம் நாள்:** சத்தாம் ஸாமில் என்ற ஆசியாவிலேயே மிகப் பெரிய மரம் அறுக்கும் ஆலை, துறைமுகம் அருகே உள்ளது. இங்கு மார்பிள் வுட் என்ற சலவைக் கல் போலவே இருக்கும் மரத் துண்டைப் பார்த்தோம். அவர்கள் செய்யும் கெடுபிடிகளைப் பார்த்தால் அவர்கள் மரம்தான் அறுக்கிறார்களா அல்லது மனிதர்களை அறுக்கிறார்களா என்ற பீதி கலந்த சந்தேகம் வரும். இங்கு மரத்துண்டுகளின் வாசனையை வைத்தே அது எந்த வகை மரம் எத்தனை வருடம் பழையது என்று கூறும் இளைஞர் உள்ளார். அவரைச் சென்னை அழைத்து வந்து நமது அரசாங்க கோப்புகளைக் கொடுத்து மோந்து பார்த்து அது எந்த வகை எத்தனை வருடம் பழையது என்று கண்டு பிடிக்க வைக்கலாம். நேரம் மிச்சமாகும்.

**ஏழாம் நாள்:** அன்னபூர்ணா உணவகம் அருகே உள்ள நூலகம் மிகச் சிறப்பாகப் பராமரிக்கப்படுகிறது. பலமொழி இதழ்கள் உள்ளன. நாளிதழ்கள் வித்தியாசமான முறையில் பக்கங்களைப் பிரித்துப் போட இயலாத வகையில் ஒரு மரச் சட்டத்தில் பிணைத்து வைக்கப்பட்டுள்ளது. நமது தேவநேயப் பாவாணர் நூலகம் போல இங்கு யாரும் தூங்கி வழிவதில்லை.

கடைசியாக 1906ல் கட்டப்பட்ட செல்லுலர் சிறை. (அபர்டீன் பஜாரிலிருந்து 2கி.மீ.) ஏழு இறக்கைகளுடன் உள்ள மின் விசிறி போன்ற அமைப்பில் கட்டப்பட்டது தான் செல்லுலர் சிறை. இப்போது நான்கு கிளைகள் இடிக்கப்பட்டு மருத்துவமனை கட்டப்பட்டுள்ளது. ஒரு கிளையில் 1+2 தளங்களில் 100 அறைகள் வீதம் 700 அறைகள் இருந்தன. ஒரு அறையின் அளவு 4×2.7 மீட்டர். (கணவர் இதைப் பொறாமையுடன் பார்த்து திருமணத்திற்கு முன் அவர் வசித்த திருவல்லிக்கேணி மான்ஷன் அறையைவிட இது மூன்று மடங்கு பெரிது என்றார்!) மேலும் கட்டி வைத்து அடிக்கும் இடம், செக்கிழுக்குமிடம், தூக்குமேடை எல்லாவற்றையும் பார்த்தபோது நெஞ்சு கனத்தது. நம் முன்னோரின் தியாகத்தினால் இயல்பாகவே புகழடைந்து இருக்க வேண்டிய இந்த இடத்திற்கு 'காலா பானி' திரைப் படம் எடுத்த பிறகுதான் மவுசு கூடியது என்று கேள்விப்பட்டபோது நெஞ்சுவலியே வந்து விட்டது. (இது உண்மையான நெஞ்சு வலி. நம் அரசியல்வாதிகளுக்கு வருவதல்ல.) இங்குள்ள பார்வையாளர்கள் புத்தகத்தில் நம் நாட்டைச் சேர்ந்த குறிப்பிட்ட இரண்டு அரசியல்வாதிகளின் மேல் உள்ள வழக்குகள் முடிந்து அவர்களுக்குச் சிறைத் தண்டனை விதித்தால் அவர்களை இங்கு கொண்டு வந்து வைக்க வேண்டும் என்று ஆத்திரம் தீர எழுதினேன். அப்போதுதான் நம் முன்னோர்களின் தியாகமும், பெற்ற சுதந்தரத்தின் அருமையும் அதைத் தாங்கள் துஷ்பிரயோகம் செய்த கொடுமையும் அவர்களுக்குப் புரியும்!

இன்னும் பார்ப்பதற்கு ஏராளமான இடங்கள் உள்ளன. பிஷரீஸ் மியூசியம், கோர்பினஸ் கோவ் விலங்கியல் பூங்கா, சாகரிகா(குடிசைத் தொழில் கைவினைப் பொருள்கள்) ஆந்திரபாலஜிகல் மியூசியம், சமுத்ரிகா நாவல் மியூசியம், ஜுவாலஜிகல் மியூசியம், ஹம்ப்ரே கஞ்ச் மெமோரியல்! இவை தவிர நீலத்தில் எத்தனை வகையுண்டோ அத்தனையும் பார்க்கலாம்! (கடல் நீலத்தைத்தான் சொன்னேன்)

ஆமாம், இதையெல்லாம் பார்த்து நீங்கள் என்ன முடிவுக்கு வந்தீர்கள்? அந்தமான் போகலாமா வேண்டாமா என்ற குழப்பமா? இதோ உங்கள் குழப்பத்தைத் தீர்த்து வைக்கிறாள் எங்கள் குட்டிப் பெண். வீட்டுக்கு வந்து சேர்ந்ததும் அவள்கேட்ட முதல் கேள்வி: "அம்மா அந்தமானுக்கு மறுபடி எப்போ போவோம்?"

குழப்பம் தீர்ந்ததா? ●



# அஞ்சலி!

"தேசநன்மை; தேசநன்மை; தேசநன்மை!' - இவைதான் கல்கி பத்திரிகையின் நோக்கங்கள்" என்று சொன்னார் அமரர் கல்கி. இதே கேள்வியைக் கொஞ்சம் மாற்றி, "உங்கள் வாழ்க்கையின் நோக்கங்கள் என்ன?" என்று அமரர் கல்கியிடம் உதவியாசிரியராகப் பணியைத் தொடங்கிய பி.எஸ். மணியிடம் கேட்டிருந்தால், "கல்கி ஆபீஸ்; கல்கி ஆபீஸ்; கல்கி ஆபீஸ்" என்றுதான் சொல்லியிருப்பார்.

ஆம்; கல்கி ஆசிரியர் குழுவில் தொடர்ந்து நாற்பத்து மூன்று ஆண்டுகள் பணிசெய்த ஒரேயொருவர் பி.எஸ். மணி மட்டும்தான். கல்கி குடும்பத்தில் மூன்று தலைமுறைகளிடம் பணியாற்றிய பெருமை இவருக்கு மட்டுமே உண்டு. துரதிர்ஷ்டவசமாக இடையில் சில மாதங்கள் கல்கி பத்திரிகை வெளிவராமல் இருந்த சமயத்தில் கூட இவர் வேறெங்கும் வேலை தேடிச் செல்லவில்லை. எதுவானாலும் தமது வாழ்க்கை கல்கியோடுதான் என்கிற விசுவாசத்தோடு காத்திருந்தவர்.

பல துணையாசிரியர்களும் அமரர் கல்கியிடமிருந்து பேனா வித்தையைக் கற்றுக் கொள்ளத்தான் அதிக ஆர்வம் காட்டினார்கள். ஆனால் பி.எஸ். மணியோ, பேராசிரியர் கல்கியிடமிருந்து உழைப்பைக் கற்றுக் கொண்டார். உழைப்புக்கு நேரங்காலம் பார்க்கக் கூடாது என்பதற்காகவோ என்னவோ, பி.எஸ். மணியின் கைகள் கைக்கடிகாரத்தை அனுமதித்ததேயில்லை.

மாலை ஐந்து மணிக்கு இவர் அலுவலகத்திலிருந்து புறப்படுகிறார் என்றால், ஒன்று அன்று விடுமுறை தினமாக இருக்க வேண்டும். அல்லது இவருக்கு உடல்நிலை சரியில்லாமலிருக்க வேண்டும். இரண்டுமில்லையென்றால், ஏதாவதொரு கிரிக்கெட் ஆட்டக்காரரைக் கல்கிக்குப் பேட்டி காணச் செல்ல வேண்டும். ஒருபோதும் அது வீட்டுக்காக மட்டும் இருந்ததில்லை. அப்படி உழைத்தவர்.

பல எழுத்தாளர்கள் தொலைக்கிற ஒற்றெழுத்துக்கள் எல்லாம் வேறெங்கும் போய் விடாது. அவையெல்லாம் பத்திரமாக வந்து பி.எஸ். மணியின் பேனாவுக்குள் ஒளிந்து கொண்டிருக்கும். டி.கே.சியால் சிபாரிசு செய்யப்பட்டு, அமரர் கல்கியிடம் பயின்றவராயிற்றே! அதனால் எந்த வாக்கியத்திலும் இலக்கணப் பிழை வந்து விடக்கூடாது என்பதில் கவனமாக இருப்பார். இருந்தும் என்ன செய்ய? கடந்த 15.9.99 அன்று தமது வாழ்வில் விழுந்த மரணப் பிழையை இவரால் திருத்த முடியாமலேயே போய் விட்டது.

பத்திரிகையின் மூலமாக அறிமுகமாகிற வி.ஐ.பிகளின் நட்பைத் தங்கள் சொந்த முன்னேற்றத்துக்குப் பயன்படுத்திக் கொள்ளாத பத்திரிகையாளர்கள் மிக மிகக் குறைவு. அந்தக் குறைவானவர்களில் நிறைவானவராக நின்றவர் பி.எஸ். மணி. இதன் காரணமாகவே, நமது வெளியூர்ப் பயணங்களின்போது, கல்கி குடும்பத்தாரின் நலன் விசாரிக்கிற யாரும், பி.எஸ். மணியின் நலனையும் சேர்த்தே விசாரிப்பார்கள்!

பி.எஸ். மணிக்குக் 'குண்டுமணி' என்கிற புனைபெயரும் உண்டு.

இவர் கல்கியில் எழுதியது கொஞ்சம் தான். அதனாலென்ன? இவர் கல்கியோடு வாழ்ந்தது அதிகமல்லவா!

— இளங்கோவன்



• சுபாகர்



• சாமி சிவகுமார்

# இளைஞர்கள் சமாதானத் தூதர்கள்!

எல்லோருமே வெள்ளைக் கொடியைத்தான் பரிந்துரை செய்தார்கள். சமாதானம்தான் எங்கள் விருப்பம் என்றார்கள். என்றாலும் இந்தியாவும், உலகமும் அமைதியுடன் வாழ என்ன செய்யலாம் என்ற பதிலைக் கூறும்போது உணர்ச்சி வசப்பட்டார்கள்.

"தவறாகப் புரிந்து கொள்வதால்தான் பிரச்னைகள் எழுகின்றன. மதத்தை, மனிதத்தை, தத்துவங்களை - இப்படி எல்லாவற்றிலுமே உள்ள சாறுகளை விட்டு விட்டு சக்கைகளை மட்டும் எடுத்துக் கொள்வதால்தான் நாடுகள் ரண களங்கள் ஆகின்றன. முக்கியமாக ஒருவரையொருவர் புரிஞ்சுக்கணும்ங்கிற எண்ணம் வரணும் சார், அந்த வைப்ரேஷன் இங்கே இல்லையே! இளைஞர்களை பயன்படுத்திக்கத்தான் அரசியல்வாதிகளும், பிற வி.ஐ.பிக்களும் நினைக்கிறாங்களே தவிர, அவங்களுக்குப் பதமா எடுத்துச் சொல்ல ஆளில்லையே இதில்தான் சிக்கல்" என்றார் ஹாஜா கனி.

"எனக்கென்னவோ பெரியவங்க சொல்வதை விட சக இளைஞர்கள் எடுத்துச் சொன்னால் மாணவ சமுதாயம் கேட்கும்னு நினைக்கிறேன். சுயகட்டுப்பாடும் அப்போது தான் வரும். எனவே இளைஞர்களிலேயே ஒரு பகுதியினர் வெப்பத்தைத் தணிக்க முன்வரணும். தலைவர்களை நம்புவது சரியில்லை. அவர்கள் தங்களை நிலைநிறுத்திக் கொள்ளத்தான் பார்ப்பாங்க. பொதுவாகவே சுயநலம் குறைந்தால்தான் சமாதானம் ஏற்பட வாய்ப்புண்டு" என்றார் சிவகுமார்.

ஜாதி அல்லது மதத்தை மையமாகக் கொண்ட சினிமாக்கள் எடுப்பதை நிறுத்திவிட்டாலே பல கலவரங்கள் குறையும் என்பது நியாஸ் அகமதின் கருத்து. "இதுபோன்ற சினிமாக்கள் வெளியிடப்படும் தியேட்டர்களிலே எவ்வளவு மாணவர்கள் அடிச்சுக்

• அப்துல் வஹாத்



• நியாஸ் அகமது



• ஹாஜா கனி

கிட்டு சாக றாங்க தெரி யுமா?" என்றார்.

"சகிப்புத் தன் மையை வளர்த் துக்கிட்டா சமா தானம் வளரும். என் கையின் சுதந்திரம் உன் மூக்கைத் தொடாத வரை தான் என்பதை எல்லாருமே புரிஞ்சுக் கிட்டு நடந்தால் தானாக அமைதி நிலவும்" என்றார் அப்துல் வஹாத்.

"சமாதானம்ங் கிறது சும்மா வார்த்தையாக இல்லாமல் ஆத் மபூர்வமாக இருக்கணும். பிறர் மனதைப் புரிந்து கொள்ள முயற்சி செய் யணும். புத்தகங் களை நிறைய படிக்கப் படிக்க-முக்கியமாக இலக்கியங் களை - இந்த எண்ணம் பெரு கும்" என்றார் சுபாகர்.

ஓரிரு மாற்றுக் கருத்துகளை வெளிப் படுத் தினாலும் சமாதானமாக இணைந்து கல்கி வாச கர்களுக்கான கேள்விகளைத் தயாரித்தது இந்தச் சென்னை புதுக்கல்லூரி குழு.

அருகே உள்ள கூப்பனில் கேள்விகளும் நீங்கள் 'டிக்' செய்து தேர்ந்தெடுக்க வேண்டிய பதில்கள் அடங்கிய தொகுப்பும் உள்ளன. அத் தனை கேள்விகளுக்கும் சரியான விடையை 'டிக்' செய்பவருக்கு ரூ. 200 பரிசு. பலர் செய்து விட்டால் குலுக்கல். ஜெராக்ஸ் கூப்பன் செல் லாது என்பதும் ஆசிரியர் தீர்ப்பே இறுதி என் பதும் தெரிந்த விஷயம்தானே?

**கடைசி தேதி : 4.10.99**

தொகுப்பு : **ஜி.எஸ்.எஸ்.**
படங்கள் : **வெங்கடேஷ்**

## குவிஸ் கூப்பன் – 8

1. 'போரும் சமாதானமும்' என்ற நூலை எழுதியவர் யார்?

☐ ஹிட்லர் ☐ நாஸர் ☐ டால்ஸ்டாய்

2. "இறைவணக்கத்தை விட சமாதானம் செய்து வைப்பது சிறந்தது" என்று கூறியது யார்?

☐ முகமது நபி ☐ மகாவீரர்
☐ கௌடில்யர்

3. ஒரு போரின் விளைவுகளால் மனம் மாறித் துறவறம் பூண்ட மன்னன் யார்?

☐ அசோகன் ☐ ஹர்ஷவர்தனன்
☐ ஔரங்கசீப்

4. பஞ்சசீலக் கொள்கை எந்தப் பேச்சு வார்த்தையில் உருவாக்கப்பட்டது?

☐ தாஷ்கண்ட் ☐ பண்டுங் ☐ திம்பு

5. இரு உலகப் போர்களிலும் கலந்து கொள்ளாத நாடு எது?

☐ பிரான்ஸ் ☐ ஸ்விட்சர்லாந்து
☐ ஸ்வீடன்

6. இரு ஜெர்மனிகளும் ஒன்றானதற்கு அடையாளமாக உடைக்கப்பட்டது எது?

☐ ஹிட்லர் அருங்காட்சியகம்
☐ பெர்லின் சுவர் ☐ ப்ராங்பர்ட் வணிக மையம்.

7. நலங்கிள்ளி நெடுங்கிள்ளி ஆகிய மன்னர்களுக்கிடையே உண்டாகவிருந்த போரை நிறுத்திய புலவர் யார்?

☐ கணியன் பூங்குன்றனார்
☐ மோசிகீரனார் ☐ கோவூர்க்கிழார்

8. ஐக்கிய நாடுகள் சபையின் தலைமை யகம் எங்குள்ளது?

☐ நியூயார்க் ☐ லண்டன் ☐ பாரீஸ்

பெயர்: ..............................................

முகவரி: ..............................................

..............................................

..............................................

ஸ்ரீ ராமஜெயம்



# ஸ்ரீ மாருதி டிராவல்ஸ்



தொலைபேசி எண் 5511786 10/6, ராஜேஸ்வரி தெரு, பெரம்பூர், சென்னை - 600 011

(ஆன்மீக சுற்றுலா குழு அமைப்பாளர்கள்)

எமது விளம்பரங்கட்கு வரவேற்பு கொடுத்து எங்களுடன் யாத்திரை மேற்கொள்ளும் ஆன்மீக அன்பர்களுக்கு எமது உளமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

① 3.10.99 சென்னை – தாமரைப்பாக்கம் (சிவன்) சுருட்டுப்பள்ளி (பள்ளிகொண்ட ஈஸ்வரன்) கோனை நீர்வீழ்ச்சி, நாராயணவனம் (பெருமாள்) சுனைக்காய் சுவாமி மடம், நாகலாபுரம் (வேத நாராயணப் பெருமாள்) பஸ் கட்டணம், டிபன், சாப்பாடு உட்பட நபர் ஒருவருக்கு ரூ. 165/- {(12.9.99) தேதி குறித்த நிகழ்ச்சி தள்ளி வைக்கப்பட்டுள்ளது.}

② 22.10.99 இரவு 9 மணிக்கு சென்னையிலிருந்து டீலக்ஸ் பஸ் மூலமாக புறப்பட்டு நவக்கிரக ஸ்தலங்களை தரிசனம் செய்து 25.10.99 காலை சென்னை வந்தடைதல். பஸ் கட்டணம், 23.10.99 திருநெள்ளாறு இரவு தங்குதல் உட்பட கட்டணம் ரூ. 375/- சாப்பாடு இதர செலவு அவரவருடையது.

③ 31.10.99 வல்லக்கோட்டை (முருகன்) கண்டிகை (மகரமேரு) காஞ்சீபுரம் (காமாட்சி, வரதராஜர்) தென்னாங்கூர் (ஸ்ரீபாண்டுரங்கன் ரகுமாய்) பஸ் கட்டணம், டிபன், சாப்பாடு சேர்த்து நபர் ஒருவருக்கு ரூ. 165/-

④ பஞ்சதுவாரகை யாத்திரை – 25.12.99 முதல் 15 நாட்கள் – அகமதாபாத், துவாரகை, பேட் துவாரகை, மூலத் துவாரகை, தாகூர் துவாரகை, காங்கரோலி துவாரகை, ஸ்ரீநாத் துவாரகை, போர்பந்தர், சோம்நாத், அம்பாஜி, மவுண்ட்அபு, ஜெய்பூர் ஆகிய இடங்கள்: கட்டணம் ரூ. 4700/- (சாப்பாடு இரண்டாம் வகுப்பு ரிசர்வ் செய்த கட்டணம், ஊர் சுற்றிப் பார்த்தல், இரவு தங்குதல் உட்பட) 60 நாட்கள் முன்பு ரயில் பதிவு செய்வதற்காக 20.10.99 முன்பு அட்வான்ஸ் ரூ. 2,000/- செலுத்தவும்.

⑤ Jan 2000 - சிங்கப்பூர், மலேசியா, பாங்காக் (முன்பு Nov அறிவித்த தேதி நீடிக்கப்பட்டுள்ளது)

மாருதியின் மற்றுமொரு மகத்தான சேவை **ஸ்ரீமாருதி கேட்டரிங் சர்வீஸ்**

விவரங்களுக்கு: V. சீனிவாசன் (அமைப்பாளர்)

**ஸ்ரீ மாருதி டிராவல்ஸ் & கேட்டரிங் சர்வீஸ்** பெரம்பூர், தொலைபேசி: 5511786

---

# அழகு மிளிரும் அடர்த்தியான கூந்தலுக்கு

**நம்பகமான ஒரே கூந்தல் தைலம்**



100ml, பாட்டிலின் விலை *Rs.39.45*

## குணா கூந்தல் தைலம்

**குணா** கூந்தல் தைலத்தை தினசரி உபயோகித்தால்

- ☆ தலைமயிர் நீண்டு, கறுத்து, அடர்த்தியாய் வளரும்
- ☆ தலைமயிர் உதிர்தல், செம்பட்டை நிறம், இளம் பித்த நரை, தலை அரிப்பு, பொடுகு, சொரிந்தால் செதில் உதிர்தல் குணமாகும்.
- ☆ ஆண்கள், பெண்கள் அனைவருக்கும் ஏற்றது. இயற்கை தரும் அதி உன்னத மூலிகைகளால் சித்த மருத்துவ முறையில் தயாரிக்கப்பட்டது.

**வியாபார விசாரணைகளுக்கு கீழ்க்காணும் முகவரிக்கு தொடர்பு கொள்ளவும்.**

விபரங்களுக்கு



*Agasthiar Pharmaceuticals*

P.Box No. 588, SALEM - 636 005.

இப்பொழுது எல்லா மளிகை, மருந்து மற்றும் ஜெனரல் ஸ்டோர்களிலும் கிடைக்கிறது.

கலங்கரை விளக்கு
என் பக்கமாகக்
கண் திறந்து பார்த்து
'சரியாகி விட்டதா'
என்று கேட்டது.

வங்கக் கடல்
அலைகள்
எழுந்து எழுந்து
என் முகம் பார்த்து
'இது உனக்கு மறுபிறவி'
என்றன.

மறுபிறவி



# கம் காட்ட முடியவில்லை

**83**-ல் ஒரு நாள். சென்னைத் தொலைக் காட்சி நிலையம் நோக்கிக் கடற்கரைச் சாலை வழியாகப் போய்க் கொண்டிருந்தேன். செய்திகள் படிப்பதற்காக.

மாலைச் சூரியக் கதிர்கள் என்னைச் சுடவில்லை: வங்கக் கடல் அலைகளும் நெருப்பாய்ப் பொங்கி எழவில்லை! ஆனால் என் கழுத்துப் பகுதியைக் கொதிக்கும் வெப்ப விரல்கள் அழுத்திப் பிடித்தன. காற்றில் அசையும் சட்டையின் கழுத்துப் பகுதியும் என்னை விட்டு விட்டுச் சுட்டது. கனல் வீச்சு என் கன்னத்தைச் சிராய்த்தது.

எப்படியோ செய்திச் சுருக்கமும் பெருக்கமும் முடித்துக் கொண்டு வீடு திரும்பினேன். என்ன நேர்ந்து கொண்டிருக்கிறது எனக்கென்று புரியவில்லை! பிடரிப் பக்கமும், கன்னத்து விளிம்பும் கனலத் தொடங்கின. உறக்கம் தொலைத்த இரவும் நானும் விடியும் வரை துடித்துக் கிடந்தோம்.

காலையில், வலக்கண் அருகிலும், என்னைத் தாக்கி வீழ்த்தப் பாசறை அமைக்கப்பட்டிருந்தது. ஊடுருவி என்னை வெல்ல எது புறப்பட்டிருக்கிறது என்ற அச்சத்தோடும் கவலையோடும் நான் ஔவை சண்முகம் சாலையில் உள்ள குழந்தை மருத்துவர் அரங்கநாதனை அணுகினேன். என் கழுத்துப் பகுதி, கன்னப்பகுதி எல்லாவற்றிலும் பார்வையைப் படரவிட்டு விட்டு- 'இது ரொம்ப மோசமானது' என்று சொல்லி விட்டு, இருபது நாள்களாவது விடுமுறை போடுங்கள்! என்று கூறினார்.

கல்லூரிக்கு விடுமுறை போட்டேன்; தொலைக்காட்சி நிலையத்திற்கு இன்னும் ஒரு மாதம் செய்தி வாசிக்க வர இயலாது என்பதையும் தெரிவித்து விட்டேன். மருத்துவத்திற்கு அறைகூவல் விட்டபடி- கொப்புளங்கள்–எரிமலைகளாக என் பிடரியில், கழுத்தில், கன்னத்தில், கண்ணோரத்தில் வெடித்தன. அவற்றின் நீர்பட்ட இடங்களி

**கவிஞர் ஈரோடு தமிழன்பன்**

லும் நெருப்புக் குருத்துகள் உறுத்தெழுந்தன.

'மோசமானது' என்று மருத்துவர் குறித்த அது என்ன? ஊர்ப்புறங்களில் மக்கள் அதைப் பெயர் குறிப்பிட்டுச் சொல்வதில்லை! பாம்பைக் கூட, நம் மக்கள் பெயர் சுட்டிப் பேச மாட்டார்கள் அல்லவா? அப்படித்தான் 'இதுவும்'! 'இது—எது?'

கொடிய வைரஸ், மானுட உடம்பில் ஏற்படுத்தும் இந்த வெடி விபத்து 'ஹெர்ப்பிஸ்' என்று ஆங்கில முறை மருத்துவர்களால் சொல்லப்படுகிறது!

ஊர்ப்பக்கம், அதன் முகம் பார்த்துப் பெயர் சொல்லாத மக்கள்— அதன் முதுகுப் பக்கமாக 'அக்கி' என்று, மங்கலான குரலில் சொல்வார்கள். நேருக்கு நேர் பெயர் சொல்லக்கூட அப்படி ஒரு பயம்!

பொதுவாக, 'அக்கி' எனப்படும் இந்தக் கட்டி முதுகில் வருவதுதான் வழக்கம். எனக்கோ முகத்தில். கண்ணோரத்தில் முகாம் அமைத்திருந்த வைரஸ் கண்ணைக் கைப்பற்றியிருந்தால், பார்வையை இழக்கும் அபாயம் உண்டு என்றும், என் முகத்தில் எச்சரிக்கைக் கொடி ஏற்றி வைக்கப்பட்டிருந்தது.

மட்பாண்டம் செய்யும் தொழிலாளர்களிடம் தான் இதற்கு ஊர்ப்பக்கம் மருந்து உண்டு! அவர்கள் ஏதோ எழுதுவார்கள்— சரியாகிவிடும் என்பார்கள். மாய மந்திரத்துக்குக் கட்டுப்படும் ஒரு திகில் நோயாகவே இது பற்றி மக்கள் பேச நான் கேட்டிருக்கிறேன்.

'மாயனார் செய்த மட்பாண்டத்துக்கு வரும்' இந்நோய்க்கு மருந்தும் மட்பாண்டத்துள்தான் மறைவாக வைக்கப்பட்டிருக்கிறதோ என்று எனக்குத் தோன்றும். ஆனால் எங்கள் ஊர், சென்னி மலையில் என் தந்தையாரே இப்படிப்பட்ட மருத்துவம் செய்ததை என் இளம் பருவத்தில் நான் பார்த்திருக்கிறேன். கடைக்கணக்கு எழுதத் தெரியுமே தவிர, மட்பாண்டம் செய்ய அவர் அறியார்.

சென்னையில் இருக்கும் எனக்கு விஞ்ஞான அடிப்படையிலான விளக்கம் தேவை. நோயிலிருந்து என்னை விடுவித்து எடுக்கத் தக்க மருந்து தேவை. தினமும் ஊசிபோட என் தம்பி என்னோடு இருந்தான். பஞ்சில் தொட்டு, நீலநிறமான மருந்தைப் பட்டும் படாமல் தடவும் போதே—என் கொப்புளங்களுக்குள் ஆயிரம் ஆயிரம் அக்கினி இடிகள்; அதட்டலும் மிரட்டலுமாய் நுழைவது போல் இருக்கும். வில்லைகள் விழுங்கினேன். வைரியாகி விட்ட வைரஸ் அடிபணியவும்—ஆக்கிரமிப்பை விலக்கிக் கொள்ளவும் சட்டென்று ஒத்துக் கொள்ளவில்லை!

போர் முடிந்தாலும்—போரினால் ஏற்படும் அழிவுகள் எவ்வளவு கொடூரமானவை என்பதை நான் உணர்ந்தேன். ஆம்! என் கண்கள் ஓரத்திலும்—கன்னச் சரிவிலும்—கழுத்துப் பகுதியிலும் வெப்பக் கொப்புளங்கள் போட்ட கறுப்பு முத்திரைகள் அகலவில்லை! தொலைக்காட்சி—இனி என்னைப் பக்கத்தில் வரவிடாது என்று சிலர் சொல்லி விட்டனர். மேடையேறவும் கூட இனி வாய்ப்புகள் வரமாட்டா என்று சிலர் கூறினர்.

'ஆயிரக்கணக்கானவர் பார்வைகளில் பட்டுக் கொண்டிருந்த முகத்துக்கு இப்படி அழிவு நேர்ந்து விட்டதே' என்று என்பால் அன்பு கொண்ட அத்தனை பேரும் அனுதாபப்பட்டனர். எனக்கு 'மங்கலம்பாட' இப்படி ஒரு நோயா? என்று மனத்துள் வெதும்பியவர்கள்— 'எதற்கும் மருத்துவர்களைப் பாருங்கள்'. 'பிளாஸ்டிக்' அறுவை முறை கூட உங்கள் 'முகத்தை மீட்டுவிடக் கூடும்' என்றனர்.

சென்னை மாநகரில் சிறப்புமிக்க தோல் மருத்துவ வல்லுநர்கள் என் முகத்தில் முற்றுகை போட்டனர். மருத்துவ முறைகள் சிலபல மாநாடுகள் நடத்தின. அடிமேல் அடி வைத்த மருத்துவத்தினால், அம்மி போல் நகராதிருந்த அக்கிச் சுவடுகள் நெக்குவிட்டு நெகிழ்ந்தன. மறைந்தும் மங்கியும் கிடந்த ஒளி மெல்ல மெல்ல வெளியே வந்தது! களிம்புகளும் மாத்திரைகளும் தமக்குக் கிடைத்த வெற்றியின் மகிழ்ச்சியில் கைகுலுக்கிக் கொண்டன.

மறுபடியும் கடற்கரைச் சாலை வழியே தொலைக்காட்சி நிலையம் நோக்கி ஒரு மாலைப் பொழுது சென்றேன். கலங்கரை விளக்கு, என் பக்கமாகக் கண் திறந்து பார்த்துச் சரியாகி விட்டதா? என்று கேட்டது. வங்கக் கடல் அலைகள் எழுந்து எழுந்து என் முகம் பார்த்து 'இது உனக்கு மறுபிறவி' என்றன.

அன்று இரவு தொலைக்காட்சியில்,

'வணக்கம்! இன்றைய தலைப்புச் செய்திகள்' என்கிறேன் நான்.

உடனே என் காதுகளில் எதிரொலி கேட்கிறது.

'மீண்டும் தமிழன்பன் செய்தி வாசிக்கிறார்!'

சந்திப்பு: **கே. பாலசுப்ரமணியன்**

படம்: **எம். சண்முகம்**

இன்டென்சிவ் கேர் யூனிட்டின், சாத்தப்பட்டிருந்த கதவையே கவலையுடன் பார்த்துக் கொண்டிருந்தான் ரமணன். பக்கத்திலிருந்த அவன் தங்கை சுமி, தொண தொணத்துக் கொண்டிருந்தது அவன் கவலையை இன்னும் அதிகரித்தது.

"ஏன் அண்ணா? அப்பாவுக்கு ஒண்ணும் ஆயிடாதில்ல?"

"ஆயிடக் கூடாதுன்னு ஆண்டவனை வேண்டிக்கோ சுமி, வேற என்ன செய்யறது இப்போ?"

"எனக்கு ஒண்ணுமே புரிய மாட்டேங்கறது அண்ணா! எஸ்.டி.டி. போட்டுச் சொன்னவுடனேயே ப்ளேன்ல பறந்து வந்திருக்க."

"எமர்ஜென்சின்னு வந்தப்பறம் ட்ரெயினுக்கு நிக்க முடியுமா சுமி? ஷார்ட் பீரியட்ல பம்பாய் டு மெட்ராஸ் டிக்கெட் கெடக்கறது குதிரைக் கொம்பு."

"இல்லேண்ணா... இந்த ஆறு மாசத்துல அக்காவோட கல்யாணத்துக்குன்னே நீ கிட்டத்தட்ட, ஒரு லட்ச ரூபா பக்கம் டிராப்ட்டு எடுத்து அனுப்பிச்சிருக்கே."

"இப்போ எதுக்கு அதெல்லாம்?"

"வர்ற சம்பளம் வாய்க்கும், கைக்குமே போறாம இருக்குப்பா. பம்பாய்ல எப்படித்தான் சமாளிக்கப் போறேனோன்னு தெரியலைன்னு, நீ அங்கே வேலைல சேர்ந்துட்டு, மொதல் முறையா இங்கே வந்தப்போ சொன்னே."

"ஆமா... அது அப்போ. பல வருஷத்துக்கு முன்னாடி."

"இப்போ உங்கிட்ட எப்படி, திடீர்னு இவ்வளவு பணம்?"

"பம்பாய்க்குப் போனா, பிச்சைக்காரன்கூட, பணக்காரனா ஆயிடலாம். உழைக்கணும். வழிகளைத் தெரிஞ்சிக்கணும், அவ்வளவுதான். பம்பாயில பணம் பண்ண எவ்வளவோ வழிங்க இருக்கு."

"இல்லேண்ணா..."

"இதோ பார்... தொண தொணக்காதே... நீ சின்னப் பொண்ணு... ஐ.சி.யு. நர்ஸ் வர்றா பாரு. அப்பா எப்படி இருக்கார்னு கேளு."

மற்றவர்களுக்கு இல்லாத கவலை இவனுக்கு.

ரமணனுக்கு அடிவயிறு இலேசாகக் கலங்கியது.

# 3

# இரகசியங்கள்

"மிஸ்டர் மேனன்... உங்க கேஷியர் வர்றதுக்கு முன்னாடி ஒரு சின்ன ஹெல்ப்... கொலையான இந்த ரெண்டு கஸ்டமருங்களுடைய தற்போதைய பாங்க் பாலன்ஸ் நிலவரம், கடைசியா அவங்க கணக்குலேர்ந்து எப்பப்போ, எப்படி எப்படிப் பணம் பட்டுவாடா செய்யப்பட்டிருக்கு... இந்த விவரங்கள் உடனடியா எங்களுக்கு வேணும்..."

"இது சட்டப்படி குற்றம் சார். கோர்ட் கேட்டா மாத்திரமே..."

"மிஸ்டர் மேனன்... கோர்ட்டும் கேக்கப் போறது. ரெண்டு மர்டர். இது போலீஸ் என்கொயரி. ஒத்துழைக்கலேன்னா..."

"ஓகே..." கொஞ்சம் எரிச்சலுடன் தன் மேஜை மேல் தயாராக இருக்கும் கம்ப்யூட்டரைத் தட்டினார் மேனன்.

கணிப்பொறிதான் இதற்கெல்லாம் தயாராக இருக்கிறதே. அதனிடம் யாராவது ஏதாவது கேட்க வேண்டும் அவ்வளவுதான். சரியாகக் கேட்டால் பதிலும் சரியாக இருக்கும். இப்பொழுது அதனிடம் கேட்டது மேனன்.

"கேரள அம்மா கேஸ்ல, இப்போ பாலன்ஸ் ரூபா அஞ்சாயிரந்தான் இருக்கு. அந்த பார்சி அம்மா கணக்குல இருபதாயிரம் இருக்கு..."

"எடுக்கப்பட்டது எப்போ...?"

"இதோ சொல்றேன்" மேனன் இறந்து போன அந்தப் பெண்மணிகளின் கணக்கு வழக்குகளில் நுழைந்ததும் திடுக்கிட்டார்.

"சார்... மொதல் நாள் ரெண்டு லட்சம். அடுத்த நாளே மூணு லட்சம். அதாவது ரெண்டே நாள்ல அஞ்சு லட்சம். கேரளா அம்மா செல்ஃப் செக் மூலமா எடுத்திருக்காங்க. போன மாதம் அந்த பார்சி அம்மா அடுத்தடுத்து ரெண்டே நாள்ல மூணு லட்சம், நாலு லட்சம்னு ஏழு லட்சம் எடுத்திருக்காங்க. அது ரெண்டும்கூட செல்ஃப் செக் மூலமாத்தான்..."

"அதாவது அவங்களே அவங்க தேவைக்குப் பணம் எடுக்கறாப் போல. அப்படித் தானே...?"




# சொல்வதற்கு அல்ல...

**ஈஸ்வர்**

"எடுக்கப்பட்ட தேதிங்களை, சொல்லுங்க."

மேனன் கம்ப்யூட்டரைப் பார்த்துச் சொல்ல, அந்த நான்கு தேதிகளும் குறித்துக் கொள்ளப்பட்டன.

"இந்த ரெண்டு பேரும் பணம் எடுத்த அந்த நான்கு காசோலைகளையும் நாங்க உடனடியாப் பார்க்கணுமே..."

"இல்லே..." மேனன் தயங்கினார். டி.எஸ்.பி. மல்ஹோத்ரா பின்னால் இருக்கும் காவல்துறை ஆணையாளரைப் பார்த்தார். அவர் உடனடியாகத் தன் கையில் உள்ள கோப்பிலிருந்து, அரசாங்க முத்திரையுடன் கூடிய ஒரு கடிதத்தை, கூடவே போலீஸ் துறையின் ஓர் உத்தரவை அவரிடம் கொடுத்தார். அவை மேனனிடம் வந்தன.

"சீஷர் ஆர்டர்... போலீஸ் என்கொயரிக்காக தேவைப்படும் எந்த ஆவணங்களையும், சட்டப்படி போலீஸ் பெற்றுக் கொள்ளும் உத்தரவு."

விவரம் தெரிந்தவராக இருந்தாலும், வியர்த்தது மேனனுக்கு. உடனடியாக மணி அடித்து, தனக்கு அடுத்த நிலை மேலாளரை வரவழைத்தார் மேனன். நிலைமை விளக்கப்பட, அடுத்த சில நிமிடங்களில் அந்த நான்கு தேதி காசோலைகள், பெரிய பெரிய தின வவுச்சர்கள் கட்டுகளுடன் வந்தன. அந்தக் குறிப்

பிட்ட நான்கு வெவ்வேறு தேதி காசோலைகள், தேடிக் கண்டுபிடிக்கப்பட்ட பின்னர், அவற்றை ஆராய்ந்தனர் மணியும், மல்ஹோத்ராவும்.

"Pay... Self..." முறையான காசோலைகள். முறையாக எந்த அடித்தல் திருத்தல்களும் இல்லாமல், வாடிக்கையாளர்கள் முன்னும் பின்னும் முறைப்படி கையெழுத்து இட்டிருக்க, பணம் வழங்கப்பட்டிருந்தது. பார்சி பெண்மணி பணம் எடுத்த இரண்டு காசோலைகளின் பின்னால் அந்த அம்மையாரின் கையெழுத்துக்குக் கீழே ராம்லக்கன் சிங் என்று கையெழுத்து இடப்பட்டு, C/o. விலாசமாக அந்தக் காசோலைகளை விநியோகித்த பார்ஸிப் பெண்மணியின் விலாசமே எழுதப்பட்டு இருந்தது.

அவ்வாறே, அந்தப் பாலக்காட்டுப் பெண்மணி எடுத்த இரண்டு காசோலைகளிலும், பின்புறம் முறையாக, அந்த அம்மையாரின் கையெழுத்துக்குக் கீழே, நாணா என்று கையொப்பம் இடப்பட்டு, C/o. விலாசமாக, அந்தப் பாலக்காட்டுப் பெண்மணியின் மகாலட்சுமி அபார்ட்மெண்ட்ஸ் விலாசமே குறிக்கப்பட்டிருந்தது.

மல்ஹோத்ரா, மணியைக் கேள்விக்குறியுடன் பார்த்தார். பணம் பெற்றுக் கொண்டவர்களாகக் கையெழுத்து இட்டிருக்கும், இந்த ராம் லக்கன் சிங் யார்...? யார் இந்த நாணா...? மும்பையில் இவர்கள் எங்கிருக்கிறார்கள்? இவர்கள் கடைசியாகப் பணம் பெற்ற அன்று முறையே இந்த இரு பெண்மணிகளும் கொலையானதன் காரணம்தான் என்ன...?

போலீசின் இந்தக் கேட்கப்படாத கேள்வியைப் பார்வையாலேயே புரிந்து கொண்ட சீனியர் மானேஜர் மேனனுக்கு ஏனோ நடுக்கம் வந்தது.

கேஷியர் சிவாஜிராவ் உள்ளே வந்தான். நடுத்தர உயரம். இலேசான தொந்தி. நெற்றியில் வட்டமாக சின்ன குங்குமப் பொட்டு. நல்ல முறைப்பான முகம். முதலில் அறிமுகங்கள். விவரங்கள். மல்ஹோத்ரா, அந்த நான்கு காசோலைகளையும் சிவாஜிராவிடம் காண்பித்தார்.

"இந்த நாலு செக்குகளுக்கும் நீங்கதான் பணம் கொடுத்திருக்கீங்க... இல்லியா...?"

ராவ் ஒரு கேள்விக்குறியுடன் அந்த நான்கு காசோலைகளையும் ஆராய்ந்தான்.

பணம் கொடுத்ததற்கான முத்திரைகள், கொடுக்கப்பட்ட டோக்கன்கள், பணப் பட்டுவாடா விவரம், தன் கையொப்பம் இவற்றை முறையே சரி பார்த்துக் கொண்டான்.

"ஆமா, நான்தான் கொடுத்திருக்கேன்..."

"யாருக்குக் கொடுத்தீங்கன்னு சொல்ல முடியுமா...?"

"கஷ்டம்... ஒரு நாளைக்கு நூறு, இருநூறு பேருக்குக் கேஷ் குடுக்கறேன். ஒவ்வொரு முகமும் ஞாபகம் இருக்காது."

"இது போலீஸ் என்கொயரி..."

"ஸோ வாட்...? உண்மையைச் சொல்லித்தானே ஆகணும்."

"என்ன மிஸ்டர் ராவ். இவ்வளவு ஹ்யூஜ் பணம் கொடுத்து இருக்கீங்க. யாருக்குக் கொடுத்தோம்னு ஞாபகம் இருக்காதா?"

"சார்... இப்பல்லாம் ரெண்டு லட்சம், மூணு லட்சம்லாம் சர்வசாதாரணமா செக் மூலமா கஸ்டமர்ஸ் எடுக்கறாங்க. பேரர் செக்கா வேற கொடுத்தனுப்பறாங்க. பாங்க் காஷியரையெல்லாம் என்ன செய்யச் சொல்றீங்க? ஒரு மாசத்துல நூறு பேமெண்ட்டாவது இது மாதிரி நாங்க பண்றோம்..." பேசிக் கொண்டே வந்த சிவாஜிராவ் சற்றே நிறுத்தினான். பாலக்காட்டு பெண்மணி கொடுத்த காசோலையை மறுமுறை பார்த்தான்.

"சார்... இந்த நாணா... கொஞ்சம் நினைவுக்கு வருது சார். முழு கையெழுத்தும் போடுன்னு சொன்னேன்... முழுப் பெயரே இதான்னு சொல்லி கையெழுத்து மறுபடியும் போட்டான். ஆளும் கொஞ்சம் குள்ளமா, இலேசா குண்டா, நெத்தில ஒரு சந்தனப் பொட்டோட..."

"அடையாளம் காட்ட முடியுமா...?"

ராவ் யோசித்தான். "சார்... நான் எதுக்கும் எங்க யூனியன் லீடருங்களைக் கன்சல்ட் பண்ணிட்டுச் சொல்றேன் சார்..."

"கேஷியர்... இது கொலைக் கேசு... போலீஸ் என்கொயரி... ஒத்துழைக்க மறுக்கறீங்கன்னு..."

"சார் பயமுறுத்தாதீங்க. எனக்கும் தெரியும். நான் ஒத்துழைக்க மறுக்கலியே. எங்க யூனியன் லீடர்சைக் கேட்டதுக்கு அப்புறம் சொல்றேன்னுதானே சொன்னேன்."

இதற்கு மேல் இவனிடம் எவ்வளவு கேட்டாலும் இதே பாட்டைத்தான் பாடுவான். பயந்தவன் அல்ல. இவன் பின்னால் சக்திவாய்ந்த ஒரு தொழிற்சங்கம் இருக்கும். எம்.பி, அமைச்சர் என்று சங்கம் மூலம் போவான். ஒத்துழைப்புத் தர மறுத்தால்தான் போலீஸ் பாய முடியும்.

அவனைப் போக அனுமதிக்குமாறு மல்ஹோத்ராவுக்கு, மணி கண்ணசைவால்,

காட்டினான்.

"கேஷியரை இப்பொழுது விட்ருவோம். மாட்டேன்னு சொல்லலை. அதுவரை ஓகே... இப்போ நாம இன்னமும் நமக்குத் தேவையான, ஆனா தெரியாத சில விவரங்களைத் தேடுவோம்..."

மணியின் குரல் இப்பொழுது தீர்மானமாக இருந்தது.

"மிஸ்டர் மேனன்... உங்க பாங்குல இப்போ எல்லா வேலையுமே கம்ப்யூட்டர்மயமாயிடுச்சு இல்லே...?"

"95% ஆயிருச்சின்னு சொல்லலாம். இன்னும் சில வேலையெல்லாம் மேனுவலாத்தான் செய்யறோம்..."

"ஓகே... உங்க பாங்குல என்.ஆர்.ஐ கணக்குங்க அதிகமா இருக்கு இல்லே...?"

"மேனன் முகத்தில் பெருமிதம். ஆமா சார். க்ளோபல் லெவல்ல எங்க பாங்கை யாரும் பீட் பண்ண முடியாது. கிழக்கு மேற்குன்னு எல்லா கண்ட்ரிலயும் எங்க கிளைகள் உண்டு."

"ஸோ... வெளிநாட்டுப் பணம் நிறையவே வரும் இல்லியா...?"

"எக்கச்சக்கமா... சராசரியா மாசம் ரெண்டு மூணு கோடி ரூபா."

"அதுல உங்க கிளைக்கு மாத்திரம் ஆவரேஜா எவ்வளவு வரும்?"

"சராசரியா மாசம், நாற்பது அம்பது லட்சம்?"

"யார்கிட்டேர்ந்து, யாருக்கு வரும்?"

"வெளிநாட்டுல இருக்குற இந்தியர்கள், அவங்களுக்கு இங்கே இருக்குற கணக்குக்கு அனுப்புவாங்க. அதோட மாத்திரம் இல்லாம, இங்கயே இருக்குற அவங்க அப்பா, அம்மா, அண்ணன், தங்கைன்னு யாருக்காவது அனுப்புவாங்க."

"மிஸ்டர் மேனன்... எங்களுக்குத் தெரிய வேண்டியது எல்லாம் இதுதான். மாசா மாசம், யார் யாருக்கு எவ்வளவு பணம் வருதுன்னு தனியா உங்களால ஒரு லிஸ்ட் எடுத்துக் கொடுக்க முடியுமா...?"

"என்ன இப்படி கேட்டுட்டீங்க டி.எஸ்.பி சார். இது இன்பர்மேஷன் டெக்னாலஜி யுகம். என்ன மாதிரி லிஸ்ட் வேணும்னாலும் கெடக்கும். கமாண்ட்ஸ்தான் தெரியணும். ஆனா அதெல்லாம் எனக்குத் தெரியாது."

"அப்படின்னா...?"

"ஒவ்வொரு லெவல்ல எங்களுக்கு வேண்டிய ஆப்பரேஷன் மாத்திரம்தான் எங்களுக்குத் தெரியும். மத்தப்படி இதுக்கெல்லாம் மண்டை முழுக்க கம்ப்யூட்டர் சிந்



"ஏன் லேட்?"

"வாட்ச் ஒரு மணி நேரம் ஸ்லோ சார்?"

"அப்ப ஏன் இரண்டு மணி நேரம் லேட்?"

"நான் அது ஒரு மணி 'பாஸ்ட்'டுன்னு நினைச்சுட்டேன் சார்!"

— வெ. ராஜாராமன்

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

தனையாவே இருக்குற சில யங்ஸ்டர்ஸை வச்சிருக்கோம்."

மணி அடித்தார். வந்த ப்யூனிடம் விவரம் சொல்ல,

அடுத்த சில விநாடிகளில், முகம் மாத்திரமே இன்னமும் கம்ப்யூட்டர் திரையாக மாறாத, ஆனால் யோசித்துக் கொண்டே இருக்கும் முகத்துடன் ஓர் இளைஞன் வந்தான்.

"சார்... இது ரமேஷ். கம்ப்யூட்டர் இன் சார்ஜ். ரமேஷ் இது போலீஸ் என்கொயரி. நீதான் சொல்ல முடியும்..."

"ரமேஷ்... வெளிநாட்டுலேர்ந்து யார் யாருக்கு எப்பப்போ, எவ்வளவு பணம் வருதுன்னு எப்ப வேணும்னா உங்களால லிஸ்ட் கொடுக்க முடியுமா...?"

"முடியும்."

"சரி.. உங்களைத் தவிர வேறு யாராவது ஸ்டாஃபுங்க அந்த மாதிரி லிஸ்ட் எடுக்க முடியுமா...?"

"இந்த மாதிரி ஜெனரல் ஸ்டேட்மென்ட் லிஸ்ட் எடுக்கறதெல்லாம் சாதாரண லெவல் ஃபங்ஷன். அதனால, பொதுவா, எந்த கம்யூட்டர்லேர்ந்து யார் வேணும்னாலும் எடுக்கறா மாதிரிதான் வச்சிருக்கோம்..."

"இந்த மாதிரி லிஸ்ட்டைக் கடந்த ஒரு வருஷத்துல யாரு, எப்போ எடுத்திருக்காங்கன்னு சொல்ல முடியுமா?"

ரமேஷ், மேனன் அருகே உள்ள கணிப்பொறியிடம் போனான். ஏதோ பட்டன்களைக் கொஞ்ச நேரம் தட்டினான். கணிப்பொறி ஒரு பெயரைக் காட்டியது. மேனன் வெலவெலத்துப் போனார்!

(தொடரும்)

# போட்டிக்கதை – 5

**தா**த்தாவை வெளியே கொண்டு வந்தார்கள். ஆறு பேர் தூக்க முடியாமல் தூக்கி, வெளியே போட்டிருந்த கட்டிலில் கிடத்தினார்கள். வயிறு உப்பாமல் இருக்க வயிற்றில் மண்வெட்டியை வைத்துக் கட்டியிருந்தார்கள். தாத்தாவின் மேலிருந்த வெள்ளைக் கோடித் துணிகளையெல்லாம் அவிழ்த்தார்கள். மூக்கிலிருந்த பஞ்சையும் நெற்றியிலிருந்த காசையும் நான்தான் எடுத்தேன்.

"குளிப்பாட்டணும், பொம்பளங்க எல்லாம் அந்தாண்ட போங்க. யோவ், அப்படியே துணியால மூடாக்கு போடுய்யா!" – தாத்தா தெரியாதவாறு நாலு பக்கமும்



துணியால் ஒரு இன்ஸ்டண்ட் மறைவு போட்டார்கள். தண்ணீர் மட்டும் என் காலை நனைத்தது.

"பேரப் புள்ளங்க எல்லாம் நெய்ப்பந்தம் புடிக்கனும். நெய்ப் பந்தத்த வாங்கிட்டு அப்பிடியே பெரியவரை மூணு தடவ சுத்தி வாங்க!" – ஒரு பெரிசு சொல்லிக் கொண்டிருந்தது.

சாரு. அதனால அதுங்க புள்ளைங்க எல்லாம் டாக்டரும் இஞ்ஜினியருமா இருக்கு. நமக்கு அக்கும் இல்ல. வழியுமில்ல. இந்த ஊருக்குள்ளேயே கெடந்து மாரடிக்க வேண்டியிருக்கு!" – யாரோ ஒரு குண்டுப் பெண் அலுத்துக் கொண்டாள்.

போன தடவை ஊருக்கு வந்திருந்தப்ப தாத்தா பேச்சு வாக்கில் சொன்னார். "கதிர்வேலு! இப்பெல்லாம் கிராமத்துல இருக்கிறதுக்கு யாருக்குமே புடிக்கிறது இல்லே. இங்க இருக்கிறவனும் புடிச்சிப் போயி இருக்கிறதில்ல. தலையெழுத்தேன்னு... வேற

# வெந்து தணிந்தது

வழியில்லாம இருக்கான். கிராமத்துல இருந்து பட்டணத்துக்குப் போற பசங்க, அதுக்கப்புறம் கிராமத்துக்கு வர்றதுக்கு பிரியப்படறதில்ல. ஏதோ டூர் வர்ற மாதிரி ராத்திரி வந்துட்டு காலையில பறந்து போயிடுறானுங்க. உங்கப்பன் ஊருக்கு வந்து எத்தன வருஷமாகுது தெரியுமா? ஏழு வருஷத்துக்கு முன்னாடி ஒம் பாட்டி செத்ததுக்கு வந்தான். அவ்வளவுதான். அவன் பெரிய ஆபீசரு இல்ல, அதனாலதான். நா செத்தா வருவானோ... இல்லியோ..." – தாத்தா என்னிடம் சொன்ன போது அவரையும் அறியாமல் கண் கலங்கியதை உணர்ந்தேன்.

பேரப் புள்ளங்க நெய்ப் பந்தம் பிடிப்பதை எல்லாரும் வேடிக்கை பார்த்தார்கள்.

"அந்த நீலக்கலர் சட்ட போட்ட பையன்தான் பெரியண்ணனோட மூத்த மகன். பெரிய இஞ்ஜினீயராம். முடிய குட்டையா வெட்டியிருக்குல்ல அதான் ரெண்டாவது பொண்ணு. டாக்டராம். பின்னாடி வர்ற இரண்டு பசங்களும் சின்னக்காவோட பசங்க. இவனுங்க ரெண்டு பேருமே பைலட்டாம். அதான் ஏரோப்ளேன் ஓட்டறவனுங்களாம்!" – கூட்டத்திற்கு எங்களை ஒரு ஜீவன் அறிமுகப் படுத்திக் கொண்டிருந்தது.

"பெரியவரு புள்ளங்கள நல்லா படிக்க வச்

நா. சுகந்தி

அலங்காரம் செய்யப்பட்ட தேரில் தாத்தாவை வைத்தார்கள். பூமாலை அலங்காரத்திற்கென்றே தனி ஆளை வரவழைத்திருந்தார்கள். தாத்தாவிற்கு இந்த பகட்டு பிடிக்காது. ஆனால் அவரால் எப்படி இதைத் தடுக்க முடியும்?

வீட்டிலிருந்த தாத்தா வெளியேறினார்(?). வெளியேற்றப்பட்டார். கூட்டம் மெதுவாக நகர்ந்தது. அப்பா கொள்ளிச் சட்டியுடன் முன்னாடி போய்க் கொண்டிருந்தார்.

'கதிர்வேலு இன்னிக்கு ஒரு வெவ்சாயக் கூட்டத்துக்குப் போனேன். கூட்டத்துக்கு வந்திருந்தவங்க எல்லாம் என்ன மாதிரி

வயசானவங்கதான். வாலிப பசங்களப் பாக்க முடியலை. என்னமோ தெரியலை. திடீர்னு மனசு விட்டுப் போயிருச்சு. யாரோ என் நெஞ்சுல குத்துன மாதிரி ஒரு வலி. வெவசாயம் இன்னிய தேதிக்கு ரொம்பக் கேவலமாப் போயிருச்சு. அத எல்லாரும் கேவலமா நெனக்க ஆரம்பிச்சுட்டாங்க. எங்க தாத்தா அந்தக் காலத்துல நாலு மணிக்கு கலப்பையைத் தூக்கி ஒரு தோள்ல போட்டுக்கிட்டு, மறு தோள்ல என்னைத் தூக்கிட்டு போவாரு. அவரு கலப்ப புடிச்சு உழற அழக இன்னிக்கெல்லாம் சொல் விட்டே இருக்கலாம்!' - தாத்தா போன பொங்கலின் போது என்னிடம் சொன்ன வார்த்தைகள்.

**கூ**ட்டம் மெதுவாக ஊரைச் சுற்றி போய்க் கொண்டிருந்தது. பட்டாசு சத்தம் ஊரைத் தூக்கியது. பொரி, பூவோடு சில்லரைக் காசையும் இறைத்தார்கள். காசைக் கண்டபடி செலவு செய்வது தாத்தாவுக்குப் பிடிக்காது. அவர் முன்னால காசை இறைக்கிறார்கள். ம்... அவருக்கு எப்படிப் புரியும்?

'கதிர்வேலு இன்னிய தேதிக்கு விவசாயத்த ஆர்வமா செய்யறதுக்கு ஆளில்லை. செஞ்சே ஆகணும்கிற வீராப்புக்குத்தான் நெறைய பேர் இன்னிக்கு வெவசாயம் பண்றான். இதுல லாபமே இல்ல. எப்படி லாபம் வரும்? மாதம் மும்மாரிங்கறது கனவா போயிருச்சு. வருஷம் மும்மாரியே அதிசயம். நிலத்தடி தண்ணி ஆயிரம் அடியிலதான் கெடைக்குது. வசதி இருக்கறவன் போர் போடுவான். இல்லாதவன் என்னத்த செய்வான்?'

தாத்தா என் காதருகே பேசுவது போல் கேட்டது. கூட்டம் ஊர்ந்து கொண்டிருந்தது. என் மனசு தாத்தாவின் வார்த்தைகளின் மேல் ஊர்ந்து கொண்டிருந்தது.

'கதிர்வேலு, நெலம்கிறது நம்ம தாய் மாதிரி. பெத்த தாயி நம்மள வளக்கிற மாதிரி தான் இந்தத் தாயும் சோறு போட்டு வளக்குறா. அவ வயசாகிப் போனா நாம உக்கார வச்சு சோறு போடுறது இல்லியா? ஆனா இந்தத் தாய மட்டும் நாம எல்லாரும் மறந்துட்டோம். இந்தத் தாயி நெறய சோறு போடணும்கிறதுக்காக இரண்டாம் உலகப் போர்ல மீந்து போன மருந்தையெல்லாம் உரம்னு சொல்லி இந்த மண்ணுல போட்டோம். இன்னிக்கு என்ன ஆச்சு? மண்ணு கெட்டுப் போயிருச்சு. அதுல சத்து இல்ல. யூரியா, பாஸ்பேட்டுன்னு உரத்தப் போட்டு மண்ணுல இருக்குற சத்தையும் உறிஞ்சி பயிர் செய்யிறோம். எந்தலமொற மட்டுந்தான் வெவசாயம் செய்யிது. அதனால அதப்பத்திக் கவலைப்படுறோம். உங்க தலமொற எங்கியோ போயிருச்சு. இந்தத் தாயைப் பத்திக் கவலைப்பட ஆளில்லாம அது நாதியத்து இருக்குது. இன்னிக்கு நம்ம கிராமத்துல மொத்தம் பதினாறு பேருதான் வெவசாயம் பண்றான். மத்த நெலமெல்லாம் தரிசா கெடக்கு. ஒலகம் நாகரிகமா மாறுனதுக்குக் காரணமே வெவசாயந்தான். ஆனா பயபுள்ளீக இன்னிக்கு வெவசாயம் பண்றது நாகரிகமில்லேன்னு நெனக்கிறீங்க. இதப் பாக்கும்போதெல்லாம் என் நெஞ்சே வேகுது. இதுக்கு ஒரு முடிவு கட்டாம போயிட்டனா என் நெஞ்சே வேகாதுப்பா... வேகாது!' - அன்று தாத்தா வரப்பில் நடந்து கொண்டே குலுங்கிக் குலுங்கி அழுதது என்னைப் பாதிக்கவில்லை. வயசானவர் ஏதோ உளறுகிறார் என்றே நினைத்தேன். ஆனால் இப்போது ஏதோ மனசைப் பிசைந்தது.

**சு**டுகாட்டிற்கு வந்து விட்டோம். கூட்டத்தில் பாதிப் பேர் சுடுகாட்டின் எல்லையிலேயே நின்று கொண்டார்கள். தேரைத் தரையில் வைத்தார்கள். தாத்தாவை அடுக்கி வைத்திருந்த கட்டைகளின் மேல் தூக்கிக் கொண்டு வந்து வைத்தார்கள். அவரின் மேல் மேலும் மரக் கட்டைகளை அடுக்கினார்கள்.

---

**''தலைவரை எதுக்கு ஆஸ்பத்திரியில சேர்த்திருக்காங்க?''**

**''அம்மா பேசி முடியற வரைக்கும் விடாம கும்பிட்டு இருந்ததனால, கையைப் பிரிக்க முடியலையாம்!''**

**- குடந்தை கே. ஆர். ரவிக்குமார்**



என் ஒவ்வொரு பிறந்த நாளையும் தாத்தாவோடுதான் கொண்டாடுவேன். இன்னும் பதின்மூன்று நாட்கள் இருக்கிறது என் பிறந்த நாளுக்கு. ஆனால் தாத்தா இல்லையே என்னோடு கொண்டாடுவதற்கு.

'கதிர்வேலு எல்லாரும் பொறந்த நாளைக்கு புதுத்துணி போட்டு கேக் வெட்டி தண்ணியடிச்சுக் கொண்டாடினாத்தான் பொறந்த நாளுன்னு உங்க தலைமொற நெனக்குது. கேக்கு வெட்டுங்க. வேண்டாங்கல. ஆனா ஒவ்வொரு பொறந்த நாளிலேயும் ஒவ்வொருத்தரும் ஒரு மரம் நடணும். அப்படி நாட்ல இருக்குற தொண்ணூறு கோடிப் பேர்ல கொறஞ்சது ஒரு அறுபது கோடிப் பேர் ஒரே ஒரு வருஷம் இத செஞ்சா ஊரெல்லாம் சோலவனமா இருக்குமில்ல? இதச் சொன்னா நீயே என்ன... கெழவனுக்கு ரொம்ப கிறுக்குப் புடிச்சு போயிருச்சுன்னு தான் நெனப்ப. இல்லடா ராசா?' – ஆதரவாய் அன்றைக்குத் தழுவின தாத்தாவின் கைகளைத் தேடினேன். தாத்தாவின் கையைப் பிடித்து 'இல்ல தாத்தா'ன்னு சொல்ல வேண்டும் என்று மனது துடித்தது.

அப்பா கொள்ளிக் கட்டையுடன் தாத்தாவைச் சுற்றி வந்தார். அவர் நெஞ்சருகே வைத்திருந்த கூடத்தைப் பற்ற வைத்தார். உடனே பற்றிக் கொண்டது. கொஞ்சம் கொஞ்சமாக தீ பற்றி எரிய ஆரம்பித்தது. எரிவது தீயல்ல. தாத்தாவின் ஆதங்கம், எதிர்பார்ப்பு என்பது எனக்கு மட்டுமே புரிந்தது. கடைசியாக அப்பா ஒருமுறை நின்று உற்றுப் பார்த்துக் கண்களைத் துடைத்துக் கொண்டார்.

எனக்கு அங்கிருந்து நகரப் பிடிக்கவேயில்லை. அப்படியே நின்றேன். எல்லாரும் வற்புறுத்தினார்கள். நகரவேயில்லை.

'கதிர்வேலு, கம்ப்யூட்டர்ல என்னென்னமோ பண்றியாமே! ஏங்கண்ணு அத வச்சு வெவசாயத்துல ஒண்ணும் பண்ண முடியாதா? செத்துப் போயிட்டிருக்கிற இந்த மண்ணு... எந்தாயி பொழைக்க வழியே இல்லியா? கிழே போயிக்கிட்டே இருக்குற நெலத்தடி தண்ணி மேல வர்றதுக்கு வழியே இல்லியா? உரம், பூச்சி மருந்துன்னு போட்டுக்கிட்டேயிருக்கிற விஷத்திலிருந்து எந்தாயிக்கு விடுதலை இல்லியா?' – தாத்தா என்னைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு அன்று கெஞ்சியது இப்போது கேட்டுக் கொண்டிருப்பதுபோல் இருந்தது.

"அய்யா!" – வெட்டியானின் குரல்.

தலையை நிமிர்ந்து என்ன என்று கண்களால் கேட்டேன்.

"அய்யா நெஞ்சுக்கூடு வேகவே மாட்டேங்குதுங்க சாமீ. நானும் எத்தனையோ பொணத்த எரிச்சுருக்கனுங்க. ஆனா இப்படி அஞ்சு மணி நேரமா ஒரு பொணத்தோட போராடினதே இல்லீங்க. நெஞ்சுக்கூடு வேகலீன்னா மனசுல தீராத ஏக்கம் இருக்குன்னு சொல்லுவாங்கய்யா!"

– வெட்டியான் கூறிக் கொண்டிருந்தான்.

"தாத்தா நான் பேசறது உனக்கு மட்டும் கேக்கும்னு எனக்குத் தெரியும். நீங்க கவலைப்பட்ட மாதிரி உங்க உயிரான நெலத்தை அப்பாவோ, அத்தையோ கூறுபோட விட மாட்டேன். செய்யறேன். நீங்க கேட்ட மாதிரி செய்யறேன். என் பேச்சு சப்தம் கேக்குதா தாத்தா! கேக்குதா?"



**"நீங்க டெண்டுல்கரோட பரம விசிறியா இருக்கலாம். ஆனால் அதுக்காக அவருக்கு இடுப்பு வலின்னா நீங்க லீவு எடுக்கிறது நல்லா இல்லை!"**

**– வெ. ராஜாராமன்**

– முதன் முதலாக அழுதேன். கண்ணீர் கண்களைத் தாண்டி நிலத்தில் விழுந்தது. அது கண்ணீரல்ல, ஓர் உதயத்தின் ஆரம்பத் துளி. அது தாத்தாவுக்குப் புரியும்.

"பெரியவரு நெஞ்சுக்கூடு இப்பதாங்க வேக ஆரம்பிச்சிருக்கு!" வெட்டியான் குரலில் சந்தோஷம்.

அதிவேகத் தபாலில் கதிர்வேலு – சீனியர் சாஃப்ட்வேர் இஞ்ஜினியரின் ராஜினாமா கடிதம் பறந்து கொண்டிருந்தது. ஒரு கிராமத்திலிருந்து சென்னைப் பட்டினம் நோக்கி.

இது ஆரம்பம்.... இந்தியாவின் வளைந்த 'முதுகெலும்பு' நிமிர்வதற்கான ஆரம்பம்.

# பொன்னியின் செல்வன்



## முப்பத்தொன்பதாம் அத்தியாயம்

## கஜேந்திர மோட்சம்



இத்தனை நேரமும் வானதி சிவிகையிலேயே இருந்தாள். சிவிகையை இப்போது இறக்கிப் பூமியில் வைத்தார்கள். வானதி பல்லக்கிலிருந்து வெளியே வந்து நின்றாள். நெருங்கி வந்த ஊர்வலத்தைப் பார்த்துக் கொண்டே நின்றாள். காளாமுகர்களும் அதே திசையைப் பார்த்துக்கொண்டு மௌனமாயிருந்தார்கள். தண்ணீர் ததும்பிய கழனிகளில் தவளைகள் இட்ட சத்தமும் வாடைக் காற்றில் மரக் கிளைகள் அசைந்த சத்தமும் மட்டுமே கேட்டன.

ஓடித் தப்பிக்கலாம் என்ற எண்ணமே வானதிக்குத் தோன்றவில்லை. அது இயலாத காரியம் என்று அவளுக்குத் தெரிந்திருந்தது. இந்தக் காளாமுகர்களிடமிருந்து ஏதேனும் யுக்தி செய்து தப்பினாலும் தப்பலாம். அன்பில் அநிருத்தரிடமிருந்து தப்புவது கனவிலும் நினைக்க முடியாத காரியம். அவருடைய அறிவாற்றலும் இராஜ தந்திரமும் சூழ்ச்சித் திறனும் உலகப் பிரசித்தமானது. அதோடு, சக்கரவர்த்தியிடம் அவர் மிகச் செல்வாக்கு உடையவர் என்பதும் உலகம் அறிந்தது. பழையாறையிலிருந்த அரண்மனைப் பெண்டிர் சோழ சாம்ராஜ்யத்தின் மற்ற அதிகாரிகளையும் சிற்றரசர்களையும் பற்றி வம்பு பேசுவார்கள். ஆனால் அநிருத்தரைப் பற்றி எதுவும் பேச மாட்டார்கள். அந்தப்புரத்தின் உள் அறைகளிலே மிக மிக அந்தரங்கமாகப் பேசினாலும் அவருடைய காதுக்கு எட்டி விடும் என்று பயப்படு

வார்கள். சக்கரவர்த்தி வேறு எதைப் பொறுத்தாலும் தம் அந்தரங்கப் பிரியத்துக்கும் மரியாதைக்கும் உரிய முதன் மந்திரியைப் பற்றி யாரும் அவதூறு பேசுவதைப் பொறுக்க மாட்டார் என்று அனைவரும் அறிந்திருந்தார்கள்.

இவையெல்லாம் வானதிக்கும் தெரிந்திருந்தன. இளவரசி குந்தவையும் அவரிடம் பெரும் மதிப்பு வைத்திருந்ததை அவள் அறிந்திருந்தாள். ஆகையால் அவரிடமிருந்து தனக்கு உதவியும் பாதுகாப்பும் கிடைக்கும் என்று எதிர்பார்த்தாள். இந்தக் காளாமுகர்கள் வேறு விதமாகச் சொன்னதும் அவளுடைய மனோதிடம் குலைந்தது. அவர் எதற்காக இந்த அநாதைப் பெண்ணைக் கைப்பறச் சொல்லியிருக்க வேண்டும்...? ஒருவேளை இவர்கள் பொய் சொல்லுகிறார்களோ, என்னமோ! வருவது ஒருவேளை பழுவேட்டரையர்களாக இருக்கலாம். அல்லது மதுராந்தகரும் அவருடைய பரிவாரங்களாகவும் இருக்கலாம்... யாராயிருந்தாலும், ஒன்று நிச்சயம். இளவரசரைப் பற்றித் தனக்குத் தெரிந்த செய்தியை எவரிடமும் சொல்லக் கூடாது. அதனால் தனக்கு என்ன நேர்ந்தாலும் சரிதான்! தன் உயிரே போவதாயிருந்தாலும் சரிதான்...! இதைப் பற்றி எண்ணியதும் வானதி குலைந்த மனோதிடத்தை மீண்டும் பெற்றாள். வரட்டும், யாராயிருந்தாலும் வரட்டும். நான் கொடும்பாளூர் வீரவேளிர் பரம்பரையில் வந்தவள் என்பதை நிலைநாட்டுகிறேன். குந்தவைப் பிராட்டியின் அந்தரங்கத் தோழி என்பதையும் காட்டிக் கொடுக்கிறேன்.

ஊர்வலத்தில் ஒரு பல்லக்கு மட்டும் பிரிந்து முன்னால் வந்தது. மற்ற யானை, குதிரை பரிவாரங்கள் எல்லாம் சற்றுப் பின்னால் நின்றன.

முன்னால் வந்த பல்லக்கு வானதியின் அருகில் வந்ததும் பூமியில் இறக்கப்பட்டது. அதனுள்ளிருந்து முதன் மந்திரி அநிருத்தர் வெளியே வந்து நின்றார்.

அவர் சமிக்ஞை காட்டவே, சிவிகை சுமந்தவர்களும், காளாமுகர்களும் அப்பால் நகர்ந்து சென்றார்கள்.

அநிருத்தர் வானதியை மேலும் கீழும் உற்றுப் பார்த்து, "இது என்ன விந்தை! நான் காண்பது கனவு அல்லவே? என் முன்னால் நிற்பது கொடும்பாளூர் இளவரசிதானே! ஈழத்துப் போரில் வீர சொர்க்கம் எய்திய பராந்தகன் சிறிய வேளாரின் செல்வப் புதல்வி வானதிதானே?" என்று கேட்டார்.

"ஆம், ஐயா! நான் காண்பதும் கனவு அல்லவே? என் முன்னால் நிற்பது சோழ சாம்ராஜ்ய மக்களின் பயபக்தி மரியாதைக்குரிய அன்பில் அநிருத்தப் பிரம்மராயர்தானே? சக்கரவர்த்தியின் அந்தரங்க அபிமானத்தைப் பெற்ற முதன் மந்திரியார்தானே?" என்றாள் வானதி.

"தாயே! நான் யார் என்பதை நீ அறிந்திருப்பது பற்றிச் சந்தோஷப் படுகிறேன். இதனால், என்னுடைய வேலை எளிதாகும். உனக்கும் அதிக கஷ்டம் கொடுக்க வேண்டிய ஏற்படாது!"

"ஆகா! அதைப் பற்றித் தங்களுக்குக்

அமரர் கல்கி

கவலை வேண்டாம். தங்களைப் போன்ற அமைச்சர் திலகத்தினால் எனக்குக் கஷ்டம் நேர்ந்தால் அதை நான் பொருட்படுத்த மாட்டேன். அதைக் கஷ்டமாகவே கருத மாட்டேன்.''

''உன் வார்த்தைகள் மேலும் எனக்குத் திருப்தி அளிக்கின்றன. உன்னை அதிகமாகக் கஷ்டப்படுத்தும் உத்தேசமும் எனக்கு இல்லை. இரண்டொரு கேள்விகள் உன்னிடம் கேட்கப் போகிறேன். அவற்றுக்கு மறுமொழி சொல்லி விட்டால் போதும். பிறகு...''

''ஐயா! நீங்கள் என்னைக் கேள்வி கேட்பதற்கு முன்னால் நான் கேட்பதற்குச் சில கேள்விகள் இருக்கின்றன...''

''கேள், அம்மா! தயக்கமில்லாமல் கேள். நான் உன் தந்தையையொத்தவன். உன்னை என் மகளாகவே கருதுகிறேன். சில நாளைக்கு முன்பு உன் பெரிய தகப்பனார் சேநாதிபதி பூதி விக்கிரம கேசரியை மாதோட்டத்தில் சந்தித்தேன். உன்னை என்னுடைய மகளைப் போல் பாவித்துக் கவனித்துக் கொள்ள வேண்டுமென்று சொன்னார். அப்படியே வாக்களித்தேன்...''

''வந்தனம், என் தந்தையே! குழந்தைப் பிராயத்தில் தகப்பனை இழந்த எனக்குத் தந்தையாயிருப்பதாக முன்னொரு தடவை சக்கரவர்த்தி வாக்களித்தார்; இப்போது தாங்கள் ஒரு தந்தை தோன்றியிருக்கிறீர்கள். இனி எனக்கு என்ன குறை?''

''நீ என்னிடம் கேட்க விரும்பியதைச் சீக்கிரம் கேள். அம்மா! வானம் கறுத்து இருள் சூழ்கிறது. மழை வரும்போல தோன்றுகிறது.''

''தந்தையே! சாலையோடு பல்லக்கில் பிரயாணம் செய்து கொண்டிருந்த தங்கள் அருமை மகளை இந்தக் காளாமுகர்களை விட்டு வழி மறித்து இவ்விடம் பலவந்தமாகக் கொண்டு சேர்க்கும்படி செய்தது தாங்கள்தானா? இந்த அபலைப் பெண்ணின் கையைத் தீவர்த்திப் பிழம்பில் காட்டி எரிக்கும்படி சொன்னதும் தாங்கள்தானா? இந்தப் பயங்கரமான மனிதர்கள் அவ்வாறு தங்கள் மீது குற்றம் சாட்டினார்கள். நான் அதை நம்பவில்லை...''

''குழந்தாய்! இவர்கள் கூறியது உண்மையே. நான்தான் இவர்களுக்கு அவ்விதம் கட்டளையிட்டேன். அது குற்றமாயிருந்தால், அதற்குப் பொறுப்பாளி நானே...''

''மூன்று உலகமும் புகழ்பெற்ற சோழ நாட்டு முதன்மந்திரியே! தங்கள் பேச்சு எனக்கு வியப்பு அளிக்கிறது. 'குற்றமாயிருந்தால்' என்றீர்களே! தாங்கள் சகல தர்ம சாஸ்திரங்களையும் நீதி சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்தவர். சோழ சாம்ராஜ்யத்தின் சட்ட திட்டங்களையெல்லாம் நடத்தி வைக்கும் பொறுப்பு வாய்ந்தவர். நீதிக்கு மாறாகச் சக்கரவர்த்தியே காரியம் செய்தாலும் அதைக் கண்டித்து நியாயமாக நடக்கச் செய்யும் உரிமை வாய்ந்தவர். ஒரு காரியம் குற்றமா, இல்லையா என்பது தங்களுக்குத் தெரியாவிட்டால், வேறு யாருக்குத் தெரியும்? சாலையோடு பிரயாணம் செய்யும் அபலைப் பெண் ஒருத்தியைப் பலவந்தமாக வழி மறித்துத் தனி இடத்துக்குக் கொண்டு சேர்ப்பதும், அந்தப் பெண்ணைச் சித்திரவதை செய்வதாகப் பயமுறுத்துவதும் குற்றமா, இல்லையா என்று தங்களுக்குத் தெரியாமற் போனால் வேறு யாரைக் கேட்டுத் தெரிந்து கொள்வீர்கள்? சுந்தர சோழ சக்கரவர்த்தியின் இராஜ்யத்தில் வழிப் பிரயாணத்தில் எவ்வித பயமும் கிடையாது என்று கேள்விப் பட்டிருந்தேன். அதிலும், பெண்களைத் துன்புறுத்தும் துஷ்டர்களுக்குக் கடுந்தண்டனை உண்டு என்றும் கேள்விப்பட்டிருந்தேன். அது குற்றமா, இல்லையா என்றே தங்களுக்குச் சந்தேகம் தோன்றியிருப்பது மிக வியப்பான காரியம் அல்லவா?''

முதன்மந்திரி அநிருத்தர் திணறிப் போனார். இடையில் குறுக்கிட்டுப் பேச அவர் இரண்டு தடவை முயன்றும் பயன்படவில்லை. இப்போது அவர் குரலைக் கடுமைப் படுத்திக்கொண்டு, ''பெண்ணே! கொஞ்சம் பொறு! உன் பேச்சுத் திறமை முழுவதையும் காட்டி விடாதே! 'குற்றமா, இல்லையா?' என்று நான் சந்தேகப்படுவதற்குக் காரணம் இல்

லாமற் போகவில்லை. அது நான் கேட்கும் கேள்விக்கு நீ சொல்லும் விடையைப் பொறுத்திருக்கிறது. முக்கியமான இராஜாங்க இரகசியம் ஒன்றை அறிந்த பெண் ஒருத்தி நாகைப்பட்டினம் சாலையில் போவதாக நான் கேள்விப்பட்டேன். அந்தப் பெண்ணைத் தடுத்து நிறுத்தும்படி என் மனிதர்களுக்குக் கட்டளையிட்டேன். அவர்கள் என்னுடைய கட்டளையை நிறைவேற்றுவதாக எண்ணிக் கொண்டு செய்திருக்கிறார்கள். ஒரு வேளை அவர்கள் தவறு செய்திருக்கலாம். இராஜாங்க சதி வேலையில் ஈடுபட்ட பெண்ணுக்குப் பதிலாகக் குடந்தை சோதிடரிடம் சோதிடம் கேட்டுவிட்டுத் திரும்பிய உன்னைக் கைப்பற்றியிருக்கக் கூடும். மகளே! நீ சொல்! குடந்தையிலிருந்து பழையாறைக்குத் திரும்புவதுதான் உன் நோக்கமா? சிவிகை தூக்கிகள் தவறாக உன்னை நாகைப்பட்டினம் சாலையில் கொண்டு போனார்களா? இராஜாங்கத்துக்கு விரோதமாகச் சதி செய்த ஒருவனை அந்தரங்கமாகப் பார்க்கும் நோக்கத்துடன் நீ நாகைப்பட்டினத்துக்குப் புறப்படவில்லையே...? இல்லையென்று நீ சொல்லி நிரூபித்தாயானால், இவர்கள் செய்தது குற்றமாகும். அதில் எனக்கும் பங்கு உண்டுதான்! என்ன சொல்கிறாய், பெண்ணே? இன்னும் தெளிவாகவே கேட்டு விடுகிறேன். இளவரசன் அருள்மொழிவர்மனை இரகசியமாகச் சந்திப்பதற்காக நீ நாகைப்பட்டினத்துக்குப் புறப்படவில்லையே...?"

இளவரசி இப்போது கதிகலங்கிப் போனாள். முதன்மந்திரி அநிருத்தரை எரித்து விடலாமா என்று அவளுக்கு அவ்வளவு ஆத்திரம் வந்தது. ஆனால் ஆத்திரத்தை வெளியில் காட்டுவதில் பயனில்லை என்று உணர்ந்தாள். கள்ளங்கபடம் அறியாதிருந்த அந்தச் சாதுப் பெண்ணுக்கு அப்போது எங்கிருந்தோ ஆழ்ந்து சிந்திக்கும் சக்தியும் சூழ்ச்சித் திறனும் ஏற்பட்டிருந்தன. ஆகையால், முதன் மந்திரியின் கேள்விக்கு நேரடியாகப் பதில் சொல்லாமல், "ஐயா! இது என்ன வார்த்தை! இளவரசர் அருள்மொழி வர்மரையா இராஜாங்கத்துக்கு விரோதமாகச் சதி செய்தார் என்று சொல்லுகிறீர்கள்? சக்கரவர்த்தியின் அருமைக் குமாரரைப் பற்றி நீர் இவ்விதம் பேசுவது குற்றம் அல்லவா? சோழ குலத்துக்கு எதிரான சதி அல்லவா? ஆகா! இதைப் பற்றி நான் உடனே குந்தவைப் பிராட்டியிடம் சொல்லியாக வேண்டும்!" என்றாள்.

"பேஷாகச் சொல், தாயே! என்னுடைய கேள்விக்குப் பதில் சொல்லி விட்டால், பிறகு ஒருகணங்கூட இங்கே தாமதிக்க வேண்டிய அவசியமில்லை. நானே உன்னை இளையபிராட்டியிடம் பத்திரமாய்க் கொண்டு போய்ச் சேர்ப்பிக்கிறேன்..."

"தங்களுடைய கேள்விக்குப் பதில் சொல்லாவிட்டால்...?"

"சொல்லாவிட்டால் என்பதே கிடையாது, தாயே! இந்தக் கிழவனிடமிருந்து அவ்வளவு சுலபமாக யாரும் தப்ப முடியாது. என் கேள்விக்குப் பதில் சொல்லியே தீர வேண்டும்" என்றார் அமைச்சர்.

"ஐயா! சர்வ வல்லமை படைத்த முதல்மந்திரி அநிருத்தப் பிரம்மராயரே! ஒரு சக்தியும் இல்லாத இந்த ஏழை அபலைப் பெண்ணிடமிருந்து தாங்கள் இளவரசரைப் பற்றி எதுவும் அறிய முடியாது. இந்த யமகிங்கரர்கள் சற்று முன் பயமுறுத்தியது போல் என் கையைத் தீயிலிட்டு எரித்த போதிலும் நான் ஒன்றும் சொல்லப் போவதில்லை."

"கொடும்பாளூர் வீர வேளிர் குலத்துதித்த கோமகளே! உன்னுடைய மன உறுதியைக் கண்டு மெச்சுகிறேன். ஆனால் இளவரசரைப் பற்றி ஒரு விவரமும் சொல்ல மாட்டேன் என்று நீ கூறினாயே, அது அவ்வளவு சரியன்று. ஏற்கெனவே, சில விவரங்கள் நீ சொல்லி விட்டாய். இன்னும் ஒரு விஷயத்தையும் சொல்லி விட்டால், அதிக நஷ்டம் ஒன்றும் நேர்ந்து விடாது. என் வேலையும் எளிதாய்ப் போய்விடும்..."

வானதி மறுபடியும் திடுக்குற்றாள். வாய் தவறி ஏதாவது சொல்லி விட்டோமோ என்று நினைத்தபோது அவளுடைய

நெஞ்சை யாரோ இறுக்கிப் பிடிப்பது போலிருந்தது. உடம்பெல்லாம் பதறியது. இல்லை, நான் ஒன்றும் சொல்லி விடவில்லை. இந்தக் கிழவர் என்னை ஏமாற்றப் பார்க்கிறார் என்று எண்ணிச் சிறிது தைரியம் அடைந்தாள்.

"ஐயா! வேதம் சொல்லும் உம்முடைய வாயிலிருந்து பொய் வரலாமா? சுந்தர சோழரின் முதல் அமைச்சர் இல்லாததைக் கற்பித்துச் சொல்லலாமா? நான் இளவரசரைப் பற்றி எதுவும் கூறவில்லையே? நான் ஏதோ கூறியதாகச் சொல்கிறீரே?" என்றாள்.

"யோசித்துப் பார், தாயே! நன்றாக எண்ணிப் பார்! ஒரு விஷயத்தைப் பற்றிப் பேசாமலேயே அதைப் பற்றிய விவரத்தைத் தெரிவிக்க முடியாது என்று நீ கருதினால், அது பெரிய தவறு. நீ



சொல்லாமற் சொன்ன விவரத்தைக் குறிப்பிடுகிறேன்; கேள்! இளவரசர் அருள்மொழிவர்மர் கடலில் மூழ்கி இறந்து விட்டதாக உலகமெல்லாம் பேச்சாயிருக்கிறது. குடி மக்கள், அதிகாரிகள் அனைவரும் சோகக் கடலில் ஆழ்ந்திருக்கிறார்கள். உனக்கும் அந்தச் செய்தி தெரியும். அப்படியிருக்கும்போது, நீ இளவரசரைப் பற்றி ஒரு விவரமும் சொல்ல மாட்டேன் என்று கூறினாய். அதிலிருந்து வெளியாவது என்ன? இளவரசர் இறக்கவில்லையென்பது உனக்குத் தெரியும் என்று ஏற்படுகிறது. அவரைப் பார்ப்பதற்கு நீ நாகைப் பட்டினம் போகிறாய் என்று நான் சொன்னதையும் நீ மறுக்கவில்லை. 'இறந்து போன இளவரசரை நான் எப்படிப் பார்க்க முடியும்?' என்று நீ திருப்பிக் கேட்கவில்லை.



'நாகைப்பட்டினம் போகவில்லை, வேறு இடத்துக்குப் போகிறேன்' என்றும் நீ சொல்லவில்லை. ஆகையால் நாகைப்பட்டினத்தில் இளவரசர் உயிரோடு இருக்கிறார் என்பதையும், அவரைப் பார்க்கப் போகிறாய் என்பதையும் ஒப்புக் கொண்டு விட்டாய்! மிச்சம் நீ சொல்ல வேண்டிய விவரங்கள் இரண்டே இரண்டுதான்; நாகைப்பட்டினத்தில் இளவரசர் எங்கே இருக்கிறார் என்று சொல்ல வேண்டும்; அந்தச் செய்தி உனக்கு எப்படித் தெரிந்தது என்றும் சொல்ல வேண்டும். இந்த இரண்டு விவரங்களையும் நீ கூறி விட்டால், அப்புறம் ஒரு கணங்கூட இங்கே தாமதித்து இந்தக் கிழவனோடு பேசிக் கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை. உனக்கு எங்கே போக விருப்பமோ அங்கே போகலாம்."

வானதியின் உள்ளம் இப்போது அடியோடு கலங்கிப் போய்விட்டது. முதன் மந்திரி கூறியது உண்மை என்றும், தன்னுடைய அறியாமையினால் இளவரசரைக் காட்டிக் கொடுத்து விட்டதாகவும் உணர்ந்தாள். தான் செய்து விட்ட குற்றத்துக்குப் பிராயச்சித்தம் உண்டா? கிடையவே கிடையாது! உயிரை விடுவதைத் தவிர வேறு ஒன்றுமில்லை.

"ஐயா! தாங்கள் என் பெரிய தந்தையின் ஆப்த நண்பர் என்று சொன்னீர்கள். என்னைத் தங்கள் மகள் என்றும் உரிமை கொண்டாடினீர்கள். தங்களை ஒன்று கேட்டுக் கொள்கிறேன். நான் நாகைப்பட்டினம் போகவும் விரும்பவில்லை; பழையாறைக்குப் போகவும் விரும்பவில்லை..."

"கொடும்பாளூருக்குப் போக விரும்புகிறாயாக்கும். அது நியாயந்தான். அங்கேயே உன்னைக் கொண்டு போய்ச் சேர்ப்பிக்கிறேன்."

"இல்லை, ஐயா! கொடும்பாளூர் போகவும் நான் விரும்பவில்லை. இந்த உலகத்தை விட்டு மறு உலகத்துக்குப் போக விரும்புகிறேன். தங்களுடைய ஆட்களிடம் சொல்லி அதோ தெரியும் பலி பீடத்தில் என்னைப் பலி கொடுத்து விடச் சொல்லுங்கள். நான் தயாராக இருக்கிறேன்!" என்று சொன்னாள்.

"தாயே! உன்னுடைய விருப்பம் எதுவோ அதை நிறைவேற்றி வைப்பதாகச் சொன்னேன். ஆகையால் மறு உலகத்துக்குத்தான் நீ போக வேண்டும் என்றால், அங்கேயே அனுப்பி வைக்கிறேன். ஆனால் அதற்கு முன்னால் என்னுடைய கேள்விகளுக்கு விடை சொல்லியாக வேண்டும்."

"ஐயா! என்னை வீணில் துன்புறுத்த வேண்டாம். நான் எந்தக் கேள்விக்கும் பதில் சொல்லப் போவதில்லை. என்னைத் தங்கள் மகளாகக் கருதுவதாய்ச் சற்று முன் தாங்கள் சொன்னது உண்மையாயிருந்தால்..."

"மகளே! அதில் யாதொரு சந்தேகமுமில்லை. உன்னை நான் பெற்ற மகளாகவே கருதுகிறேன். உன் குடும்பத்தார் எனக்கு எவ்வளவு வேண்டியவர்கள் என்பது ஒருவேளை உனக்குத் தெரிந்திராது! உன் பெரிய தந்தையும் நானும் நாற்பது ஆண்டுகளாகத் தோழர்கள். ஆனால் இராஜாங்கக் காரியங்களில் சிநேகம், உறவு என்றெல்லாம் பார்ப்பதற்கில்லை. பெற்ற தந்தை என்றும் பார்க்க முடியாது; அருமைக் குமாரி என்றும் பார்க்க முடியாது. ஏன்? சக்கரவர்த்தியின் காரியத்தையே பார்! தமது சொந்தக் குமாரன் இராஜாங்கத்துக்கு விரோதமான சதி செய்தபடியால், அவனைச் சிறைப் படுத்திக் கொண்டு வரும்படி கட்டளையிடவில்லையா?"

"ஐயா! பொன்னியின் செல்வரைப் பற்றியா இவ்வாறெல்லாம் பேசுகிறீர்கள்? அவர் இராஜாங்கத்துக்கு விரோதமாக என்ன சதி செய்தார்?"

"ஓகோ! உனக்கு அது தெரியாது போலிருக்கிறது. இலங்கைக்குப் போர் செய்யப் போவதாகச் சொல்லி விட்டுப் பொன்னியின் செல்வர் போனார். அங்கே நமது வீரப் படைகள் இலங்கைப் படைகளை முறியடித்தன. அந்தச் சந்தர்ப்பத்தை உபயோகித்துக்கொண்டு இளவரசர் அருள்மொழிவர்மர் இலங்கைச் சிம்மாசனத்தைக் கைப்பற்றிக் கொள்ளப் பார்த்தார். இது இராஜாங்கத்துக்கு விரோதமான சதி அல்லவா? இதை அறிந்ததும் சக்கரவர்த்தி தமது திருக்குமாரரைச் சிறைப்படுத்திக்

கொண்டு வருவதற்குக் கட்டளை அனுப்பினார். இளவரசர் அக் கட்டளையை மீறிக் கடலில் வேண்டுமென்று குதித்துத் தான் இறந்து விட்டதாகப் பொய்ச் செய்தியைப் பரப்பச் செய்தார். பிறகு, கரையேறி எங்கேயோ ஒளிந்து மறைந்திருக்கிறார். இந்த விவரங்கள் உனக்குத் தெரியாதபடியால் அவர் இருக்குமிடத்தை நீ சொல்ல மறுத்தாய் போலும். அப்படிப்பட்ட இராஜாங்க விரோதியை நீ மறைத்து வைக்க முயன்றால், அதுவும் பெரிய குற்றமாகும். ஆகையால், சொல்லிவிடு அம்மா!" என்றார் முதன்மந்திரி.

வானதி இதுவரை அடக்கி வைத்திருந்த ஆத்திரமெல்லாம் இப்போது பொங்கிப் பீறிக்கொண்டு வெளி வந்தது. பொன்னியின் செல்வரைக் குறித்து முதன் மந்திரி கூறிய தூஷணைகளை எல்லாம் அவளால் பொறுக்க முடியவில்லை. அந்த சாதுப் பெண் வீராவேசமே உருவெடுத்தவள் போலாகிக் கூறினாள்:-

"ஐயா! தாங்கள் கூறியது ஒன்றும் உண்மையில்லை. இளவரசர் மீது வீண் அபாண்டம் கூறினீர்கள். இலங்கையில் நமது படைகள் சோர்வடைந்திருந்த காலத்தில் இளவரசர் அங்கே சென்றதினாலேயே உற்சாகங் கொண்டு போராடினார்கள். பொன்னியின் செல்வர்தான் இலங்கையில் நம் வெற்றிக்குக் காரணமானவர் என்பது உலகமறிந்த உண்மை. அவருடைய வீரத்தையும் மற்ற குணாதிசயங்களையும் பார்த்து இலங்கை மக்கள் அவர் மீது அன்பு கொண்டார்கள். போரில் புறமுதுகிட்டோடி ஒளிந்து கொண்ட தங்கள் அரசனுக்குப் பதிலாக இளவரசரைத் தங்கள் அரசனாக்கிக் கொள்ள விரும்பினார்கள். புத்த குருமார்கள் இலங்கைச் சிம்மாசனத்தைப் பொன்னியின் செல்வருக்கு அளித்தார்கள். பொன்னியின் செல்வர் சிம்மாதனம் தமக்கு வேண்டாம் என்று மறுதலித்தார். அத்தகைய நேர்மையானவரைக் குறித்துத் தாங்கள் இவ்வளவு அவதூறு சொல்லியிருக்கிறீர்கள். இளவரசர் தந்தையின் கட்டளை என்று அறிந்ததும் தானே சிறைப்பட்டு நேரே தஞ்சைக்குப் புறப்பட்டு வந்தார். அவர் கடலில் வேண்டுமென்று குதிக்கவில்லை. தம் அருமைச் சிநேகிதரின் உயிரைக் காப்பாற்றுவதற்காகவே குதித்தார். சக்கரவர்த்திக்கு விரோதமாக அவர் சதி செய்யவும் இல்லை. இந்த அபாண்டங்களையெல்லாம் கேட்க என் செவிகள் என்ன துர்ப்பாக்கியம் செய்தனவோ தெரியவில்லை...!"

அநிருத்தர் இலேசாகச் சிரித்துக் கொண்டே "பெண்ணே! அருள்மொழி வர்மருக்காக நீ இவ்வளவு ஆத்திரமாகப் பரிந்து பேசுவதைக் கேட்பவர்கள் என்ன நினைப்பார்கள் தெரியுமா? நீங்கள் இருவரும் காதலர்கள் என்று நினைப்பார்கள்!" என்றார்.

"ஐயா! தாங்கள் இப்போது கூறியதில் மட்டும் பாதி உண்மை. நான் அவருக்கு என் உள்ளத்தைப் பறி கொடுத்திருப்பது மெய்தான். இதைத் தங்களிடமிருந்து நான் மறைக்க விரும்பவில்லை. ஆனால் அவர் இந்த அநாதைப் பெண்ணுக்குத் தன் உள்ளத்தில் இடங் கொடுத்திருப்பதற்கு நியாயம் இல்லை. வானத்தில் ஜொலிக்கும் சந்திரன் மீது அன்றில் பறவை காதல் கொள்ளலாம். ஆனால் சந்திரனுக்கு அன்றில் பறவை ஒன்று இருப்பதே தெரிந்திராது."

"ஆஹா! என் அருமைச் சிநேகிதரின் மகள் இவ்வளவு சிறந்த கவிதா ரஸிகை என்பது இதுவரை எனக்குத் தெரியாமற் போயிற்று. இளையபிராட்டி குந்தவையின் அந்தரங்கத் தோழி அல்லவா நீ?" என்றார் முதன் மந்திரி.

"போதும் போதும்! தங்கள் புகழ்ச்சியைக் கேட்க நான் விரும்பவில்லை. ஒன்று என்னை என் வழியே போவதற்கு விடுங்கள். இல்லாவிடில் உங்கள் ஆட்களை அழைத்துக் கட்டளையிடுங்கள்."

"பெண்ணே! கொஞ்சம் பொறு! பொன்னியின் செல்வரைப் பற்றி உனக்கு எவ்வளவோ விவரங்கள் தெரிந்திருக்கின்றன. ஆகையால் அவர் இப்போது இருக்குமிடமும் உனக்கு அவசியம் தெரிந்திருக்க



வேண்டும். அதை மட்டும் சொல்லி விடு. உன்னை உடனே உன் பெரிய தந்தையிடம் அனுப்பி வைக்கிறேன். அவர் இலங்கையிலிருந்து திரும்பி வந்து கொண்டிருக்கிறார். இத்தனை நேரம் மதுரைக்கு வந்திருப்பார்..."

"ஐயா! தங்களைப் போன்ற வஞ்சகம் நிறைந்த மனிதருடன் சிநேகமாயிருப்பவர் என்னுடைய பெரிய தந்தை அல்ல. எனக்கு உற்றார் உறவினர் யாருமில்லை. இளவரசரைப் பற்றி எல்லோரும் அறிந்திருப்பதையே நான் சொன்னேன். வேறு எதுவும் என்னிடமிருந்து தாங்கள் தெரிந்து

கொள்ள முடியாது. வீண் தாமதம் செய்ய வேண்டாம்..."

"தாமதம் செய்யக் கூடாதுதான். பலமாக மழை வரும் போலிருக்கிறது..."

"மழை மட்டுந்தானா வரும்? தங்களைப் போன்றவர்கள் உள்ள இடத்தில் இடி, மின்னல், பிரளயம் எல்லாம் வரும்.

வானதியின் கூற்றை ஆமோதிப்பது போல் அச்சமயம் ஒரு நெடிய மின்னல் வானத்தின் ஒரு முனையிலிருந்து இன்னொரு



முனை வரையில் பாய்ந்தோடி ஜொலித்து விட்டு மறைந்தது. மின்னல் மறைந்து இருள் சூழ்ந்ததும் அண்ட கடாகங்கள் அதிரும்படியான பேரிடி ஒன்று இடித்தது.

"பெண்ணே! இளவரசன் அருள்மொழி வர்மன் எங்கே இருக்கிறான் என்று சொல்ல மாட்டாயா?"

"சொல்ல மாட்டேன்."

"நான் ஊகித்தது ஊர்ஜிதமாகிறது. இளவரசன் மறைந்திருக்கும் இடத்துக்கு நீ ஏதோ இரகசியச் செய்தி கொண்டு போவதற்காகப் புறப்பட்டாய். இது உண்மையா, இல்லையா?"

"ஐயா! வீண் வேலை! தங்கள் கேள்வி எதற்கும் இனி நான் மறுமொழி சொல்ல முடியாது."

"அப்படியானால், இராஜாங்கத்துக்குத் துரோகமாகச் சதி செய்பவர்களுக்கு அளிக்க வேண்டிய கடுந் தண்டனையை உனக்கும் அளிக்க வேண்டியதுதான். வேறு வழி இல்லை."

"தண்டனையை ஏற்பதற்குக் காத்திருக்கிறேன், ஐயா! பலி பீடத்தில் என் தலையை வைக்க வேண்டும் என்றால், அப்படியே செய்கிறேன்."

"சேச்சே! நீ கொடும்பாளூர் வேளிர் மகள்! உனக்கு அவ்வளவு அற்பமான தண்டனை கொடுக்கலாமா? அதோ பார், அந்த யானையை!"

வானதி அவர் காட்டிய திசையைப் பார்த்தாள். கன்னங்கரிய குன்றினைப் போல் யானை ஒன்று நின்று கொண்டிருந்தது. கருங்கல்லினால் செய்து கரிய மை பூசப்பட்ட உருவத்தைப் போல் அது தோன்றியது. அதன் கருமையை நன்கு எடுத்துக் காட்டிக்கொண்டு இரண்டு வெள்ளைத் தந்தங்கள் நீண்டு வளைந்து திகழ்ந்தன.

'பெண்ணே! கஜேந்திர மோட்சம் என்று கேள்விப்பட்டிருக்கிறாய் அல்லவா? யானையின் அபயக் குரல் கேட்டுத் திருமால் ஓடிவந்து முதலையைக் கொன்று கஜேந்திரனை மோக்ஷத்திற்கு அனுப்பினார். அதற்குப் பதிலாக, இந்தக் கஜேந்திரன் எத்தனை எத்தனையோ பேரை அந்தத் திருமால் வாசம் செய்யும் மோட்ச உலகத்துக்கு அனுப்பியிருக்கிறது. நீ இந்த உலகத்தை விட்டு மறு உலகத்துக்குப் போக வேண்டும் என்று சொன்னாய் அல்லவா? உன் விருப்பத்தை இந்த யானை கண் மூடித் திறக்கும் நேரத்தில் நிறைவேற்றி வைக்கும். அது தன் துதிக்கையினால் உன்னைச் சுழற்றி எடுத்து வீசி எறிந்தால் நீ நேரே மோட்ச உலகத்திலேயே போய் விழுவாய்!"

இவ்விதம் கூறிவிட்டு முதன்மந்திரி அநிருத்தர் சிரித்தார். அந்தச் சிரிப்பு வானதிக்கு ரோமாஞ்சனத்தை உண்டாக்கிற்று. இந்த மந்திரி மனிதர் அல்ல, மனித உருக் கொண்ட அரக்கன் என்று எண்ணினாள்.

"கோமகளே! முடிவாகக் கேட்கிறேன். பொன்னியின் செல்வன் இருக்குமிடத்தைச் சொல்கிறாயா? அல்லது இந்தக் கஜேந்திரனுடைய துதிக்கை வழியாக மோட்சத்துக்குப் போகிறாயா?" என்ற வார்த்தைகளைக் கேட்டதும், வானதி மீண்டும் மனோதிடம் பெற்றாள்.

"ஐயா! கஜேந்திரனை என்னிடம் வரச் சொல்கிறீர்களா? அல்லது நானே கஜேந்திரனிடம் போகட்டுமா?" என்று கம்பீரமாகக் கேட்டாள்.

அநிருத்தர் கையினால் சமிக்ஞை செய்தார். அத்துடன் அவர் வானதிக்கு விளங்காத பாஷையில் ஏதோ சொன்னார்.



யானை பூமி அதிரும்படி நடந்து வந்தது. வானதியின் அருகில் வந்தது. தன்னுடைய நீண்ட துதிக்கையினால் வானதியின் மலரினும் மிருதுவான தேகத்தைச் சுற்றி வளைத்தது. அவளைப் பூமியிலிருந்து தூக்கியது.

அந்தச் சில கண நேரத்தில் வானதியின் உள்ளத்தில் பற்பல எண்ணங்கள் அலை அலையாய்ப் பாய்ந்து மறைந்தன. தான் அச் சமயம் அவ்வளவு தைரியத்துடன் இருப்பதை நினைத்து அவளுக்கே வியப்பாயிருந்தது. இளைய பிராட்டி குந்தவை தேவி என்னைப் பயங்கொள்ளி என்றும், கோழை என்றும் அடிக்கடி சொல்லுவாரே? அவர் இச்சமயம் இங்கிருந்து என்னுடைய தைரியத்தைப் பார்த்திருந்தால் எத்தனை ஆச்சரியப்படுவார்? அவருக்கு என்றாவது ஒருநாள் இச் சம்பவத்தைப் பற்றித் தெரியாமலிராது. பொன்னியின் செல்வருக்காக நான் திரத்துடன் உயிரை விட்டது பற்றி அறிந்து கொள்வார். அதை இளவரசரிடமும் சொல்லியே தீருவார். அப்போது இளவரசர் என்னைப் பற்றி என்ன நினைப்பார்? அந்த ஓடக்காரப் பெண்ணைக் காட்டிலும் கொடும்பாளூர் வேளார் மகள் தைரியசாலி என்று அப்போதாவது அறிந்து கொள்வார் அல்லவா?

யானையின் துதிக்கை மெள்ள மெள்ள மேலே எழுந்தது. அத்துடன் வானதியும் மேலே ஏறினாள். ஆம், ஆம்! அந்தப் பிரம்மராட்சதர் கூறியது உண்மைதான். இந்தக் கஜேந்திரன் என்னை நேரே மோட்சத்துக்கே அனுப்பி விடப் போகிறது! அடுத்த கணம் என்னை வீசி எறியப் போகிறது! எத்தனை தூரத்தில் போய் விழுவேனோ தெரியவில்லை. ஆனால் விழும்போது எனக்குப் பிரக்ஞை இராது. அதற்குள் உயிர் போய்விடும்!

வானதி இப்போது யானையின் மத்தகத்துக்கு மேலேயே போய்விட்டாள். கண்களை இறுக மூடிக்கொண்டாள். யானை தன் துதிக்கையைச் சுழற்றியது. வானதியை விசிறி எறிவதற்குச் சித்தமாயிற்று. அந்தச் சமயத்தில் கடவுள் அருளால் வானதி தன் சுய நினைவை இழந்து விட்டாள்.

(தொடரும்)



### தேர்தல் செலவு பற்றிய ஒரு கண்ணோட்டம்:

இந்த பொதுத்தேர்தல் திருவிழாவை நடத்தி முடிக்க நம் அரசாங்கத்துக்கு தொள்ளாயிரம் கோடி ரூபாய் பிடிக்கும். இதற்கு முந்தைய (98) வருடத் தேர்தலுக்கு ஆன செலவு எவ்வளவு தெரியுமா? 626 கோடி ரூபாய். அதற்கு முந்தைய தேர்தல் செலவு விவரங்கள் இதோ:

1996 – 597 கோடி
1991 – 359 கோடி
1989 – 154 கோடி
1984 – 82 கோடி

1967ம் வருடம் நடந்த தேர்தலில் மொத்தச் செலவே வெறும் பதினாறு கோடி ரூபாய்தான் என்றால் நம்ப முடிகிறதா?

### அவர் அப்படி; இவர் இப்படி!

சோனியா: திருமணத்துக்காக, நாட்டைத் துறந்த பெண்மணி.

வாஜ்பாய்: நாட்டுக்காக, திருமணத்தை துறந்த பிரம்மச்சாரி.

### கவிதை கார்னர்

தேர்தலில் நிற்காமலேயே
டெபாசிட் போனது!
மூடின பைனான்ஸ் கம்பெனியில்!

– போக்ரோடு புதுக்கவிஞன்

### எவ்வளவு?

ஒரு வேட்பாளர் தேர்தலில் போட்டியிட வேண்டுமென்றால் டெபாசிட் தொகை எவ்வளவு செலுத்த வேண்டும்? பாராளுமன்றத் தொகுதியில் போட்டியிடும் வேட்பாளர் என்றால் பத்தாயிரம் ரூபாய். தாழ்த்தப்பட்ட, பழங்குடி இனத்தைச் சேர்ந்த வேட்பாளர் என்றால் டெபாசிட் தொகை ஐயாயிரம் ரூபாய்தான்!

சட்டசபைக்குப் போட்டியிடும் வேட்பாளர்களுக்கு, டெபாசிட் தொகை ஐயாயிரம் ரூபாய். தாழ்த்தப்பட்ட, பழங்குடி இனத்தவருக்கு இதில் பாதிதான்!

### தேர்தலில் கார்கில்

சுதா யாதவ். வயது 34. ஹரியானா மாநிலம் மகேந்திநகர் பாராளுமன்றத் தொகுதியிலிருந்து போட்டியிடுகிறார், இந்த அரசியல் புதுமுகம். "நான் இப்போதுதான் அரசியலில் அரிச்சுவடி படிக்கிறேன்" என்கிறார் இந்த பி.ஜே.பி வேட்பாளர்.

இவரது கணவர் சுக்பீர் சிங் யாதவ். எல்லையோர காவல் படையில் துணை கமாண்டென்ட். அவர் கார்கில் சண்டையில் வீரமரணமடைந்தார். கணவர் இறந்த பதின்மூன்றாம் நாள், கோபாவேசத்துடன் பிரதமர் வாஜ்பாயைச் சந்தித்தார் சுதா. "என் கணவரும் நாட்டுக்காகத்தானே உயிர்த் தியாகம் செய்திருக்கிறார். அவர் ராணுவத்தைச் சேர்ந்தவரில்லை என்ற ஒரே காரணத்துக்காக, அவரது தியாகத்தை உரிய முறையில் அரசு கௌரவிக்கத் தவறி விட்டது" என்று முறையிட்டார்.

அடுத்த சில தினங்களில், பி.ஜே.பி அவரை அணுகியது.



• சந்திரபாபு நாயுடு



• சுதா யாதவ்

தேர்தலில் தங்கள் கட்சி வேட்பாளராக்கியது. இவரை எதிர்த்துப் போட்டியிடும் காங்கிரஸ் கட்சியின் இந்தர்ஜித் சிங் பலமுறை தேர்தலில் வெற்றி பெற்ற அரசியல்வாதி.

''என் கணவர் சீருடை யணிந்து நாட்டுக்குக் கடமை யாற்றினார். இப்போது எனக்கு, பாராளுமன்றத்துக்குப் போய் கடமையாற்ற ஒரு வாய்ப்பு கிடைத்துள்ளது. இறந்த ராணுவத்தினரின் விதவைகள், குழந்தைகள் மேம்பாட்டுக்குப் பணியாற்றுவதுதான் என் முதல் கடமை'' என்கிறார் சுதா யாதவ்.

## யூ டூ கம்யூனிஸ்ட்?

கேரளாவில் சி.பி.எம். கட்சி சார்பில் தேர்தலில் போட்டியிட்டவர்களில் ஒருவர், நடிகர் என்றால் ஆச்சரியமாக இருக்கும்! மலையாளத் திரையுலகின் பிரபல நடிகரான முரளிதான் அவர்! முன்னாள் காங்கிரஸ் அமைச்சர் வி.எம். சுதீரனை எதிர்த்து ஆலப்புழா தொகுதியில் போட்டியிட்டார் முரளி!



• முரளி

## எலெக்ஷன் மீட்டர்

கலைஞர் கருணாநிதி, ஜி.கே. மூப்பனார் - இருவருமே லோக்சபா தேர்தலில் இதுவரை போட்டியிடாதவர்கள் என்பது குறிப்பிடத் தக்கது.

### மீட்டர் – 1; கலைஞர் கருணாநிதி

1996 - சேப்பாக்கம் எம்.எல்.ஏ - முதலமைச்சர்.

91 - துறைமுகம் தொகுதியில் வெற்றி

89 - துறைமுகம் தொகுதியில் வெற்றி

84 - தமிழக சட்டமன்ற மேலவை உறுப்பினர்

80 - அண்ணா நகரில் வெற்றி - எதிர்க்கட்சித் தலைவர்

77 - அண்ணாநகர் எம்.எல்.ஏ - சட்டமன்ற எதிர்க் கட்சித் தலைவர்

71 - சைதையில் வெற்றி - முதலமைச்சர்

67 - சைதையில் வெற்றி. பொதுப்பணித் துறை அமைச்சர். 69 பிப்ரவரி 6ல் தமிழக முதல்வர்

62 - தஞ்சைத் தொகுதி. எதிர்க் கட்சித் துணைத் தலைவர்

57 - குளித்தலையில் வெற்றி - எதிர்க்கட்சித் துணைத் தலைவர்

இதுவரை எந்தத் தேர்தலிலும் தோல்வியே காணாதவர் என்ற பெருமை கலைஞருக்கு உண்டு.

### மீட்டர் 2; ஜி.கே. மூப்பனார்

1997 - ராஜ்ய சபை எம்.பி (த.மா.கா)

1995 - ராஜ்ய சபை எம்.பி (இ.காங்)

1983 - ராஜ்ய சபை எம்.பி

1989 - தஞ்சைத் தொகுதியில் வென்று தமிழக சட்டசபை உறுப்பினர்

## நாயுடு ஸ்டைல் பிரசாரம்!

மாமனார் என்.டி. ராமராவ், சைதன்ய ரதத்தில் சென்று பிரசாரம் செய்தார். மருமகன் சந்திரபாபு நாயுடு, சைக்கிளில் சென்று பிரசாரம் செய்கிறார். தெலுங்கு தேசம் கட்சியின் சின்னம் சைக்கிள் ஆயிற்றே! அண்மையில் மொய்னாபாத் என்ற இடத்தில் ஒரு பேரணியைப் பார்வையிடச் சென்றார் ஆந்திர முதல்வர். அப்போது சுமார் ஒன்னரை கிலோமீட்டர் தூரம் பாதுகாப்பு அதிகாரிகள் சூழ சைக்கிள் ஓட்டிச் சென்றார். மாநில வருவாய்த் துறை அமைச்சரான தேவேந்திர கௌடா, தமது காவலர் இருவர் சைக்கிளைப் பிடித்துக் கொள்ள, சைக்கிள் ஓட்டி வந்தார். இதைவிட தமாஷ், ஒரு ஜில்லா பரிஷத் தலைவர் கூடவே சைக்கிளைத் தள்ளிக் கொண்டு வந்தார். காரணம் அவருக்கு சைக்கிள் ஓட்டத் தெரியாது!

# வாடிக்கையாளர்களுக்கு

விதவிதமான பெயர்களில் கூரியர் (courier) கம்பெனிகள் மலிந்துவிட்ட இந்தக் காலத்திலும், தபால்துறையின் சேவை அவசியமாகக் கருதப்படுவதற்கு இரண்டு முக்கியமான காரணங்கள் உண்டு. ஒன்று, அதன் குறைந்த கட்டணம். இன்னொன்று, இதன் மூலமாகத்தான் எதையும் முழுமையாக நம்பி அனுப்ப முடியும். அப்படியும் கூடத் தொலைந்து போய் விடுகிற பதிவுத் தபால்கள், போய்ச் சேராத மணியார்டர்கள் மற்றும் வாடிக்கையாளர்களின் பல்வேறுவிதமான குறைகளையும் பரிசீலித்து, அவற்றுக்குத் தீர்வு காண்பதற்காக ஏற்படுத்தப்பட்டதுதான் 'வாடிக்கையாளர் நல மையம்' (Customer Care Centre).

தபால் துறை இரண்டுவிதமான சேவைகளைச் செய்து வருகிறது. அடிப்படைச் சேவைகள் மற்றும் நவீன சேவைகள். இதில் அடிப்படைச் சேவைகளில் ஏற்படும் புகார்களை நிவர்த்தி செய்வதற்காக ஏற்படுத்தப்பட்டதுதான் 'வாடிக்கையாளர் நல மையம்'. இதைப் பற்றித் தெரிந்து கொள்வதற்காக சென்னை கிரீம்ஸ் ரோடிலுள்ள மையத்திற்குச் சென்றோம். இதற்கு ஒரு தனிச் சிறப்பு உண்டு. இந்தியாவிலேயே முதன் முதலில் ஆரம்பிக்கப்பட்ட 'வாடிக்கையாளர் நல மையம்' இதுதான். தற்போது தமிழ்நாட்டில் மட்டும் நாற்பது மையங்கள் இருக்கின்றன. அதன் துணை இயக்குனர் முத்துக்குமாரசாமி சொல்கிறார்...



• புகார்களைப் பதிவுசெய்யும் 'வாய்ஸ் ரெக்கார்டிங்' மெஷின்...

"எங்கள் மையத்தில் ஆவடி, எண்ணூர், தாம்பரம் ஆகிய மூன்று டிவிஷன்களில் உள்ள போஸ்டாபீஸ்கள் சம்பந்தப்பட்ட புகார்களைப் பரிசீலிக்கிறோம். வாடிக்கையாளர்கள் புகார்களைத் தபால் மூலமாகவோ, நேரடியாகவோ, தொலைபேசி மூலமாகவோ எங்களுக்குத் தெரிவிக்கலாம். அல்லது, பக்கத்திலுள்ள போஸ்டாபீசில் தெரிவித்தால் கூடப் போதும். தொலைபேசியில் புகார் கொடுப்பவர்களின் வசதிக்காக 'குரல் பதிவு' (Voice Recording) முறையில் புகார்களைப் பதிவுசெய்கிற வசதி எங்களிடம் உண்டு. அதன் எண். 8292001. அலுவலக நேரம் முடிந்த பிறகு கூட தொலைபேசியில் புகார் கொடுப்பவர்கள் சொல்லும் விவரங்களை இது பதிவு செய்து கொள்ளும். பொதுவாக எங்களிடம் பதிவுத் தபால்கள் மற்றும் மணியார்டர்களுக்கான அக்நாலெட்ஜ்மெண்ட் கார்டுகள் வரவில்லை என்ற புகார்தான் அதிகம் வருகின்றன. புகார்களை அவற்றின் தன்மை அடிப்படையில் பரிசீலித்து அவற்றை நிவர்த்தி செய்கிறோம். இப்போது கம்ப்யூட்டர் முறையில் புகார்களைப் பதிவு செய்வதால் எங்கள் வேலை எளிதாக இருக்கிறது. குறைந்தபட்சம் மூன்று மாத காலக் கெடுவுக்குள் புகார்களை நிவர்த்தி செய்கிறோம். வடமாநிலங்கள் மற்றும் வெளிநாடுகள் சம்பந்தப்பட்ட புகார்கள் என்றால் சமயத்தில்



• முத்துக்குமாரசாமி

நான்கு மாதம் கூட ஆகலாம்."

க்ரீம்ஸ் ரோட்டிலுள்ள மையத்தில் பதின்மூன்று தபால் உதவியாளர்கள் பணியாற்றுகிறார்கள். இவர்களுக்கு மேல் மூன்று கம்ப்ளெய்ண்ட் இன்ஸ்பெக்டர்களும், ஒரு உதவி கண்காணிப்பாளரும் இருக்கிறார்கள்.

பதிவுத் தபால்கள் தொலைந்து விட்டால் ஈடாக நூறு ரூபாய் வரை தருகிறார்கள். பதிவுத் தபால்களில் அனுப்பும் டிமாண்ட் டிராஃப்ட் தொலைந்து விட்டால், இவர்கள் கொடுக்கும் சர்டிபிகேட்டை வைத்துத்தான் பேங்கில் வேறு டிமாண்ட் டிராஃப்ட்டை வாங்க முடியும்.

பெசன்ட் நகரிலுள்ள கலாக்ஷேத்ரா காலனிக்கு தபால்களே வருவதில்லை என்று ஒரு புகார் வர, பதினைந்து நாட்கள் வீடு வீடாக, வந்த தபால்களை குறித்து வைத்துக் கொண்டு 'தபால் வந்ததா, தபால் வந்ததா' என்று விசாரித்திருக்கிறார்கள்.

"ஒரு தடவை கோயம்பேடு போஸ்ட் டாபீஸில் ஒரு பதிவுத் தபால் காணவில்லை என்று புகார் வந்தது. நாங்கள் போய்ப் பார்த்ததில் ஒரு ரேக்குக்குப் பின்னால் அது விழுந்திருந்ததைக் கண்டுபிடித்தோம். இதைவிட சுவாரஸ்யமான ஒரு அனுபவமும் உண்டு. அவர் ஒரு பிசியோதெரபி டாக்டர். வடபழனியில் இருக்கிறார். ஜப்பானில் நடக்கிற ஒரு மாநாட்டிற்கு டிடி மூலமாக நுழைவுக் கட்டணம் அனுப்பி விட்டார். அது உலகளாவிய ஒரு மாநாடு. அவருக்கு அழைப்பு வரவில்லை. அவர் எங்களிடம் புகார் கொடுத்தார். நாங்கள் உடனே எங்கள் செலவிலேயே ஜப்பானுக்கு ஃபேக்ஸ் மூலமாக தகவல் அனுப்பி அங்கே தபால் டெலிவரி ஆனதை உறுதி செய்தோம். அவரும் ஜப்பானுக்கு போய் விட்டு வந்தார்" என்றார் முத்துக்குமாரசாமி.



• புகார்களைக் கவனிக்கும் அலுவலர்கள்

# ஒரு 'ஹைடெக் போஸ்ட்' ஆஃபீஸ்!

இந்த மையம் இந்தச் சேவைகளை மட்டும் செய்யாமல் இன்னும் பல்வேறு பணிகளையும் செய்கிறது. ஒரு போன் மூலமாக தபால் ரேட்டுகளையும், பல்வேறு அஞ்சலகங்களின் வேலை நேரத்தையும், தபால் பட்டுவாடா நேரத்தையும் தெரிந்து கொள்ளலாம். எல்லாவற்றிற்கும் மேலாக, போன் செய்து ஒரு ஊரின் பெயரைச் சொன்னால், பின்கோடைச் சொல்லிவிடுவார்கள்.

— கே. பாலசுப்ரமணியன்

படங்கள் : எம். சண்முகம்

அவன் வெளியூர் கிளம்பிக் கொண்டிருந்தான். வாரத்தில் இரண்டு நாள் மூன்று நாள் அவனுக்குக் கூட்டங்கள் இருக்கும். வெளுத்த சட்டையும் கட்சிக்கரை வேட்டியுமாய்க் கிளம்பி விடுவான். கையில் தங்கநிற வாட்ச். கில்ட் மோதிரம். கித்தாய்ப் பாய் மீசை என்று ஆள் பார்க்க நன் றாய்த்தான் இருக்கிறான்.

சொற்பொறி அழகேசன். அவனது நிஜப்பேர் என்ன என்று இன்றுவரை அவனுக்குத் தெரியாது. சொந்தப் பேரை அவனே விரும்பவில்லை போல. தாய் தந்தை யாருமே இல்லை அவனுடன். சின்ன வயசிலேயே வீட்டில் கோபித்துக் கொண்டு ரயிலேறியவன். பொதுக்கூட்டங்களில், அரசியல் கூட்டங் களில் சிறு வயதிலேயே பேச யாரோ கற்றுத் தந்திருந்தார்கள். மேடையேறி ஆக்ரோஷ மாக அவன் முழங்குவான். எங்கிருந்தோ ஆவேசம் வரும். அதிரடியான பேச்சு. இரைச்சலான காதடைக்கிற பேச்சு. எதிர்க் கட்சிக்கு சவால்கள்.

அவன் பேச்சுக்கு என அரசியல் வட் டாரத்தில் ரசிகர்கள் உண்டு. அவன் இல் லாமல் அரசியல் கூட்டம் சோபிப் பதில்லை... பணம் கொடுத்தே அவனைப் பேச அழைத்தார்கள். அவன் பிழைப்பே பேசியும் அதில் வருகிற பணத்திலுமாக ஓடியது.

கூட்டம் உள்ளூரில் என்றாலே கூட அவன் இரவு வீடு திரும்பத் தாமதமாகி விடுகிறது. பெரிய தலைகள் பேச இல்லை யென்றால் அவனே அந்தக் கூட்டத்தின் சிறப்புப் பேச்சாளனாக இருப்பான் என்று அவனைக் கடைசியில் பேச அழைப் பார்கள். அதுவரை கூட்டம் ஆவலுடன் காத்திருக்கும். முன்பக்க சிறுவர்கள் சிறுமியர் கள் முதல் பின் வரிசை வயசாளிகள் வரை அவன் பேச்சுக்கு அப்படிச் சிரிப்பார்கள். கைதட்டுவார்கள். விசில்கள் பறக்கும். கூச்ச நாச்சமின்றி வெட்கமின்றி மேடையில் வசைச் சொற்களை குண்டெனப் பொழி வான். பச்சை பச்சையாகப் பேசுவான். பெரிய பெரிய தலைவர்கள் பற்றி உண்மை யும் பொய்யுமாக இவனைப் பத்தித் தெரி யாதா... என்று காது கூசும்படியாகச் செய்தி களை அடுக்குவான். எவ்வளவுக்கு ஆபாச மாகப் பேசுகிறானோ அவ்வளவுக்கு அவ னுக்கு அதிகம் மேடை வாய்ப்புகள் கிடைத் தன. கிராமப்புறக் கிழடுகள் பேச்சின் பாதி யில் பணத்தை சட்டையில் குத்தினார்கள்.

கூட்டங்களில் பேச அவனுக்கு அரசியல் வாதிகள் தயவு வேண்டியிருந்தது. எப் போதும் வெளியே சுற்றித் திரிகிறவனாய் இருந்தான். டீக்கடை வாசலில் யாருட னாவது சிரித்துப் பேசியபடி சலூனில் தலை சீவியபடி, இளநீர்க் கடையில் செய்தித்தாள் வாசித்தபடி, பஸ் ஸ்டாண்டில், ஏரிக்கரை

எஸ். சங்கரநாராயணன்

மண்டபத்தில் என்று அவனைப் பார்க்கலாம். எங்கே போகிறான் என்று சொல்லிவிட்டுப் போவதில்லை. அது அவனுக்கே தெரியாது. பெரிய தலைகளை அண்டி வாழும் பிழைப்பு. அவர்கள் பார்வையில் பட்டுக் கொண்டே இருக்க வேண்டும். 'அண்ணே நம்மள மறந்துராதீங்க...' என்று கூழைக் கும்பிடு போட்டுக் கொண்டே இருக்க வேண்டும். பணத் திமிரில் அவர்கள் ஆடும் ஆட்டங்களை சகித்துக் கொள்ள வேண்டும். கூட உட்கார்ந்து இஷ்டமிருந்தால் தண்ணியடிப்பார்கள். இல்லாவிட்டால் அவன் பார்வையில் தண்ணியடித்தபடியே, நிற்க வைத்துப் பேசி அனுப்பி விடுவதும் உண்டு. அவமானங்கள் பழகி விட்டன அவனுக்கு.

வெளியூரில் சில சமயம் லக்கியடிச்சா மாதிரி ரசிகர் கூட்டத்தின் மத்தியில் இருப்பது தனி சுகம். கேட்டது கிடைக்கும். அரசியல்

# காக்கைப் பொன்

பேச்சைத் தவிர, இந்தக் கால நடிகர்கள் பல பேரைப் போல அவனுக்குப் பேச வரும். இளவட்டங்கள் சுற்றி உட்கார்ந்து அவன் பேச்சை ரசித்துக் கேட்கும். தனி லாட்ஜ், ரூம் என்று உற்சாகமாய் இருக்கும். உற்சாக பானங்கள் கேட்காமலேயே கிடைக்கும். பொண்ணுங்கள் கூட. தூங்க நேரமாகி விடும். காலையில் அந்த ஊரை விட்டுக் கிளம்பவே அவனுக்கு மனசு வராது.

அநேகமாக அவள் வீட்டில் தனியாகவே இருக்க நேர்ந்து விடுகிறது. சில நாட்கள் ஊருக்குப் போய்விட்டு வருகிறவரை அவன் தரும் பணம் பத்தும். சில நாட்களில் பத்தாது. 'பத்தாதுய்யா...' என்று அவனைப் பார்த்துச் சிரிப்பாள். 'அவ்ளதான் இருக்கு' என்பான் எரிச்சலாய். சிரிக்காமல் அவனைப் பார்க்க முடியாது. எரிச்சல்படாமல் அவன் அவளிடம் பேசியதே இல்லை. அத்தனை நகைச்சுவையாய் மேடையில் பேசுகிறவன் அவளிடம் ஏன் இத்தனை கடுமையாய் நடந்து கொள்கிறான் என்று அவளுக்கு ஆச்சரியமாய் இருக்கும். வருத்தமாய் இருக்கும். அவன் சில சமயம் இரண்டு நாள், மூன்று நாள் என்று கூட வெளியூரில் தங்கி விடுவதுண்டு. அப்போதெல்லாம் அவள் எத்தனை திண்டாடிப் போகிறாள். அதெல்லாம் அவனிடம் யார் சொல்வது? அவன் காதில் வாங்கிக் கொண்டால்தானே?

அவன் மேடையில் பேசியதைப் பார்த்து ரசித்து ரசித்துத்தான் அவள் ஐயா அவனுக்கு கட்டிக் கொடுத்தார். அவரும் அந்தக் கட்சிதான். முற்போக்கு சீர்திருத்தத் திருமணம். எல்லார் முன்னாலும் தலையாட்டினானே தவிர, சீர், பணம் என்று 'அதைக் கொண்டா இதைக் கொண்டா' என்று பிடுங்கப் பார்த்தான் அவன். கொள்கை முழக்கம் முழங்கிய சொற்பொறியா இவன், என்றிருந்தது.

அவனைத் தேடி வருகிற ஆட்களும் அத்தனை சரியாய் இல்லை. அவர்கள் பார்வை அவளுக்குக் கூச்சம் தருவதாய் இருந்தது. அவர்களை அவள் எப்படி நடத்த வேண்டும் என்று தெரியவில்லை. 'உள்ள வாங்க' என்று கூப்பிடலாமா, என்றே புரியவில்லை. 'வாங்க' என்றே யாரைப் பார்த்தாலும் சிரித்துக் கூப்பிட்டுப் பழகியவளுக்குத் திகைப்பாய் இருந்தது. கதவுப் பக்கமிருந்து சிறிதே தலையை எட்டி, 'அவர் இல்லை' என்றாள் ஒரு வரியில். அதுவே அவனுக்குப் பிடித்திருந்தது.

என்ன சம்பாதிக்கிறான்? கையில் என்ன கொண்டு வருவான்? ஒரு விவரமும் தெரியாது. வந்து அவன் தரும் காசை வாங்கிக் கொள்வாள். சில சமயம் நிதானமாய் வருவான். தள்ளாடி வருவதும் உண்டு. வீடு வரை ஆட்கள் தாங்கிவர வருகிறவன், வாசலிலேயே சிநேகிதர்களை நிறுத்திவிட்டு, 'நான் போய்க்கறேன்' என்று அவர்களை அனுப்பி விடுகிறான். அதில் தவறுவதே இல்லை. அந்த மட்டுக்கு வீட்டில் வைத்துக் குடிப்பதில்லை என்று நினைத்துக் கொண்டான் அவன்.

எப்படியோ அவர்களுக்கு ஒரு குழந்தை பிறந்தது. தன் சாப்பாட்டுப் பிரச்னை என்று அவளைப் பிரசவத்துக்காகப் பிறந்த வீட்டுக்கு அவன் அனுப்பவேயில்லை. அதில் அவள் ஐயாவுக்கு வருத்தம்தான். 'அவன் ஆளு சரியில்லப்பா.. நேர்ல எப்பிடி சக்கரையாப் பேசுதான். மேடைல போடு போடுனு போடுதான். வாழ்க்கையில சம்பந்தமே இல்லியே படுபாவிப்பய மக்கா' என்று அலுத்துக் கொண்டார். மீனாட்சி சிரித்தாள். அதில் தெரிந்த சோகம் ஆளை உலுக்குவதாய் இருந்தது.

குழந்தைக்கு மூளை வளர்ச்சி குறைவாய் இருந்தது. பிறந்த பின்தான் அது தெரிந்தது. எப்பவும் வாயில் எச்சில் ஒழுகிக் கொண்டு பேசாமல், சிரிக்காமல், பசித்தால் கூட அழாமல் கிடக்கிற குழந்தை. அவளாகப் பார்த்துப் பாலூட்டுவாள். அந்தந்த வயசுக்கு ஏத்தாற்போல அதன் விளையாட்டுக்கள் அமையவில்லை. வெளிச்சம் பார்த்து மூணு மாதத்தில் அது சிரிக்கவில்லை. பிள்ளை

---

**''இதுக்குத்தான் 'டபுள்'ரோல் பண்ணின அந்த நடிகருக்கு 'டபுள்' சம்பளம் கொடுக்க வேணான்னு சொன்னேன்...!''**

**''ஏன் என்னாச்சு?''**

**''இனிமே ஆறேழு ரோல் பண்ற மாதிரி கதை எழுதுங்கன்னு சொல்லிட்டு போறாரே...!''**

**– பூனாம்பாளையம் ஆர்.பி.ஜெயச்சந்திரன்**



பிறந்த போது அவன் வெளியூருக்கு எங்கேயோ பேசப் போயிருந்தான்.

வந்து 'ஆணா பொட்டையா?' என்றான் குழந்தையைப் பார்க்காமல். ஆண் என்றது அவனை சந்தோசப்படுத்தினாற் போலத் தான் இருந்தது. ஆனால் மூளை வளர்ச்சி இல்லை என்று தெரிந்ததும் அவன் முகம் போன போக்கு... அவளுக்கு இப்போது நினைத்தாலும் பயமாய் இருந்தது. 'சனியனைக் கொன்னு தொலைச்சிர்றதுதானே?' என்றான். ஐயோ! நினைக்கவே மீனாட்சி நடுங்கினாள். அவன் குழந்தையைப் பார்க்காமல் வெளியேறினான்.

வீட்டில் அவன் அநேகமாக இருப்பதேயில்லை. இந்த மாதிரிப் பிள்ளை பிறந்ததில் அவன் வீட்டுக்கு வருவதையே கூட அநேகமாகத் தவிர்க்க ஆரம்பித்தான் போலிருக்கிறது. வேற்றூரில் அவனுக்கு வேறு சகவாசம் கூட இருப்பதாகப் பேசிக் கொண்டார்கள். எதைப் பற்றியும் அவள் கவலைப் படவில்லை. எதையும் அவள் காதில் வாங்கிக் கொண்டால்தானே?

பிறந்து ரெண்டு வருஷம் ஆகியும் அதற்கு ஆறு மாதக் குழந்தையின் விளையாட்டுத்தான் வந்தது. அம்மாவை அது புரிந்து கொண்டது. பசித்தால் அழுதது மெலிதாக. எத்தனை பயப்பட்டது அது. சிறு சப்தங்கள் அதன் கவனத்தில் பதியவில்லை. வெளியே பெருத்த சப்தம் கேட்டால் போதும். எங்கிருந்தாலும் அம்மாவைத் தேடிப் பதறியது. கையை நீட்டித் துழாவித் தேடியது அம்மாவுக்காக. அதற்குள் ஹா ஹா என்று அதற்கு மூச்சிரைத்தது. அதைச் சமாதானப்படுத்துமுன் அவளுக்குத் திண்டாடிப் போனது. நெஞ்சோடு மார்போடு அதை அணைத்துக் கொண்டாள். அப்படியே தாலாட்டினாள். முத்தங்களை வாரியிறைத்தாள். இரண்டு நிமிடம். மூன்று நிமிடங்கூட ஆனது அது அடங்க. பாவமாய் இருந்தது அவளுக்கு.

எப்பவும் அது அவளை ஓயாமல் விளையாடக் கூப்பிடும். வாயில் ஜொள் ஒழுக விரலைப் போட்டுக் குதப்பியபடி ஊ ஊ என்று ஒரு சப்தம். கண் சிரிக்கும். வேறு பேச்சு கிடையாது. ஆனால் அந்தச் சிரிப்பே அவளைப் பரவசப்படுத்தும். உட்கார்ந்த இடத்தில் இருந்தபடி வெளிச்சம் பார்த்து அவளைத் தேடும். அதற்கு அவளே எல்லாம். வெளிச்சமும் அவளே. சர்வமும் அவளே... 'அய்யா எத்தெய்வமே' என்று வந்து அள்ளிக் கொள்வாள்.

சொற்பொறி அதைத் தூக்கியதே இல்லை. உருவம் என்பதே கூட நிழலாய்த் தான் அது உணர்ந்தது போலிருக்கிறது. இது அம்மா நிழல். இது அப்பா நிழல். ஒளி மறைத்தால் உருவம். அப்பா வாசல் பக்கமாய் உட்கார்ந்து தினத்தந்தி படித்துக் கொண்டிருந்தால் அது சில சமயம் வாசல் பக்கம் கைகாட்டி ஊ ஊ என்று ராகமிழுக்கும். கண் சிரிக்கும் அப்போது. 'ஏங்க பிள்ள கூப்பிடுது...' என்பாள் ஆசையாய். 'சனியன்... பிள்ளையா இது. கேடுகெட்ட மூதேவி' என்பான் அதை அருவருப்பாய்ப் பார்த்தபடி. அவளுக்கு வருத்தமாய் இருக்கும். பெத்தவங்களே இப்படிச் சொன்னால் பாவம் அது என்ன செய்யும்? நமக்குப் பிறந்த பாவம்



"உலகத்தில் எதுவுமே சொந்தம் கிடையாது! எல்லாம் மாயைன்னு புலம்பறீங்களே, எப்ப இந்த ஞானோதயம் ஏற்பட்டது?"

"சொந்தத் தொகுதியிலேயே தோத்துட்ட போதுதான்!"

— ஏ. நாகராஜன்

அது. அப்பிராணி. அது செய்த தவறுதான் என்ன? அவளுக்கு அழுகை வரும்.

வெள்ளையும் சொள்ளையுமாய் அவன் வெளியே கிளம்பும் போது எச்சில் வழிய அவனைக் கைநீட்டி அது கூப்பிடும். மனிதர்களை அது எத்தனை விரும்புகிறது, நேசிக்கிறது... எப்படி விளையாட அழைக்கிறது... அவளுக்குப் புன்னகையாய் இருக்கும். 'சனிப்பொணமே, வேட்டிய அழுக்காக்கிறாதே. இந்த எழவுக்குத்தான் நான் வீட்லயே இருக்கறதில்ல...' என்று கத்துவான். 'இந்தாங்க காப்பி' என்று அவள் நீட்டுமுன் 'கொண்டாந்து இந்தப் பொணம் வாய்ல ஊத்து. நான் வெளிய சாப்பிட்டுக்கறேன்' என்று போய்விடுவான். எப்போதும் அவன் வெளியே சாப்பிடுகிறவன்தான். கையில்

காசில்லை என்றால்தான் வீட்டில் காப்பி போடச் சொல்லுவான். அவன் காப்பி சாப்பிடாமல் போவது அவளுக்கு வருத்தமாய் இருக்கும்.

வயதாக ஆக அது வீட்டளவில் சிறு நடமாட்டங்களுடன் வளைய வந்தது. சப்பையை அசைத்து அசைத்து அறைக்குள் இங்குமங்கும் போய் வந்தது. மெதுவாக மிக மெதுவாக. நத்தையாய் நகர்தல். என்றாலும் அது அவளைப் பரவசப்படுத்தியது. தரையில் ஏதாவது பொருள் கிடந்தால் அது கையில் எடுத்துத் தூக்கி கண்கிட்டத்தில் வைத்துப் பார்க்கும். ஊ... என்று ஊளையாய் ஒரு சிரிப்பு.

எதை எடுத்தாலும் சிரிப்பு – அவளைப் போல!

எப்பவும் அது கதவு பின்னால் ஒளிந்து கொண்டு அவளைக் கண்டுபிடிக்க அழைக்கும். அந்த விளையாட்டை அவள்தான் அதற்குக் கற்றுத் தந்தாள். அதற்கு அவளே மதுரைவீரன் என்று பேர் வைத்திருந்தாள். 'மதுர...?' என்று கூப்பிட்டால் சப்தம் வந்த திசையில் அது திரும்பிப் பார்க்கப் பழகியிருந்தது. காந்தம் இரும்புத் துண்டை இழுத்தாற்போல, சப்தம் அதன் மண்டையை அசைய வைத்தது. மதுரை என்பது அதற்கு எப்படிப் பதிவாகியிருந்தது? தெரியவில்லை. காலப்போக்கில் அது புரிந்து கொண்டிருக்கலாம். கதவு பின்னாலிருந்து அவள் கூப்பிட அது பூச்சி போல தலையைக் காற்றில் துழாவித் தேடியது உருவத்துக்காக. அதற்கு உதவ வேண்டி அவள் கைதட்டினாள். 'மதுர?' இப்போது சப்தமாய்க் கூப்பிட்டாள். அவளைக் கண்டுபிடிக்க முடியவில்லை. என்றாலும் அது அம்மாவின் குரல் என்பதைக் கண்டுகொண்ட சிரிப்பு அதற்கு. ஊஊ... என்று கொண்டாட்டம். தலை யானை போல இங்குமங்கும் ஆடியது. 'மதுர, என்னியக் கண்டுபிடி...' சப்தமாய்க் கூப்பிட்டாள்.

சப்தம் தேடிக் கண்டுபிடிக்கப் பழக்க வேண்டியிருந்தது. விளையாட்டு அதற்குப் புரியத்தான் இல்லை. அவள் விடவில்லை. அவளுக்கு நம்பிக்கை இருந்தது. நேரில் நின்றபடி 'மதுர வா' என்ற குரலுக்குச் சப்பையை ஆட்டி ஆட்டி வந்தது குழந்தை. அப்படியே கொஞ்சம் கொஞ்சமாய்ப் பின்னால் போனாள். வந்தது. கதவு பின்னால் போனாள். வந்தது. கதவு பின்னால் ஒளிந்து கொண்டாள். கை தட்டினாள். சப்தமாய்க் கூப்பிட்டாள். 'மதுர?' அது திகைத்தது. சப்தம் கேட்கிறது. ஆள் இல்லை. திகைத்தது. திடீரென்று அவள் கதவு பின்னாலிருந்து எட்டிப் பார்த்து அதன்கிட்டே குனிந்து 'மதுர?' என்று கத்தினாள். குழந்தை பயந்து விட்டது. கிக் கிக் என்று அழ ஆரம்பித்து விட்டது. பதறிப் போனாள். இதுதான் அதனிடம் சிக்கல். 'எப்போது அது பயப்படும் என்றே யூகிக்க முடியவில்லை. திடீர் திடீரென்று பயந்து கொள்கிறது. பாவம். அப்படியே வாரியணைத்துத் தாலாட்டினாள். குலுக்கி சமாதானப்படுத்தினாள். 'பயப்படக் கூடாதுடா... அம்மா இருக்கேன்ல? உன்னிய வுட்ருவேனா? எங் கண்ணு... என்ன பயம் உனக்கு?' அழுகை கொஞ்சம் உள்ளமுங்கியதும் அதன் தொப்பையில் கிச்சுகிச்சு மூட்டினாள். குழந்தை மறுபடி சிரிக்க ஆரம்பித்ததும்தான் அவளுக்கு நிம்மதியாய் இருந்தது.

ஒருமுறை அவன் இரவில் வீட்டில் இருந்தான். குழந்தையுடன் அவள் படுத்திருந்தாள். காலால் எத்தி அவளை அவன் உள்ளறைக்கு அழைத்தான். எப்போதுமே அவன் அவளை அப்படித்தான் அழைக்கிறான். அவர்கள் உள்ளறையில் இருந்த போது குழந்தை விழித்துக் கொண்டது. எதை நினைத்துக் கொண்டதோ, எதைப் பார்த்து பயந்ததோ தெரியவில்லை. கிக் கிக் என்று அழ ஆரம்பித்தது. 'ஐயோ... பிள்ள அழுகுது' என்று எழ முயற்சி செய்தாள். அவனோ மோகவெறியில் இருந்தான்.

'இருடி போலாம்....'

---

**''தேர்தல் பிரசார மேடையில் ஏறி ஜாடை காட்டிட்டு நிக்கறாங்களே! ஏன்?''**

**''ராத்திரி பத்து மணிக்கு மேல பேசக் கூடாதாம்!''**

**– ஏ. நாகராஜன்**



'ஐய இப்பிடி அழுதா... ஜன்னி வந்துரும் பிள்ளைக்கி' என்று எழுந்து போனாள்.

'சனியன் அப்பிடி ஜன்னி கண்டு செத்துத் தொலைஞ்சா தேவலயே' முதுகுக்குப் பின்னால் அவன் குரல். அவளுக்கு வருத்தமாய் இருந்தது.

வீட்டில் எப்போதும் விளக்கு எரிந்தது. கரண்டு பில் அதிகம்தான். வேறு வழியில்லை. இப்போது குழந்தை கதவு பின்னால் அதுவே ஒளிந்துகொண்டு அவளைக் கண்டுபிடிக்க அழைத்தது. கதவு பின்னால் இருட்டாய் இருந்ததால் அது பயந்தது. ஆகவே அது தைரியமாய் விளையாட அவள் எப்போதும் விளக்கைப் போட்டே வைத்தாள். அவன் முணுமுணுப்பையும் மீறி.

அவன் வீட்டில் இருந்தபோது, குழந்தை சப்பையை நகர்த்தி நகர்த்தி கதவு பின்னால் போனது. அப்பாவை விளையாடக் கூப்பிட்டது அது. அவன் பார்த்துக் கொண்டேயிருந்தான். அவளுக்குச் சிரிப்பு. கதவு பின்னால் உட்கார்ந்து கொண்டது. கூப்பிடுவது என்றால் இன்னும் அதற்குத் தெரியாது. கைதட்டவே வரவில்லை. கூப்பிடக் குரலே கிடையாது. மொழியும் கிடையாது. உள்ளே உட்கார்ந்தபடி ஊ ஊ... என்று என்னமும் சத்தங் கொடுக்கும். தன் விளையாட்டில் தனக்கே ஆனந்தம். அதைப் புரிந்து கொண்டு நாமே போய் கதவை விரியத் திறந்து – திறக்கும்போது அதன் முகத்தில் கதவின் நிழல் இருட்டடித்து விடாமல் திறக்க வேண்டும் – 'டாய்' என்று வேடிக்கை காட்டினால், ஊ ஊ, என்று கொண்டாட்டமாய்ச் சிரிக்கும். அந்த விளையாட்டை அது கற்றுக் கொண்டதில் அவளுக்கு அத்தனை சந்தோஷம்.

குழந்தை அப்பாவுடன் விளையாட முயன்றது. கதவு பின்னால் ஒளிந்து கொண்டது. ஊ ஊ... என்ற சப்தம். அவளுக்கு முகமெல்லாம் சிரிப்பு. எத்தனை பாடுபட்டு அவள் அந்த விளையாட்டை அதற்குக் கற்றுத் தந்திருக்கிறாள்... அவனிடம் அதன் விளையாட்டைச் சொல்ல அவள் விரும்பினாள். 'என்னங்க... கொழந்த கதவு பின்னாலருந்து உங்களைக் கண்டுபிடிக்கக் கூப்பிடுது...' அவன் திரும்பிப் பார்த்தான். 'சரியாத்தான் உக்காந்திருக்கு. கதவு பின்னால... விளக்குமாறு மாதிரி' என்றான்.

அவள் அப்பா ஊரிலிருந்து வந்திருந்தார். அவருக்குப் பொண்ணை இப்பிடிப் பாழுங் கெணத்துல தள்ளிட்டமேன்னு ரொம்ப வருத்தம். வரும்போதெல்லாம் அழுவார். ஐயாவை நோகடிக்கறா மாதிரி மீனாட்சி ஒரு வார்த்தை சொன்னதில்லை. வெறுமனே ஒரு சிரிப்பு சிரிப்பாள். பிள்ளையோட அவள் விளையாடுவதைப் பார்க்கப் பார்க்க ஐயாவுக்கு ஒருபுறம் சந்தோசம். ஒருபுறம் வருத்தம். 'அட, பிள்ளையுமில்ல இப்பிடி வந்து பொறந்திட்டது. எல்லா நாம வாங்கி வந்த வரம்மா' என்றார். அதற்கும் அவள் சிரித்தாள். தாத்தா பிள்ளையை வாங்கி அதன் உடம்பெங்கும் தடவிக் கொடுத்தார். ஊ ஊ என்று கொண்டாட்டமாய் அது சிரித்தது. 'எல என்னல உனக்குச் சிரிப்பு?' என்று அம்மா வேறு அதற்குக் கிச்சுகிச்சு மூட்டினாள்.



''நம்ம அரசியலுக்கு மக்களிடம்தான் மதிப்புக் குறையுதுன்னு பார்த்தா, வீட்டில கூட மதிப்பு இல்லாம போச்சுங்க!''

''என்ன ஆச்சு?''

''பையனை மார்க் என்னான்னு கேட்டா, நீங்க வாங்கின ஓட்டை விட அதிகம்னு சொல்லிட்டுப் போறான்!''

– ஏ. நாகராஜன்

'மீனாட்சி, எப்பவும் இப்பிடிச் சிரிச்சிட்டிருக்க உன்னால எப்பிடியம்மா முடியுது?' என்று கேட்டார் ஐயா. அவரால் தாள முடியவில்லை. 'நாம் பெத்த மக்கா. நெசத்தச் சொல்லு... நீ சந்தோசமா இருக்கியா. நடிக்கியா?' என்று உடைந்த குரலில் கேட்டார்.

'குழந்தையைப் பத்தி இல்ல... சிலப்ப இப்பிடி ஆயிர்றதுதான்.. அதுக்கென்ன பண்ண முடியும்' என்று புன்னகை செய்தாள் மீனாட்சி.

ஐயா அவளைப் பார்த்தார்.

'ஆனா இப்பிடியொரு மாப்பிள்ளைய எனக்குப் பாத்திட்டீரேய்யா...' என்றாள் அவள். 'பிள்ளையத் தூக்கக் கூட மனசு வராம, இஷ்டமில்லாம... அதானய்யா தாள மாட்டேங்குது...' குலுங்கிக் குலுங்கி அழ ஆரம்பித்தாள் அவள். ●

# மந்திரப் புன்னகை – 7

ஃபிஜி தீவுகள் என்பது, பல சிறு சிறு தீவுகள் அடங்கிய நாடு என்பது உங்களுக்குத் தெரியும். அதன் தலைநகரமான 'சுவா'வில் என் நிகழ்ச்சி முடிந்தபின், பக்கத்தில் இருந்த இன்னொரு தீவுக்குச் சென்றோம். எங்கள் ஸ்பான்சர், எங்களுடைய பயணத்துக்கென்று ஒரு சார்டர்டு விமானத்தையே ஏற்பாடு செய்திருந்தார். அங்கே வழக்கம்போல, மேஜிக் ஷோ நடந்து கொண்டிருந்தபோது, திடீரென்று ஒருநாள் 'சுவா' நகரத்திலிருந்து, ஒருவர் என்னைச் சந்திப்பதற்காக வந்திருந்தார். இந்தியாவிலிருந்து ஃபிஜி வந்து அங்கே செட்டில் ஆனவர். பல கோடிகளுக்கு அதிபதி.

"எனக்கு உங்களிடமிருந்து ஒரு பெரிய உதவி வேண்டும். அந்த உதவியை உங்களைத் தவிர வேறு எவராலும் செய்ய முடியாது" என்று பெரும் பீடிகையோடு ஆரம்பித்தார். "எனக்கு ஒரே மகன். அவன் ஒரு சாலை விபத்தில் அடிபட்டு, ஃபிஜி தீவின் மிகப் பெரிய ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டிருக்கிறான். மண்டையில் பலமாக அடிபட்டதன் காரணமாக, கோமா நிலையில் இருக்கிறான். பெரிய டாக்டர்கள் எல்லாம், 'உயிர் பிழைக்க இனி வாய்ப்பில்லை' என்று கைவிரித்து விட்டனர். அவனை பழையபடி ஆக்கிக் கொடுங்கள் என்று நான் கேட்கவில்லை. சிறிது நேரமாவது, அவனை கோமா நிலையிலிருந்து விடுவித்து, கண் திறந்து என்னுடன் சில வார்த்தைகளாவது பேசும்படி செய்ய வேண்டும்" என்று என் கைகளைப் பிடித்துக் கொண்டு உணர்ச்சி பொங்கப் பேசினார் அந்தப் பெரும் பணக்காரர்.

"என்னை வந்து சந்திக்கும்படி உங்களுக்கு ஆலோசனை கூறியவர் யார்?" என்று நான் அவரைக் கேட்டேன்.

"என் மகனுக்குச் சிகிச்சையளித்துக் கொண்டிருக்கிற பெரிய டாக்டர்கள் ஒருவரது ஆலோசனைதான் இது" என்றார்.

நிறைய படித்த டாக்டர் ஒருவர், ஒரு மேஜிக் நிபுணனைச் சந்திக்கும்படி ஆலோசனை சொன்னதன் பின்னணி என்னவாக இருக்கும் என்று சில நிமிடங்கள் சிந்தித்துப் பார்த்தேன். அவர் நிச்சயமாக எனக்கு சூப்பர் சக்தி இருப்பதாக நம்புவதற்கு வாய்ப்பில்லை. மகனுடன் பேசத் துடிக்கும் தகப்பனாரைச் சமாளிக்க வேறு வழி எதுவும் புலப்படாமல், என் பக்கம் கைகாட்டியிருக்க வேண்டும் என்று புரிந்தது.

"நான் தனி விமானம் ஒன்று எடுத்துக் கொண்டு வந்திருக்கிறேன். இப்போது புறப்பட்டால், இன்று மாலை, நிகழ்ச்சி ஆரம்பமாவதற்கு முன்பு, மறுபடி இதே விமானத்தில் நீங்கள் திரும்பி வந்து விடலாம். வழக்கம் போல நீங்கள் நிகழ்ச்சியை நடத்தலாம்" என்றார்.

பிள்ளைப் பாசம் அவரை எந்த



அளவுக்கு அறிவுபூர்வமாக சிந்திக்க விடாமல் செய்து விட்டது பார்த்தீர்களா?

நான் வழக்கமான பல்லவியைப் பாடினேன். "நான் வெறும் தந்திரங்கள் செய்பவன். என்னிடம் மாயசக்தி எதுவும் இல்லை. புத்திசாலித்தனமாய் நான் மக்களை ஏமாற்றிக் கொண்டிருக்கிறேன் என்பதுதான் நிஜம்" என்றேன்.

அவர் என் பேச்சை ஏற்றுக் கொள்ளவில்லை. உங்களால் நிச்சயம் முடியும். ஏதோ காரணத்துக்காகத் தயக்கம் காட்டுகிறீர்கள். எதுவானாலும் சொல்லுங்கள். பணம் எவ்வளவு தேவை? கேளுங்கள். எவ்வளவு வேண்டுமானாலும் கேளுங்கள். இந்தப்

பெட்டியில் கொண்டு வந்திருக்கும் பணம் முழுக்க முழுக்க உங்களுக்குத்தான். எடுத்துக் கொள்ளுங்கள். என்னுடன் புறப்படுங்கள்" என்றார் விடாப்பிடியாக.

என்ன சொன்னாலும் இவர் கேட்க மாட்டார். இவரை மனோதத்துவரீதியில் தான் அணுக வேண்டும் என்று முடிவு செய்தேன். "எனக்கு ஒரு மணி நேரம் அவகாசம் கொடுங்கள். நீங்கள் போய் வேறு எங்காவது ஒரு ஹோட்டலில் காத்திருங்கள். நான் குளித்து விட்டு, பிரத்யேக பூஜை ஒன்று நடத்தி, என்னை ஆட்டுவிக்கும் மகா சக்தியிடம் உங்கள் கோரிக்கையை வைப்பேன். மகாசக்தி உத்தரவு கொடுத்தால், மட்டுமே நான் உங்களுடன் வருவேன்" என்றேன். அவரும் வேறு வழியின்றி என் வார்த்தைக்குக் கட்டுப்பட்டுப் புறப்பட்டார்.

நான் குளித்து விட்டு வந்து பூஜையில் உட்கார்ந்தேன். அது பிரத்யேக பூஜை ஒன்றுமில்லை. தினசரி நான் செய்கிற பூஜைதான். இறுதியில், இதுபோல ஒரு தர்மசங்கடமான நிலையில் என்னை மாட்ட வைத்து விட்டாயே கடவுளே! இதற்குத் தீர்வு ஒன்றையும் நீயாகவே எனக்குச் சொல்லி விடு என்று நான் மனமுருகி வேண்டிக் கொண்டேன். அதன்பின் சிறிது நேரம் தியானம் செய்தேன். என் மனத்தில் தெளிவு பிறந்தது.

ஒரு மணி நேரம் கழித்து, அந்த மனிதர் வந்து என்னைச் சந்தித்தார். "உங்களுடன் புறப்பட்டு வந்து, உங்களுடைய மகனைச் சந்திக்க மகா சக்தி எனக்கு உத்தரவு கொடுக்கவில்லை. எனவே நான் உங்களுடன் வர முடியாத நிலையில் இருக்கிறேன். என்னை தயவுசெய்து மன்னித்து விடுங்கள். நீங்கள் உடனடியாக புறப்பட்டுச் சென்று உங்கள் மகன் அருகிலேயே இருங்கள்!" என்று நான் கூறினேன். அப்புறமும் அவர் கெஞ்சினார். நான் எனது நிலையில் உறுதியாக இருந்தேன். அவர் மனமில்லாமல், ஊருக்குத் திரும்பினார்.

இரண்டாம் நாள், ஒருவர் என்னை வந்து சந்தித்தார். கோடீஸ்வரர் அனுப்பி வைத்திருந்தார். விஷயம் இதுதான். நான் வர மறுத்தபின், கோடீஸ்வரர், 'சுவா' திரும்பிப் போய், ஆஸ்பத்திரியில் தம் மகனின் படுக்கைக்கு அருகிலேயே அமர்ந்து கொண்டு இருந்தாராம். இவர் வந்த சில மணி நேரத்திலேயே மகனின் உயிர் பிரிந்து விட்டது.

அவருடன் நான் வராமல் போனது கூட அவருக்குப் பெரிய விஷயமாகத் தெரியவில்லை. தமது மகனுடைய முடிவை, குறிப்பாக உணர்த்தி, தம்மைத் திருப்பி அனுப்பி வைத்து, மகனுடைய உயிர் பிரிகிற நேரத்தில், அவன் அருகிலேயே அவர் இருக்கும்படி செய்து விட்டேன் நான் என்று அவர் நம்பி விட்டார்! இதனால், என் (இல்லாத) சூப்பர் நேச்சுரல் சக்தி மீது அவருக்கு ஏகப்பட்ட நம்பிக்கை வந்து விட்டது! எனவே, மூன்று லட்சம் ரூபாயை ஒரு பெட்டியில் போட்டு, தம் உதவியாளர் ஒருவரை என்னிடம் அனுப்பி வைத்து விட்டார்!

நான் எதுவுமே செய்யாதபோது, அந்த கோடீசுவரர் கொடுத்த பணத்தை வாங்கிக் கொள்வது எப்படி நியாயமாகும்? எனவே, மகனை இழந்த அந்த கோடீசுவரருக்கு என் ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்து ஒரு கடிதத்தை எழுதிக் கொடுத்து விட்டு, அந்தப் பணத்தை வாங்கிக் கொள்ள மறுத்து விட்டேன்.

## ஒரு கோடீஸ்வரரின் லெண்டு கோடி!

இந்தச் செய்தியும் செய்தித்தாள்களில் வெளியாக, அதுவரை என் நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்யாத இன்னும் சில நகரங்களுடைய மேயர்கள் என்னை வந்து சந்தித்து, தங்கள் ஊருக்கு அழைத்தனர்! மொத்தம் ஐந்தரை மாதங்கள் என் மேஜிக் ஷோ அங்கு நடைபெற்றது.

இன்று நான் எழுபத்தைந்து வயதைக் கடந்து விட்டேன். வண்ண உடையணிந்து, மேடையில் ஏறி விட்டால், எனக்கு என்

# பிளவும், பிரிவும்

ராமேசுவரம் எலிமென்டரி பள்ளிக்கூடத்தில் நான் ஐந்தாவது படித்துக் கொண்டிருந்தபோது ஒரு புதிய ஆசிரியர் எங்கள் வகுப்புக்கு வந்தார். நான் முஸ்லிம் என்று காண்பிக்கிற மாதிரி ஒரு குல்லாய் அணிந்திருந்தேன். என் பக்கத்தில், முதல் வரிசையில், பூணூல் அணிந்த ராமநாத சாஸ்திரி உட்கார்ந்திருப்பான். ஒரு குருக்களின் பிள்ளை, ஒரு முஸ்லிமுடன் சேர்ந்து உட்கார்ந்திருப்பது புதிய ஆசிரியருக்குப் பிடிக்கவே இல்லை. என்னைப் பார்த்து, கடைசி பெஞ்சில் போய் உட்காரச் சொல்லிவிட்டார். எனக்கு ஒரே வருத்தம். ராமநாத சாஸ்திரிக்கோ அதைவிட வருத்தம். நான் கடைசி பெஞ்சில் போய் உட்காருவதை அழமாட்டாமல், தலையைக் குனிந்து கொண்டே ஓரக்கண்ணால் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் தாங்க முடியாமல் அழுது கொண்டிருந்த காட்சி என் மனசில் ஆழமாகப் பதிந்து போய்விட்டது.



பள்ளிக் கூடம் விட்டதும் நேரே எங்கள் தகப்பனார்களிடம் போய், அன்றைக்கு நடந்ததைச் சொல்லி விட்டோம். ராமநாத சாஸ்திரியின் அப்பா லட்சுமண சாஸ்திரி, அந்தப் புதிய ஆசிரியரைக் கூப்பிட்டார். ஏதுமறியாத அப்பாவிக் குழந்தைகள் மத்தியில் மதப் பிளவை உண்டாக்கி ஏற்றத் தாழ்வைப் புகுத்த முனைந்த அவரது போக்கை எங்கள் முன்னிலையிலேயே திட்டித் தீர்த்தார். "நீங்கள் மரியாதையாக மன்னிப்புக் கேளுங்கள். இல்லை என்றால் பள்ளிக் கூடத்தையும், ஏன் ராமேசுவரத்தையும் விட்டே போய்விடுங்கள்!" என்றார் கண்டிப்பும் கறாரும் நிறைந்த கடுமையான குரலில்.

புதிய ஆசிரியர் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். அது மட்டுமல்ல. லட்சுமண சாஸ்திரியின் மனத்திடத்தைப் புரிந்து கொண்டு, அடியோடு மாறிப் போய்விட்டார் அவர்!

— விஞ்ஞானி ஏ.பி.ஜே. அப்துல்கலாமின் WINGS OF FIRE சுயசரிதையிலிருந்து: எஸ்.வி.என்.

வயது மறந்து போய் விடுகிறது. முதன் முதலில் மேடை ஏறியபோது, எத்தனை சுறுசுறுப்புடன் சந்தோஷமாக இருந்தேனோ அதே மாதிரிதான் உணருகிறேன். ஒருமுறை பிரபல இந்தி நட்சத்திரமான ராஜ்கபூர், என்னைப் பற்றிச் சொன்னபோது, "இவருடைய ரத்தத்தை எடுத்துப் பரிசோதனை செய்து பார்த்தால், சிவப் பணு வெள்ளை அணு போன்றவை எல்லாம் இருக்காது. வெறும் மேஜிக் மட்டுமே இருக்கும்" என்று குறிப்பிட்டார். ஆனால் நான் பரம்பரை பரம்பரையாய் மேஜிக் கலையில் ஈடுபட்டு வருகிற குடும்பத்தைச் சேர்ந்தவன் இல்லை. சொல்லப் போனால், எங்கள் பரம்பரையில் வந்த முதல் மேஜிக் கலைஞன் நான் தான்.

நாங்கள் குஜராத் மாநிலத்தைச் சேந்தவர்கள். அங்கு ராஜ்கோட் நகரத்துக்கு அருகில் பகஸ்ரா என்ற ஊர்தான் எங்கள் சொந்த ஊர். அந்த ஊரின் தலைவராக இருந்தவர் என் தாத்தா. சொந்த ஊரிலும் சரி, அக்கம் பக்கத்திலும் சரி, அவருக்கு மதிப்பும், மரியாதையும் இருந்தது.

அந்தக் காலத்தில் எல்லாம் நாட்டின் பல்வேறு பகுதிகளையும் சேர்ந்த இசைக் கலைஞர்கள், நாடகம் போடுபவர்கள், மேஜிக்காரர்கள், சமயச் சொற்பொழிவாளர்கள் என்று பலதரப்பினரும், ஊர் ஊராகச் சென்று நிகழ்ச்சிகள் நடத்துவது வழக்கம். அப்படி, எங்களுடைய பகஸ்ரா கிராமத்துக்கும் அவர்கள் வந்து, நிகழ்ச்சிகள் நடத்துவது வழக்கம். அவர்கள், தங்குவதற்கு, அப்போது ஓட்டல்கள் எல்லாம் கிடையாதே! எனவே, கிராமத் தலைவரான, எங்கள் தாத்தாவுடைய பெரிய வீட்டில்தான் அவர்கள் தங்குவதற்கு வசதி செய்து தரப்படும். மாலை, மற்றும் இரவு நேரங்களில் தானே இசை நிகழ்ச்சி முதலியவை நடக்கும். எனவே, பகல் பொழுதில் அவர்கள் சும்மா தான் இருப்பார்கள்.

ஓய்வு எடுக்கிற நேரம் தவிர மற்ற சமயங்களில் எங்கள் குடும்ப உறுப்பினர்கள் போல பேசி, பழகிக் கொண்டிருப்பார்கள். ஆனால் இசைக் கலைஞர்கள், நாடகக்காரர்கள் எல்லாம், என்னை இம்ப்ரெஸ் செய்யவில்லை. ஒருநாள், ஒரு மேஜிக் கலைஞர் வந்திருந்தார். அவர் ரொம்பப் புகழ்பெற்றவர் இல்லை. தெரு ஓரத்தில் தந்திரங்கள் செய்து காட்டி, பிழைப்பு நடத்துகிற கழைக்கூத்தாடிதான்! அவருக்கும் எங்கள் வீட்டில் தங்கிக் கொள்ள அனுமதி வழங்கப்பட்டது.

(தொடரும்)

✉ 'தமிழக வாக்காளர்களின் தனிப்பெரும் கடமை' தலையங்கம் படித்தேன். வாக்காளர்கள் ஜெயலலிதாவைப் புறக்கணிக்க வேண்டிய காரணத்தையும், வாஜ்பாய்க்கு ஏன் மற்றுமொரு வாய்ப்புத் தரவேண்டும் என்பதற்கான காரணத்தையும் அழகாக, எளிமையாகப் பட்டியலிட்டிருந்தது தலையங்கம்.
மொரட்டுப்பாளையம்,
க. நா. இராஜேஸ்வரன்.

✉ கட்சிகளின் தேர்தல் வெற்றி (தோல்வி?) வாய்ப்பை நடுநிலைமையுடன் அலசியிருந்தது பாராட்டத்தக்கது. பணத்தையும், கட்சித் தொண்டர்களையும் நம்பி உள்ள வேட்பாளர்கள், தங்கள் தலைவர்களின் கொள்கையற்ற கூட்டணிகளை மறந்து பேச வேண்டிய கட்டாயத்துக்குத் தள்ளப்பட்டுள்ளதை உணர முடிகிறது.
சென்னை – 26, சி. மகேஷ்.

✉ இயல்பாகப் பேசாமல் எழுதி வைத்துப் படித்தும் எதிர்க்கட்சித் தலைவரைக் கண்டபடி ஏசியும், கூட்டம் சேர்ப்பதைவிட, பேசாமல் கூட்டம் சேர்ப்பது என்கிற மூப்பனாரின் தனி பாணி பாராட்டப்பட வேண்டியதே!
பெங்களூர் – 40,
என். ராஜா.

## மூன்றாவது அட்டை முதல் அட்டையாகியிருக்க வேண்டும்!

✉ மூன்றாவது அட்டையில் இருக்கும் ம.செ.வின் வண்ணப் படம் அட்டையில் இருந்திருக்கும்பட்சத்தில் கல்கி வாசகர்களுக்கு இரட்டிப்பு போனஸ் கிடைத்திருக்கும்!
சென்னை–33, எஸ். உமா.

✉ கௌரி ராம்நாராயண் கலைகளை நுண்ணுணர்வுடன் ரசித்து எழுதும் விமர்சனங்களைப் போலவே, அவருடைய ஆங்கிலப் புலமையும் வார்த்தைகளின் நுட்பங்களை உணர்ந்து கையாளும் எழுத்து நடையும் பலராலும் பாராட்டப்படுபவை. தமிழிலும் ஆழ்ந்த கருத்துகளைச் செதுக்கியெடுத்த வார்த்தைகளால் விறுவிறுப்பாக அவரால் வெளியிட முடியும் என்பதைக் 'கல்கியின் படிமங்கள்' கட்டுரை உணர்த்தியது.
பெங்களூர், ஏ. ஷண்முக சுந்தரம்.

✉ கண்ணிருந்தும் கருத்துக் குருடர்களாய் வாழும் மனிதர்கள் நிறைந்த சமுதாயத்தில், கண் பார்வையை முற்றிலும் இழந்த நிலையிலும், தமது இலக்கிய ஆர்வத்தாலும் விமர்சனத் திறனாலும் தம்மை வெளிச்சப்படுத்திக் கொள்ளும், கோவை ஞானியின் தன்னம்பிக்கை சிலிர்க்க வைத்தது. சின்ன இழப்புகளுக்கே தங்களைச் சுருக்கிக் கொள்வோருக்கு இவரைப் போன்ற உதாரண மனிதர்களின் வாழ்க்கையும் வெற்றிகளும் நல்ல பாடம்.
வேலாயுதம்பாளையம், எம். சம்பத்.

✉ சுமி தேர்தல்ல நிற்கிறாங்களா? பின்னே, டிரைவ்-இன்-ஓட்டல்களில் இளைஞர் – இளைஞிகளின் செயல்பாடுகளில் உண்டாகும் சந்தேகங்களைக் கேள்வியாக எழுப்பியது பெற்றோர்களின் (வத்தி வச்சு) வோட்டைக் கவர்ற மாதிரியல்ல இருக்கு!
பூனாம்பாளையம், ஆர்.பி. ஜெயச்சந்திரன்.

✉ தாம்பரம் ரங்கனாதபுரத்துக் கிணறு பல டீக்கடைகளுக்கு உதவியாக உள்ளதோ, இல்லையோ, பல 'காலரா கஃபே'க்களுக்கும், 'மரண விலாஸ்' ஓட்டல்களுக்கும் பெரும் உதவியாக உள்ளதென்பதில் ஐயமில்லை.
காரைக்குடி, பாலு.

✉ ஜாதித் தீயில் எரிந்து கொண்டிருப்போருக்கு சாட்டையடி, போட்டிக் கதை. அறிமுக எழுத்தாளர் ராஜலட்சுமிக்குப் பாராட்டுக்கள்.
குருவிகுளம், பி. குருசாமி.

✉ 1998 மக்களவைத் தேர்தலின்போது திராவிடர் கழகம் பிரசாரம் செய்யவில்லை என்ற கல்கியின் கூற்றை (12.9.99 இதழ்) மறுக்கிறேன். பா.ஜ.க.வுடன் அ.இ.அ.தி.மு.க. கூட்டணி வைத்ததை திராவிடர் கழகம், அதிகாரபூர்வமாகக் கண்டித்துத் தீர்மானம் நிறைவேற்றியது. திராவிட இயக்கக் கொள்கைகளுக்கு மட்டுமல்ல; தமிழ்நாட்டிற்கும், தமிழ் மக்களுக்கும் செய்யும் துரோகம் அது என்றும் திராவிடர் கழகப் பொதுச் செயலாளர் மானமிகு கி. வீரமணி கண்டித்தார் (21.11.1997). பொதுச் செயலாளர் அந்தத் தேர்தலில் பிரசாரம் செய்யாமல் அமெரிக்கா போய்விட்டார் என்று குறிப்பிட்டுள்ளதும் சரியல்ல.
சென்னை – 7, கவி. பூங்குன்றன்,
உதவிப் பொதுச் செயலாளர்,
திராவிடர் கழகம்.

# உயர்ந்த தலைவர் கருணாநிதி!

மீண்டும் அத்வானி பி.ஜே.பி.யின் தலைவராகி விட்டார்! குஷாபாவ் தாக்கரே என்னவானார் என்கிறீர்களா? விஷயம் இதுதான்: தேர்தல் சீர்திருத்தத்துக்கான தினேஷ் கோஸ்வாமி கமிட்டியில், "நாட்டின் இயற்கையான குடிமகன்களைத் தவிர வேறு யாரும் தேர்தலில் போட்டியிடக் கூடாது!" என்றார் இரா. செழியன். அத்வானி இதை எதிர்த்தார். காரணம், இவர் (அன்றைய பிளவுபடாத இந்தியாவில்) லாகூரில் பிறந்தவர் என்பதால், அது பின்னால் ஏதும் பிரச்னைகளுக்கு வழி வகுத்து விடுமோ என்கிற முன்னெச்சரிக்கை! இந்த விஷயத்தை ஒரு பத்திரிகையாளர் லீக் செய்து விட, "அப்படியொரு பேச்சே கமிட்டியில் எழவில்லை!" என்று அத்வானி மறுத்தார். தமது மறுப்புக்குத் துணையாக, செழியனிடமிருந்து ஒரு விளக்கம் தரக் கோரவே, செழியனும் ஃபேக்ஸில் தமது விளக்கத்தை அத்வானியின் வீட்டுக்கு அனுப்பியிருக்கிறார். இதை அத்வானியின் வீட்டிலிருந்து கட்சி அலுவலகத்துக்கு மறு ஃபேக்ஸ் செய்தபோது 'எல்.கே. அத்வானி, பி.ஜே.பி. தலைவர்' என்கிற அடைமொழியோடு அனுப்பி விட்டனர். இது தவறிப் போய் அனுப்பப்பட்டதல்ல. வாஜ்பாய் இருக்கும்போது தமக்கு பிரதமர் சீட் கிடைக்காது என்கிற நிச்சயத்தில்தான், அத்வானி கட்சியின் தலைமைப் பொறுப்புக்கு வர விரும்புகிறார். அதற்கான முன்னோட்டம்தான் இது என்கிறார்கள்!

● இந்தத் தேர்தலில் தங்கள் கட்சி முந்நூறு இடங்களுக்கு மேல் கைப்பற்றும் என்று பத்திரிகையாளர்களிடம் கூறிய அத்வானி, இன்னொன்றையும் சொன்னார். "கருணாநிதி, ஹெக்டே, சந்திரபாபு நாயுடு போன்ற உயர்ந்த தலைவர்களுடன் தோளோடு தோள் நின்று போட்டியிடுவதால் அந்தந்த மாநிலங்களிலும் மக்களின் எழுச்சியைப் பார்க்க முடிந்தது!" என்றார். 'உயர்ந்த தலைவர்கள்' என்கிற பட்டம் உண்மையா, ஐஸா? என்று பத்திரிகையாளர்கள் திணறிப் போனார்கள்.

● நேரு டிரஸ்டுகளுக்கு, சோனியா காந்தியே நிரந்தரத் தலைவராக அறிவிக்கப்பட்டிருப்பது பற்றிக் குடைந்து கொண்டிருக்கிறார் அருண்ஷோரி. இவர் ஒரு விஷயத்தைக் குடைய ஆரம்பித்து விட்டால் ஏழு மலை, ஏழு கடல், ஏழு வனங்களையெல்லாம் தாண்டி குகைக்குள் இருக்கும் கிளியைக் கண்டுபிடித்து விடுவார் என்பதால், சோனியா தரப்பு கலங்கித்தான் போயிருக்கிறது.

● பிரியங்கா, தமது கணவர் ராபர்ட் வதேராவை 'சற்றே விலகியிரும்' என்று சொல்லியிருக்கிறாராம். ஏனெனில் வட இந்தியர்களைப் பொறுத்தவரை இந்த 'பர்தன் வாலா' (அதாவது ,பாத்திரக் கடை வைத்திருப்பவர்), நேரு குடும்ப இமேஜுக்குப் பொருத்தமானவராகக் கருதவில்லையாம். அதனால்தான் சென்ற தேர்தலில் பிரியங்காவுடன் சேர்ந்து மேடைகளில் கையசைத்தவர், இப்போது ஒதுங்கியிருக்கிறாராம்.

● "சோனியாவின் ஒரே சாதனை, அவர் இரண்டு குழந்தைகளைப் பெற்றதுதான்!" என்று ஜார்ஜ்

பெர்னாண்டஸ் தரக்குறைவாக விமர்சித்ததற்குப் பதிலடியாக, இன்னும் கிழிறங்கி ஜார்ஜ் பெர்னாண்டஸ் ஜெயா ஜெட்லியுடன் வைத்திருக்கும் 'லிவ் இன்' ஏற்பாடு பற்றிக் கிழியாய்க் கிழிக்கின்றனர் சோனியா கட்சியினர். இது போதாதென்று அவரது பழைய வாழ்க்கை மொத்தத்தையும் ஆராய்ந்து கொண்டிருக்கின்றனர்.

• அருண்ஷோரி

• ராப்ரி தேவி

• அத்வானி

• முலாயம் சிங்

• ஜார்ஜ் பெர்னாண்டஸ்

● லாலுவின் மனைவி ரப்ரிதேவி, "அரண்மனை போதும் அடுக்களைக்கே போகிறேன்!" என்று அழவே ஆரம்பித்து விட்டாராம். பீஹார்ப் பெண்ணாய் லட்சணமாய் ரொட்டி சுட்டுக் கொண்டிருந்தவருக்கு தினமும் வரும் நூற்றுக்கணக்கான ஃபைல்களைக் கண்டு குமட்ட ஆரம்பித்து விட்டதாம். ஆனாலும் லாலு விடுவதாய் இல்லை. "உன்னை விட்டால், வேறு யாரை நம்பி இந்த நாற்காலியில் உட்கார வைக்க முடியும்?" என்று மனைவியைச் சமாதானப்படுத்திக் கொண்டிருக்கிறாராம். இந்த குடும்ப தர்பாரில் வெறுப்புற்ற பலர், தேர்தலுக்குப் பிறகு லாலுவின் கட்சியிலிருந்து கூண்டோடு விலகுவார்கள் என்றும் சொல்லப்படுகிறது.

● முஸ்லீம்களின் வோட்டுகளைப் பெறுவதற்காக, தாம் போகுமிடங்களிலெல்லாம் நமாஸில் கலந்து கொள்கிறார் முலாயம்சிங்! அதோடு "நபிகள் நாயகத்தின் பிறந்தநாளை விடுமுறை நாளாக அறிவிப்பேன்!" என்று ஒரு போடும் போட்டிருக்கிறார் ஒரு கூட்டத்தில்.

● வாஜ்பாயின் 'வளர்ப்புக் குடும்பம்' குறிப்பாக வளர்ப்பு மருமகன் ரஞ்சன் பட்டாச்சார்யா அடிக்கும் லூட்டி பற்றி ஆர்.எஸ். எஸ்ஸே புருவத்தை உயர்த்த ஆரம்பித்து விட்டது. அதனால், "தேர்தல் முடியட்டும். வளர்ப்புகளையெல்லாம் அவரவர் வேலையைப் பார்த்துக் கொண்டு போகச் சொல்லி விடுகிறேன்!" என்று வாஜ்பாயே சொல்லியிருக்கிறாராம்.

**— இந்த்ரப்ரஸ்தன்**



• ஒரிசாவில் நல்லடக்கம் செய்யப்படும் முன் பெற்றோரின் இறுதி அஞ்சலி

அந்தக் கப்பி மண் பாதையெங்கும் சோகம் கவிந்து கிடக்கிறது. ஓட்டு வீட்டின் தாழ்வாரத் திண்ணையில் துயர் நிறைந்த கிராமத்து முகங்கள்.

சுவரில் மல்லிகைச் சரம் சூடிக் கொண்ட பாதிரியார் அருள் தாஸின் புகைப்படம்.

படுகொலைச் சம்பவம் நடந்து பதினைந்து நாட்களுக்கு மேலாகியும் சோகத்தின் பிடியிலிருந்து இன்னமும் மீளவில்லை அந்தக் கிராமம்.

புதுக்கோட்டையிலிருந்து 20 கி.மீ. ஆலங்குடி. அங்கிருந்து 8 கி.மீ. ராசியமங்கலம் கிராமம். இங்குதான் எட்டாம் வகுப்பு வரை படித்திருக்கிறார். அடுத்து பள்ளங்கோயிலில் பத்தாம் வகுப்பு வரை பள்ளிப் படிப்பு.

கருமாத்தூரில் ஏழு வருடம் குருத்துவப் படிப்பு. இறைப்பணிக்காக ஒரிசா மாநிலம் சென்றார். அங்கிருந்தபடியே பங்குத் தந்தை பட்டம் பெற்றால் தாய், தந்தையும், சகோதரர்களும், கிராமத்து மக்களும் அதைக் காண முடியாமல் போகுமெனக் கருதி தஞ்சை மறை மாவட்டத்தில் பங்குத்தந்தை பட்டம் பெற்றிருக்கிறார்.

முதல் வகுப்பிலிருந்து எட்டாவது வரை ஒன்றாய்ப் படித்த பால்ய நண்பர் ஐ. அந்தோணிசாமி. அருள்தாசுடன் நெருங்கிப் பழகிய நாட்களைக் கண்ணீருடன் நினைவு கூர்கிறார். பள்ளியில் படித்த காலத்திலிருந்து இறைப்பணியில் அவரிடம் மிகுதியான நாட்டம் இருந்ததை நம்மிடம் விவரிக்கையில் அந்தோணிசாமியின் கண்களில் ஒருவித சோகம் தேங்கி நிற்கிறது.

"என் மகனைப் பற்றிக் கேட்க வந்திருக்கீங்களா? நாங்க அவரை ஆண்டவனுக்குக் காணிக்கையாக்கிட்டோம்..." என்று சொல்லி, தன்னிரு கைகளையும் விண்ணை நோக்கி விரித்துக் காட்டுகிறார் தாய் ஆரோக்கியமேரி (வயது 55).

குடும்பத்தின் மூத்த குமாரனை இழந்த துக்கம் தாயைப் போலவே தந்தையிடமும் மண்டிக் கிடக்கிறது. அத்தனை ஆழ்ந்த துயரிலும், "ஆண்டவன் அழைச்சிட்டார்... என் மகனை. இதை வேறெப்படிச் சொல்றது?" என்று நம்மிடமே கேட்கிறார் செங்கோல் உடையார் (வயது 75).

தாய், தந்தை, சகோதரர் ஆரோக்கியசாமி மற்றும் நண்பர்கள் உறவுகள் என்று 12 பேர் கொண்ட ஒரு குழுவாக ஒரிசா சென்று வந்திருக்கின்றனர்.

பங்குத் தந்தையாக இருந்த பாலசூர் என்னும் ஊரில் பாதிரியார் அருள் தாசின் உடல் நல்லடக்கம் செய்யப்பட்டுள்ளது.

அம்

நல்லடக்கத்தில் கலந்து கொண்டு ராசியமங்கலம் திரும்பி வந்தவர்களை, நாள்தோறும் பலர் வந்து விசாரித்து விட்டுச் சென்றபடி இருக்கிறார்கள்.

வருடந்தோறும் கிராமத்திற்கு வந்து ஒரு மாதம் முழுக்க தங்கிவிட்டுப் பின்னர் ஒரிசா செல்வது வழக்கம். இங்கு வந்து தங்கியிருக்கும்போது கூட ஒரிசாவில் உள்ள மலைவாழ் மக்களின் குழந்தைகளுக்கு என்று துணிமணிகள் வாங்கிச் செல்வாராம். அவர்களுக்குத் தேவையான உடைகள், புத்தகங்கள் வாங்கிக் கொடுக்கப் பணம்... என்று எப்பொழுதும் அந்தச் சிந்தனையாகவே இருப்பார் என்று நெருங்கிப் பழகியவர்கள் கூறுகிறார்கள்.

மூன்று மாதத்திற்கு முன்பாக மே 10 அன்று ராசியமங்கலம் வந்தவர் பாதிரியார் அருள்தாஸ். ஜூன் 10 வரை கிராமத்தில் தாய், தந்தை, நண்பர்கள், கிராமத்து மனிதர்கள் என்று எல்லோரிடமும் இயல்பாய்ப் பழகி விட்டுத்தான் ஒரிசா சென்

நிருக்கிறார்.

அப்பொழுது தமது நெருங்கிய நண்பர்களிடம், "ஒரிசாவில் நிலைமை சரியில்லை. என் உயிருக்குக் கூட ஆபத்தான சூழ்நிலை உள்ளது. இருந்தாலும் என் உயிரை ஏற்கெனவே நான் இறைவனுக்கு அர்ப்பணித்து விட்டேன். என் இறைப் பணியில் பின்வாங்க மாட்டேன்!" என்று சொல்லியிருக்கிறார்.

• பாதிரியார் அருள்தாஸ்

ஒரிசா சென்று வந்ததில் தாம் அங்கு கேட்டறிந்தவைகளை மனத்திலிருந்து இறக்கி வைக்கும் பாரமாய் நம்மிடம் சொல்லிக் கொண்டிருந்தார் ஆரோக்கியசாமி. இவர் பாதிரியார் அருள்தாசின் சகோதரர்.

பாதிரியார்

# தொடுத்தோர் நெஞ்சில்...

அருள்தாஸ் தம்முடன் ஒரு உபதேசியாரை அழைத்துக் கொள்கிறார். அவருக்கு 'கட்டை' என்று செல்லப் பெயராம். மோட்டார் சைக்கிளில் பயணம். மலைப் பிரதேசம்.

அவர்கள் சென்றடைய வேண்டிய இடத்திற்கு மோட்டார் சைக்கிளில் கூட செல்ல முடியாதாம். வண்டியை ஒரு இடத்தில் நிறுத்தி விட்டு அடர்ந்த காடுகளின் வழியாக 10 கி.மீ.க்கு மேல் நடந்து போயிருக்கிறார்கள்.

குறுகலாய் ஓடி வரும் ஆற்றைக் கடந்த பிறகு வருவதுதான் ஜமாபானி. மலைவாழ் மக்கள் வாழும் பகுதி. தமது ஆளுகைக்குட்பட்ட பாலசூர் மறைமாவட்டப் பள்ளிகள் மூலமாக அங்குள்ள குழந்தைகளுக்குக் கல்வி வசதி செய்து கொடுத்துள்ளார் பாதிரியார் அருள்தாஸ்.

நம்மூரில் பொங்கல் விழா மாதிரி ஜமாபானியிலும் அன்று பொங்கல் விழா. இதில் கலந்து கொள்ளத்தான் பாதிரியார் அருள்தாஸ் தம்முடைய உதவியாளரை உடனழைத்துச் சென்றிருக்கிறார்.

விழாவின் இறுதியாக நடைபெற்ற மலைவாழ் மக்களின் நடனத்தைப் பார்த்து விட்டு பாதிரியாரும், உபதேசியாரும் தனியாக ஒரு வீட்டில் இரவு படுக்கைக்குச் சென்றுள்ளனர்.

நள்ளிரவில் பயங்கர ஆயுதங்களுடன் ஒரு கும்பல் அந்த வீட்டை முற்றுகையிட்டு கதவைத் தட்டியிருக்கிறது. கதவைத் திறந்து முதலில் எழுந்த உபதேசியாருக்கு பலமான அடி விழுந்துள்ளது. சப்தம் கேட்டு எழுந்த பாதிரியார் அருள்தாஸ் நிலைமையின் விபரீதத்தைப் புரிந்து கொண்டு, "அவரை ஒன்றும் செய்யாதீர்கள். நான்தான் பாதிரியார்" என்று சப்தமிட்டிருக்கிறார்.

அவ்வளவுதான். உருட்டுக்கட்டை அடிகள் பாதிரியார் அருள்தாஸ் பக்கம் திரும்ப, திகைத்து நிற்கையில் ராட்சத டார்ச் லைட்டுகளின் வெளிச்சத்தில் பாதிரியார் அருள்தாசை சரியாக அடையாளம் கண்டு கொண்டது கும்பல். பின்னர் சரமாரியாக எட்டு அம்புகளை அவர் உடல் மீது தொடுத்திருக்கிறார்கள்.

அதில் நான்கு அம்புகளின் பலமான தாக்குதலினால் மரணம் நிகழ்ந்துள்ளதாக பிரேதப் பரிசோதனை அறிக்கை தரும் தகவலைத் தருகிறார் பாலசூர் மறை மாவட்டப் பாதிரியார் ஐசக்.

ஓர் அம்பு வலது மார்பில் 5.6 அங்குலம் துளைத்துள்ளது. இதில் நுரையீரல் சிதைந்துள்ளது. வயிற்றில் 6 அங்குலம் சென்று பாய்ந்துள்ளது இன்னொரு அம்பு. தலையின் பின்புறம் பாய்ந்து மூளையைப் பாதித்துள்ளது மூன்றாவது அம்பு. வலது கண் வழியே ஊடுருவிச் சென்றிருக்கிறது நான்காவது அம்பு.

"அம்பு தொடுத்தோர் நெஞ்சில் அன்பு இல்லையே?" என்னும் வினா அந்தக் கிராமத்து மனிதர்களின் நெஞ்சங்களில் ஒலித்துக் கொண்டே இருக்கிறது.

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

# எல்லா பத்திரிகைகளும் சோனியாவை எதிர்ப்பதேன்?

● எம். சிவகுருநாதன், சென்னை – 42.

? 'பாரதிய ஜனதா ஆட்சியில்தான் அப்துல் கலாமுக்கு பாரத ரத்னா விருது வழங்கப்பட்டது' என்று வைகோ பொதுக்கூட்டத்தில் பேசியுள்ளாரே – முஸ்லிம் என்பதாலா அவருக்கு அவ்விருது வழங்கப்பட்டது?

! விருதையும் அதைப் பெற்றவரையும் ஒருங்கே கேவலப்படுத்துகிற பேச்சு இது. ஏற்கெனவே பி.ஜே.பி. தரப்பில் இப்படிச் சிலர் பேசி வாங்கிக் கட்டிக் கொண்டதை வைகோ இவ்வளவு சீக்கிரம் மறந்திருக்க வேண்டாம்.

● உ. சங்கர்கப்பு,
ஜெயங்கொண்டசோழபுரம்.

? போதிய பாதுகாப்பு வசதி இல்லாததால் ரூ 2300 கோடி மதிப்புள்ள உணவு தானியங்கள் வீணாகிறதாமே?

! ஆண்டுதோறும் வீணாகிறது! சி.ஏ.ஜி. அறிக்கையில் எச்சரிக்கையும் கண்டனமும் ஆண்டுதோறும் வெளியிடப்படுகின்றன. ஆனால் நிலைமை என்னவோ சீராக வில்லை. இத்தனை ஆண்டுகளில் வீணான பொருள்களின் மொத்த மதிப்பைக் கணக்கிட்டால் நம் அந்நியச் செலாவணி கடனை அடைக்கக்கூடிய அளவுக்கு இருக்கும்.



• மறதி!



• கிண்டல்!



• காரணம்!

## நீங்கள் கேட்டவை – தராசு



• கல்லாதவர்!

● கே. வி. சூர்யா,
நல்லத்துக்குடி.

? அரசியலும் சமூகநலமும் என்ற தலைப்பில் பேச வேண்டுமானால், தற்போது எந்த அரசியல்வாதியை அழைக்கலாம்?

! பேசுவதற்கென்ன...! யாரை வேண்டுமானாலும் அழைக்கலாம். வந்து உருகி உருகிப் பேசுவார்கள். செயல்படுத்த...? ம்ஹூம் மூச்!

● ஆர். பி. ஜெயச்சந்திரன்,
பூனாம்பாளையம்.

? 'அதிகாரத்தில் பங்கு, அரசியலில் பங்கு, அதுபோல் நிலத்திலும் தலித்களுக்குப் பங்கு உண்டா?' என்று த.மா.காவின் புதிய கொள்கையைக் கிண்டலடித்துக் கேள்வி எழுப்பியிருக்கிறாரே கருணாநிதி?

! முதல்வரின் கேள்வியில் தொனிக்கும் கிண்டலுக்கு மூப்பனார் பதில் சொல்லி விட்டார். ஆனால் சமுதாய நீதி காவலர்களாகத் தங்களைக் கூறிக் கொள்வோர் எழுப்பக் கூடாத கேள்வி இது. அதிகாரத்தில், அரசியலில் பங்கு அளிக்கப்படும்போது தாழ்த்தப்பட்டவர்கள் பொருளாதாரரீதியிலும் முன்னேறுவார்கள் என்ற கொள்கை திராவிட கட்சிகளுக்கும் ஏற்புடையதுதான்.

● எஸ். ராஜாராமன், ஆறுபாதி.

? 'எம்.ஜி.ஆரைப் பத்தி யாராவது தப்பாகப் பேசினால் என்னால் தாங்கிக் கொள்ள முடியாது; அவர்களை அங்கேயே, அப்போதே அடித்து விடுவேன்' என்று தாமரைக்கனி கூறுவது முறையா?

! அங்கேயே அப்போதே அடித்து விட தாமரைக்கனிக்கு அந்த ஒரு காரணம் மட்டுமே தூண்டுகோலில்லை என்பது இங்கேயே இப்போதே நமக்குத் தெரியாதா என்ன!

● ஆர். இராமசாமி, ஸ்ரீவில்லிபுத்தூர்.

? மாநிலத்துக்கு மாநிலம் மாறுபட்ட கொள்கைகளைக் கடைப்பிடிக்கும் கம்யூனிஸ்ட் கட்சியைப் பற்றி உங்கள் கருத்து என்ன?

! அது கம்யூனிஸ்ட் கட்சியல்ல... 'கன்ஃப்யூஷனிஸ்ட்' கட்சி!

● என். பாலகிருஷ்ணன், மதுரை – 1.

? அமைதி – மௌனம் – என்ன வித்தியாசம்?

! அமளியிடையேயும் அனுபவிக்கக்கூடிய மனோநிலை அமைதி – கொஞ்சம் மனப் பயிற்சி இருந்தால் இது சாத்தியம். ஆனால்,

மௌனம் என்பது அமைதியின் அறிகுறியாக இருக்க வேண்டிய அவசியமில்லை; புயலின் அடையாளமாகவும் அது இருக்கலாம்.

● ஏ. முத்துலட்சுமி, மதுரை – 16.

*? ஜெயின் கமிஷன் அறிக்கை தி.மு.க. மீது குற்றஞ்சாட்டியதால்தான் ஊழல் குற்றச் சாட்டுக்கு உள்ளான ஜெயலலிதாவுடன் கூட்டணி அமைக்க நேரிட்டது என சோனியா காந்தி கூறியிருப்பது பற்றி...?*

! ராஜீவ் கொலை வழக்கு விசாரிக்கப்பட்டு தீர்ப்பும் வழங்கப்பட்டு விட்டது; ஜெயலலிதா மீதான வழக்குகள் இன்னும் முடியவில்லை. அவர் அவற்றுக்கு ஒத்துழைக்கவும் தயாரா யில்லை. எனவே, சோனியாவுடைய 'கூட் டணி முடிவின்' அடிப்படை ஜெயின் அறிக்கை என்பதைக் காட்டிலும் போபர்ஸ் விசாரணை அச்சுறுத்தல்தான்.

● சீர்காழி சாமா, சீர்காழி.

*? ஆயிரம் புத்தகம் படிப்பதை விட என்*



• பலவீன வாதம்!



• காற்றடித்து...



• யுத்த வர்ணனை!



• வண்டு...



• ...நத்தை!

*பேச்சைக் கேட்டால் அதிக பலன் கிடைக் கும் என நெடுஞ்செழியன் கூறியிருப்பது பற்றி...?*

! அம்மாவுக்கு அருகிலேயே இருக்கிறாரல் லவா, ஆணவக் காற்று அடிக்கிறது!

● கே. ஆர். உபேந்திரன், தஞ்சாவூர்.

*? 'முனை முறிந்த கத்தியும் ஓட்டை விழுந்த கேடயமும் ஏந்தி கண்போன குதிரையில் சவாரி செய்து தேர்தல் போருக்கு வந்திருக் கிறார் மூப்பனார்' என காளிமுத்து வர்ணித் திருப்பது பற்றி...?*

! மூப்பனாரின் ஆயுதங்களும் குதிரையும் (கட்சியும் தொண்டர்களும்) பழுதுசொல்ல முடியாதவை. அவர் சேர்ந்துள்ள படைதான் (கூட்டணி) நம்பிக்கைக்குப் பதிலாகக் கலக் கத்தை ஏற்படுத்துகிறது. காளிமுத்துவின் கட்சி யிலோ ஆயுதங்களே விஷம் தடவியவை. தேர் தல் போர் தர்மத்துக்கு விரோதமானவை!

● வி. சிவா, மதுரை.

*? 'மீண்டும் அ.தி.மு.க. ஆட்சி தமிழகத்தில் அமைந்தபின் கருணாநிதிக்குப் பாடம் கற் பிப்பதுடன் அவரைக் கூவத்தில் வீச வேன்' என ஜெயலலிதா கூறியிருப்பது பற்றி...?*

! தோல்வியிலும் பாடம் கற்கத் தவறுபவர்கள் குறித்து என்னத்தைச் சொல்வது!

● கே. கே. பாலசுப்ரமணியன்,

சென்னை – 53. ❑

*? சோனியாவுக்கு எதிராக வரிந்து கட்டிக் கொண்டு எல்லா பத்திரிகைகளும் எழுதுவது ஏன்? நடுநிலை வகிக்க வேண்டியதுதானே பத்திரிகைகளின் பொறுப்பு?*

! நடுநிலை என்பது யாரையுமே ஆதரிக்காத வினக்கெண்ணெய்த்தனம் அல்ல. அந்தந்த சந்தர்ப்பத்தில் நாட்டுக்கு எது உகந்தது என் பதை விருப்பு வெறுப்பின்றி ஆராய்ந்து எடுத் துச் சொல்வதுதான் நடுநிலை. – வழக்கு விசா ரணையில் நீதிபதி கவனமாக இருதரப்பு வாதங்களையும் பரிசீலித்துத் தீர்ப்புச் சொல் வது போல. இன்று பெரும்பாலான பத்திரிகை கள் சோனியாவை எதிர்ப்பது, அவருக்கு அரசியலுக்கான அடிப்படைத் தகுதிகள் இல்லை என்பதால்தான்.

● எம். ரேவதி, மன்னார்குடி.

*? ஆந்திரா சைக்கிளுக்கும் தமிழக சைக் கிளுக்கும் நீங்கள் காணும் வேறுபாடு என்ன...?*

! ஆந்திர சைக்கிள் சுயபலத்தில் வண்டு போல் விரைய வருகிறது; தமிழக சைக்கிள் பிரச் னைக்குரிய கூட்டணிக் கட்சிகளின் பாரத்தைச் சுமப்பதால் நத்தை வேகத்தில் நகர்கிறது.

● கிழாம்பூர். எஸ். ராமையா.

*? அமரர் கல்கி பற்றி இதுவரை யாரும் கூறாத செய்தி...?*

! கீச்சுக்குரல்காரர்தான். ஆனால் மனம் லயித்துப் பாடுவார். கால் மேல் கால் போட்டு அமர்ந்து உள்ளங்காலில் தாளம் போட்டபடி பாடுவார் – உலகை மறந்து பாடுவார்! ⭘

**❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :**
**கே. கே. பாலசுப்ரமணியன்,**
**பிளாட் 32, சாரங்கபாணி தெரு,**
**கிருஷ்ணாபுரம், அம்பத்தூர்,**
**சென்னை - 53.**



## சுமி சூப்பர்மார்க்கெட்

சில வீக்ஸா என் ரசிகர்கள் எவ்ளோ ஏங்கிப் போயிருப்பாங்கன்னு புரிஞ்சுக்க முடியுது. கழுதை தேய்ஞ்சு சித்தெறும்பு ஆனாப்பல, ரெண்டு பக்கம் ஒரு பக்கமாறதும் ஒரேடியா காணாமல் போறதும் மறுபடியும் தலைகாட்றதுமா ரொம்பக் கஷ்டமாயிடுச்சு இல்லை?

ஆஹா அணையப் போற விளக்கு, அதான் ஆட்டம் காணுதுன்னு சில எனிமீஸ் கத்தை கத்தையா நம்ம Column Pagesஐ கட் பண்ணி அனுப்பி, 'இதெல்லாம் ஒரு லேங்வேஜா? எடிட்டரம்மா, இதை கன்டின்யூ பண்றது பத்தி ரீகன்ஸிடர் பண்ணுங்க'ன்னு கூரியர்ல அனுப்பிப் பார்த்தாங்க. (என் லேங்வேஜைப் பழிக்கற அவங்களைப் பழிவாங்கறதா முடிவு பண்ணிட்டேன். லாஸ்ட் ஐட்டம் பாருங்க.)

எனிவே, கொஞ்ச நாளா நான் அடிக்கடி ஆப்ஸன்ட் ஆறதுக்குக் காரணம் நான் இல்லை. கலைஞரும் மூப்பனாரும் ஜெயலலிதாவும் ஜி.ஏ. வடிவேலுவும் சோனியாவும் சுஷ்மாவும் லத்தீஃபும் திருமாவளவனும் கிருஷ்ணசாமியும்தான். ஒழுங்கா வோட்டுப் போட்டு அவங்களையும் மன்னிச்சிருப்பீங்கன்னு நம்பறேன். (பை த வே ஒருவழியா இந்த எலக்‌ஷன்ல எனக்கு வோட்டுப் போடற வயசு வந்தாச்சு.)

எங்க ஏரியா பூத்ல என்னோடது பதினஞ்சாவது வோட்டு. ஏ(ர்)லி மா(ர்)னிங் எழுந்து போய் போட்டுட்டு வந்துட்டேன்.

எனக்கு முன்னால நின்னுட்டிருந்த ஒரு அம்மா, "எனக்கு எந்த பார்ட்டியும் பிடிக்கலை. யாராவது சுயேட்சைக்குத்தான் குத்தப் போறேன்"னு சொல்லிட்டு ஆப்பிள் சின்னம் அழகா இருக்கா, புஸ்தக சின்னம் பெட்டரான்னு பார்த்துட்டிருந்தாங்க.

உள்ள போனதும் பயங்கர மூட் அவுட். பேரைக் கேட்ட ஆபீஸர், வெரிஃபை பண்ணிட்டு, "உங்க வோட்டு போட்டாச் சேம்மா"ன்னாரு கூலா.

கம்ப்ளெயின்ட் பண்றதா, அதுக்கு ஏதாவது ஃபார்ம் இருக்கான்னு நான் கேட்க, "விட்ருங்க"ன்னு ரகசியமா கெஞ்சறாரு ஆபீசர்!

இன்னொரு இன்ஸிடன்ட்.

"வோட்டுப் போட்டியா சுமி?"ன்னு ரொம்ப அக்கறையா கேட்ட ஒரு நண்பர், அவர் விரலைக் காட்டினார். ஒரே விரல்ல ரெண்டு இங்க் மார்க்.

எப்படின்னு ஆச்சர்யப்பட்டேன். பக்கத்து விரலால (கொஞ்சம் நீளம் ஜாஸ்திதான்!) அழகா 'மார்க்'கை மறைச்சி, 'இப்படித்தான்'னு காட்டினார்.

வாழ்க ஜனநாயகம்!

* * *

## வாழ்க ஜனநாயகம்!

திருட்டு வீடியோ ப்ராப்ளம் பத்தி பக்கம் பக்கமா எழுதி போரடிச்சுப் போச்சு. (ரீஸன்டா லோக்கல் கேபிள்ல 'தால்' பார்த்தேன். ஐஸ்வர்யா எவ்ளோ ஸ்மார்ட் – என்னை மாதிரி!)

சமீபத்துல அதிர்ச்சிகரமான அந்தரங்க விஷயம் – உதயம் தியேட்டர்ல புதுசா ரிலீஸாயிருந்தது ஒரு விஜய் படம். (மின்சார கண்ணான்னு நினைக்கறேன்) ஒரு ஆசாமி பகிரங்கமா தியேட்டர்ல வீடியோ கேமராவோட சுத்திட்டிருக்க, பயங்கர ரகளை ஆயிடுச்சாம்.

அந்த ஆளை விசாரிச்சவங்க, எக்யுப்மென்ட்ஸெல்லாம் 'மின் பிம்பங்கள்'காரங்களுதுன்னு நியூஸ் பரப்பிட்டாங்க.

ஏதுடா, கலாட்டால பாலசந்தர் தலை சிக்குதேன்னு விசாரிச்சேன்.

நத்திங். தமிழ் சினிமா பத்தி, ஒரு ஜப்பான் கம்பெனிக்கு டாகுமென்டரி எடுத்துத் தர்ற சமாசாரமாம். தியேட்டர் வாசல் களேபரத்தைப் பார்த்துட்டு, 'யார் இந்த ஹீரோ? மக்களுக்கு அப்படியென்ன க்ரேஸ்?'னு விசாரிச்சி பேட்டியெடுக்கப் போனவங்களைத்தான் திருட்டு வீடியோ ஆசாமின்னு நினைச்சி டின் கட்டியிருக்

காங்க.

இந்தச் சுறுசுறுப்பும் 'சமூக அக்கறையும்' கள்ள வோட்டு விஷயத்துலேயும் இருந்தா எவ்ளோ நல்லாருக்கும்?

* * *

கர்நாடிக் மியூசிக்ல பாட்டு போடறாங்களே, அவங்களுக்கு வார்த்தை முதல்ல வருமா? இல்லை டியூனா...? இரண்டும் சேர்ந்தா? எது இன்ஸ்பிரேஷன் பக்தி? கஷ்டம்? ஹாப்பினஸ்...? இதப் பத்தியெல்லாம் மூணு கம்போஸர்ஸைக் கூப்டு பேசச் சொன்னாங்க ஒய்.ஏ.சி.எம்ல வி.வி. ஸ்ரீவத்ஸவா ரொம்ப ஸ்காலர்லியாகவும் தஞ்சாவூர் சங்கரய்யர் ரொம்ப ரஞ்சகமாவும் ரவிகிரண் ஒரு லெக்-டெம் மாதிரியும் தங்கள் அனுபவங்களை ஷேர் பண்ணிக்கிட்டாங்க. ஆனா யாராலையுமே பாட்டு பிறக்கற அந்த மேஜிக் மோமண்டைத் துல்லியமா தொட்டுக் காமிக்க முடியலை!


• ரவிகிரண்

ரவிகிரண், முருகனுடைய பன்னிரண்டு கண்களுக்கும் கண்ணாடி (ஸ்பெக்ஸ்தான்!) வேண்டுமா?ன்னு (அருள் பார்வை செலுத்தத்தான்) கேட்டுத் தாம் போட்ட பாட்டைப் பாடிக் காட்டினார்! சிரிப்புத் தாங்கலை! வேகமா வரதுக்கு மிஸ்டர் முருகனுக்கு மயில் போதாது, மாருதி கார் வேண்டுமான்னு கற்பனைய எக்ஸ்டென்ட் பண்ணிக்கிட்டே போலாமில்ல! சில ப்ரில்லியண்ட் காம்பசிஷன்ஸும் பண்ணியிருக்கார் ரவிகிரண். முடிக்கறப்போ அவர் சொன்னதென்ன தெரியுமோ? 'வித்வான்கள், மும்மூர்த்திகள் பாட்டைத்தான் அதிகமா கையாளணும்'னார்!

* * *

நாஞ்சில் நாடனோட 'எட்டுத் திக்கும் மதயானை' – சமீபத்துல நான் ரசிச்சிப் படிச்ச நாவல். ஜானகிராமனுக்குத் தஞ்சாவூர், ஜெயகாந்தனுக்கு மெட்ராஸ், சுந்தர ராமசாமிக்கு கன்யாகுமரி மாதிரி நாஞ்சிலாருக்கு (அர்த்தம் மாறிடுதோ?) மும்பை. 'எங்கு சுத்தியும் மும்பையைச் சேர்'ங்கறது அவரோட கேரக்டர்ஸுக்கு எழுதி வைக்கப்பட்ட விதி. பட், அந்த ஸிடியோட கலரையும் வாசனையையும் நெரிசல் தர்ற கசகசப்பையும் இவரை விடத் திறமையா வேற யாராவது எழுத்துல கொண்டு வந்திருக்காங்களான்னு தெரியலை.

அழுத்தமான, விறுவிறுப்பான, திறமையான நாவல். (விஜயா பதிப்பகம், கோவை.)

* * *

கல்கி நூற்றாண்டு நிறைவு விழாவைக் கண்ணுற்று இறும்பூதெய்தும் பேற்றை யான் பெற்றேன். விழாக் குறிப்புகளைச் சஞ்சிகைகளிலும் ஏனைய நாளிதழ்களிலும் உவந்து நோக்கி உளம் பூரித்திருப்பீர்.

ஈண்டு யான் குறிப்பிட விரும்பும் செய்தியொன்றுண்டு. அவ்வமயம் வாயிலில் காட்சிக்கிருந்த புகைப்படங்களைக் கண்ணுற்ற ஒரு முதியவர் எம்மை யடுத்துக் கேட்டார்: "கல்கியாரின் வழலைக்குப்பி, சாளேஸ்வரக் கூடு, அழைப்பான், பெட்டியெனக் காட்சிக்கு வைத்துள்ளீர்களே, அன்னாரின் நாட்குறிப்பேடு ஏதும் உளதோ இவ்விடத்தில்?" என வினவினார்.

வியப்புற்றேன். ஆம். முதியவர் கேட்டபடி அன்னாரின் நாட்குறிப்பேடுகள் ஏன் இல்லாமலாயின? கண்காட்சிப் பொறுப்பாளர்கள் சிலரிடம் உசாவியதில் நாட்குறிப்பு அவர் எழுதியிருந்தாலல்லவா? என்று எள்ளலுடன் பதிலிறுத்தனர்.

அவ்வமயம் என் சங்கடமுணர்ந்த ஓரன்பர் இடைபுகுந்து சொன்னார் :

"அவரே ஒரு காலக் குறிப்பேடு. அவர் திறந்து வைத்த பக்கங்களிலல்லவா இன்று பலரும் எழுதிக் கொண்டிருக்கிறார்கள்?"

மேனி சிலிர்த்துப் போனேன். வெள்ளித் திரைக் கதாநாயகர்களுக்கு மட்டுமா மோகங் கொண்ட ரசிகர்கள் உளர்?

அல்ல! வெள்ளைத் திரையிலும் அது சாத்தியந்தான் போலும்!

(எதிரிகள் கவனத்துக்கு : இப்ப திருப்தியாச்சா? ஆர், யூ, லைக் மீ டு கன்டின்யூ திஸ் ஸ்டைல் ஃபார் எவர்?

— சுமி

வி

ட்டுத் தாழ்வாரத்தில் நிற்கும்போதெல்லாம் தன் பிஞ்சுக் கால்களையும் கைகளையும் உயர்த்தி காற்று மண்டலத்தில் குத்துகளும் உதைகளுமாய் விட்ட வண்ணம் இருந்திருக்கிறான் அந்தச் சிறுவன்.

கதவு மறைவிலிருந்து இதை வெகு நாட்களாய் 'கவனித்து' வந்திருக்கின்றனர் அவனது தாயும், தந்தையும். அந்தச் சிறுவனின் விழிகளில் ஒருவித கனவும் உள்ளத்தில் என்றும் தளர்ந்திடாத ஆர்வமும் ஒளிந்திருப்பதை உணர்ந்துகொண்டார் தந்தை. உடனே அவனை ஒரு டேக்குவாண்டோ (கொரியன்) காரத்தே பயிற்சி வகுப்பில் சேர்த்துவிட்டார்.

அவனுக்கு அப்போது வயது நான்கு. படித்துக் கொண்டிருந்தது எல்.கே.ஜி. முன்னாள் 'வெயிட் லிஃப்ட்'டரான கே. கிருஷ்ணன் – கோமளம் தம்பதியரின் ஒரே புதல்வன் கே. பாலாஜி.

"முற்றிலும் இது ஒரு தற்காப்புக் கலைதான். வேறெந்த தீய செயல்களுக்கும் இதனைப் பயன்படுத்துவது கராத்தே கலைக்கு அத்தகைய நபர்கள் செய்கின்ற கொடுமையான துரோகமே!" என்று மிகவும் மென்மையாக நம்மிடம் முன்னுரை தருகிறார் மாஸ்டர் எம். கணேசன் (வயது 40)

இந்தியாவில் பெங்களூரைத் தலைமையகமாகக் கொண்டு செயல்படும் டேக்குவாண்டோ கராத்தே அமைப்புக்கு உலகம் முழுவதும் பல கிளைகள் இருக்கின்றனவாம். கொரியாவில் இருக்கும் தலைமை அலுவலகம் உலகெங்கிலும் உள்ள அமைப்புகளை வழி நடத்திச் செல்கிறதாம்.

பெரியார் – மணியம்மை கல்வி நிறுவனங்களின் மாணவ மாணவிகளுக்கு கராத்தே பயிற்சி வகுப்புகள் எடுத்து வருகிறார் எம். கணேசன்.

'டேக்குவாண்டோ' கராத்தே என்பது கால்களைக் கொண்டு தேக்குவது – தாக்குவது. மற்ற வகை கராத்தே பயிற்சிகளில் கைகளைக் கொண்டு தாக்குவதும் – தடுப்பதும் முக்கிய அங்கமாக இருக்கும். இதில் கால்களே பிரதானம்.

நம்முடைய அவயவங்களில் கால்கள் நல்ல பலத்துடன் இருந்து விட்டால் நாம் எதையும் சாதிக்க முடியும் என்கிறார் அவர். வயோதிகத்தில் இரண்டு கால்களும் வலுவிழந்து போனால் மூன்றாவது காலாக ஊன்றுகோல் ஒன்றை நாட வேண்டிய அவசியம் டேக்குவாண்டோ பயிற்சியாளருக்கு நேர்ந்து விடாது என்றும் சொல்கிறார்.

பாலாஜியின் நான்கு வயதிலிருந்து அவனுக்கு இன்றுவரை நல்ல குருவாகவும் சிறந்த வழிகாட்டியாகவும் மாஸ்டர் எம். கணேசன் நிழல் போல் தொடர்ந்து வருவதை நன்றியுடன் நினைவு கூர்கிறார்கள் கே. கிருஷ்ணன் – கோமளம் தம்பதியினர்.

தமது இருபத்தியேழு வருட அனுபவத்தில் மிக மிகக் குறைந்த வயதில் கராத்தே கற்றுக் கொள்ள வந்து சேர்ந்து இந்த ஆறேழு வருடத்திற்குள் மிக உயர்ந்த நிலைக்கு வந்துள்ள சிறுவன் இந்தியாவிலேயே இவன் ஒருவனாகத்தான் இருக்க முடியும் என்கிறார் மாஸ்டர் எம். கணேசன்.



• பாலாஜி

# சின்ன வயதில் பெரிய சாதனை!



**மு**தன்முதலாய் சிறுவன் பாலாஜி அணிந்து கொண்டது வெள்ளை பெல்ட். இதுதான் தொடக்கம். முதல் வகுப்பு படிக்கும்போது டேக்குவாண்டோ கராத்தேயில் அவன் வாங்கியது மஞ்சள் பெல்ட்.

படிப்படியாய் பச்சை, நீலம், சிவப்பு, சிவப்பு ஒன்று என்று பெல்ட்டுகளின் வண்ணங்கள் மாறி வந்தபோது அவன் வயதும் கொஞ்சம் கொஞ்சமாய் உயர்ந்து கொண்டே வந்தது.

சென்னையில் தமிழ்நாடு மாநில அளவிலான டேக்குவாண்டோ கராத்தே போட்டிகள் நடைபெற்ற ஆண்டு 1998. அதில் அகில இந்திய நடுவர்கள் முன்னிலையில் பாலாஜி மிகச் சிறப்பாக எட்டு கத்தாஸ்கள் (பாடங்கள்) செய்து காண்பித்திருக்கிறான். கைகளால் செங்கல் உடைத்தல் மற்றும் ஸ்லோ ஆக்ஷன் தாக்குதல், ஸ்பீடு ஆக்ஷன் தாக்குதலை திறம்பட செய்திருக்கிறான்.

இந்தச் சிறுவயதில் இத்தனை ஆற்றலா என எல்லோரும் வியந்து போயிருக்கின்றனர். அன்று அவன் பெற்றது கறுப்பு பெல்ட். வயது ஒன்பது. இந்த வயதில் இந்தியாவில் இதுவரை யாரும் கராத்தேயில் கறுப்பு பெல்ட் பெற்றதில்லை என்று சொல்கிறார் மாஸ்டர் எம். கணேசன்.

சென்ற வருடம் லக்னோவில் நடைபெற்ற தேசிய அளவிலான கராத்தே போட்டிகளில் 30 கிலோ எடைப் பிரிவில் தமிழ்நாட்டிலிருந்து கலந்து கொண்டான் பாலாஜி என்பதைப் பெருமையுடன் குறிப்பிடுகிறார்கள் பெற்றோரும் மாஸ்டரும்.

சிறுவனை இந்த அளவோடு போதுமென நிறுத்திக் கொள்ள மனமில்லை மாஸ்டருக்கு. பயிற்சிகளின் போதும், போட்டிகளின் போதும் சிறு தவறு (ஃபவுல்) கூட செய்யாததை உன்னிப்பாகக் கவனித்து இருக்கிறார் அவர்.

ஆங்காங்கு நடைபெறும் பயிற்சி வகுப்புகளுக்கு பாலாஜியை மாஸ்டராக செயல்பட வைத்திருக்கிறார். இன்றளவும் பலருக்கும் (எல்லோரும் இவனைவிட வயது அதிகம்!) கராத்தே கற்றுக் கொடுத்து வருகிறான் பாலாஜி.

மாவட்ட அளவில் நடைபெறும் போட்டிகளில் நடுவராகப் பணிபுரிவதற்கான எழுத்து மூலமான தேர்வு, செய்முறைத் தேர்வுகளில் முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றிருக்கிறான். அதன் பின்னர் மாநில அளவிலான போட்டிகளில் நடுவராகப் பணி புரிய வேண்டிய எழுத்து - செய்முறைத் தேர்விலும் முதன்மையாக வந்திருக்கிறான்.

**க**டந்த மாதம் மேட்டூரில் மாநில அளவி



• எம். கணேசன்

லான டேக்குவாண்டோ கராத்தே போட்டி. தமிழ்நாடு முழுவதும் இருந்து கலந்து கொண்டோர் முந்நூற்றி ஐம்பது பேர்.

அங்கு நடைபெற்ற போட்டிகளில் மதிப்பெண் அளித்து வெற்றி தோல்வியை நிர்ணயம் செய்யும் நடுவர்களில் ஒருவராக பாலாஜி. வயது பத்து.

மாநில அளவுப் போட்டிகளில் இத்தனை சிறு வயதில் யாரும் நடுவராக இருந்ததில்லை எனக் கூறுகிறார் மாஸ்டர். கறுப்பு பெல்ட் முதல் பெருமை. நடுவராக இருந்தது இரண்டாவது பெருமை என்று பூரிப்புடன் சொல்கிறார்கள் பெற்றோர்கள்.

இது இரண்டாவது பெருமையெனில் மூன்றாவது பெருமைக்கு எதுவும் எதிர்பார்ப்பு உண்டா என்கிறோம் நாம். "உண்டு" என்று உரத்த குரலில் கூறுகிறார்கள் நால்வரும்.

''தேசிய அளவிலான போட்டியில் வெற்றி பெற்று, ஒலிம்பிக் தகுதி நுழைவுப் போட்டியிலும் தேர்ச்சி பெற வேண்டும். உலக அளவிலான ஒலிம்பிக் டேக்குவாண்டோ கராத்தே (WTF) போட்டியில் கலந்துகொண்டு இந்தியாவிற்கு தங்கப் பதக்கத்தைத் 'தட்டிப் பறித்து' வர வேண்டும் என்பதே எங்களது குறிக்கோள்!'' என்கின்றனர்.

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

# மதுரை இவர் கையில்!

''எங்க தேடியும் இந்த அட்ரஸுக்கு வழி சொல்ல மாட்டேங்கிறாங்களே...'' என்று வெயிலில் அலைந்து திரியும் டிரை சைக்கிள்காரர்கள், வியாபாரிகள், விற்பனைப் பிரதிநிதிகள் என்று யாரும் தடுமாறாமல் முகவரி கண்டுபிடித்துப் போக உதவி செய்து வருகிறார் மதுரை பி.பி. குளத்திலுள்ள ராமு.



மதுரையில் எலி மருந்து வாங்க நல்ல கடை எது? என்பது முதல் எலிசபத் டெய்லர் படம் எங்கே கிடைக்கும் என்பதுவரை எல்லா விவரங்களும் சொல்கிறார் இந்த அறுபது வயதுக்காரர்.

இவருடைய மளிகைக் கடை வாசலில் ''தங்கள் நண்பர்களின் அலைச்சலைக் குறைக்க எஸ்.ஆர். ஸ்டோரில் உங்கள் முகவரியைப் பதிவு செய்வீர். கட்டணம் இல்லை!''

''நண்பர்களே! உங்களுடைய படைப்பாற்றலை வளர்க்க கவிதை, ஜோக், பொன்மொழிகள் எழுதித் தாருங்கள்... எல்லோரும் படிக்கும்படி போர்டில் எழுதிப் போடுகிறேன்!'' என்றெல்லாம் எழுதி வைத்திருக்கிறார்.

''பிறருடைய அலைச்சலைக் குறைக்க வேண்டுமென்ற ஆசை உங்களுக்கு எப்படி ஏற்பட்டது?'' என்றதும் மழை மாதிரி மடமடவென்று பொழிந்தார் ராமு.

''மத்தவங்களை விட ஏதாவது ஒரு விதத்திலேயாவது நாம வித்தியாசமா இருக்கணும். அதுவும் பிறருக்கு உதவுவது மாதிரி இருக்கணும்னு நினைச்சேன். அந்த சமயத்தில்தான் 'சார் இந்த அட்ரஸ் எங்கே இருக்கு?'னு ஒரு கேஸ் கம்பெனிக்காரர் கேட்டார். சொல்லிட்டு திரும்பறதுக்குள்ளே, 'இங்க தி.மு.க. கவுன்சிலர் வீடு எங்க இருக்குனு' கேட்டுக்கிட்டு கட்சிக்காரங்க வந்தாங்க. சிறுகச் சிறுக எல்லோருடைய முகவரிகளையும் ஒரு சின்னப் புத்தகத்தில் எழுதி வைக்க ஆரம்பிச்சேன். இப்ப ஏறக்குறைய மதுரை டைரியாவே மாறிட்டேன்!'' என்கிற ராமு சமயத்தில் போஸ்ட்மேன்களுக்கே அட்ரஸ் சொல்லுகிறார்!

— பழ. சேதுராமன்

படம்: ஜே.எஸ். சதீஷ்குமரன்



**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

வசீகரமான தோற்றம் உள்ள உங்களுக்கு, இந்த வாரம் அதுவே பல முக்கிய தருணங்கள்ல சாதகமான வாய்ப்புகளைத் தேடித் தரும். இப்ப உங்களுக்குப் புதிய உடைகள் பல வந்து குவியற நேரம். கேளிக்கைக்குக் குறைவிருக்காது. நீண்ட நாள் ஆசை ஒண்ணு நிறைவேறப் போவுது. ஆனாலும் குடும்பத்துல சண்டை, சச்சரவுகள் அப்பப்ப தலை தூக்கறதுக்கு நீங்க காரணமா இருப்பீங்க. விட்டுக் கொடுத்து நடந்துக்கங்க.



**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

கடினமான உழைப்பு, தூக்கமின்மை, மன அமைதிக் குறைவுன்னு ரொம்பவே அல்லாடுவீங்க. ஆபீஸ்ல உங்க எதிரிகள் கை ஓங்கியிருக்கும். உங்க சின்னச் சின்ன அசைவுகளும் கண்காணிக்கப் படுதுன்றதை ஞாபகத்துல வெச்சிக்கங்க. வெளி வட்டாரத் தொடர்பும் அவ்ளோ சிறப்பா இல்லை. எடுத்த காரியங்கள் தன்னிட்டே போவுதுன்னு கவலைப் பட்டிட்டுருக்கறதைவிட, ஒரு வழியா முடிக்கப் பாருங்க. வீட்டுல அடிக்கடி சண்டை, மனஸ்தாபம் வரும். பெரியவங்க சொல் கேட்டு நடந்துக்கங்க.



**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

கிரகங்கள் சாதகமாவே இருக்கு. கவலை வேண்டாம். புதிய முயற்சிகள் தொடங்க சரியான நேரம். வழக்குகள் சாதகமாவே தீர்ப்பாகும். போட்டி, பந்தயங்களும் வெற்றியே தரும். பொருளாதார ரீதில நல்ல அபிவிருத்தி தெரியும். சிலருக்கு அதிர்ஷ்ட வாய்ப்புகளும் வரும். ஃபாரின் சான்ஸ், உத்தியோக உயர்வு, சம்பள உயர்வு, ஏதாவது விருதுகள் - இப்படி எது வந்தாலும் ஆச்சரியப்படாதீங்க. நேரம் அப்படி. பெண்களுக்குத் திருமண யோகம் கூடி வரும் சமயம் இது.



**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

வாக்கு சாதுர்யத்தால பல காரியங்கள் வெற்றிகரமா நடக்கும். எதிரிங்க பணாலாயிடுவாங்க. உங்க தீர்மானமான முடிவுகளோட அடிப்படைல வளர்ச்சிப் பாதைல சூப்பரா நடை போடலாம். விஞ்ஞானிகளும் வியாபாரிகளும் இப்ப தனலாபம் நிறைய அடையற நேரம்னா, பேனாக்காரங்களும் பெண்களும் புகழடையற நேரம். வீடு, மனை வாங்கற யோகம் சிலருக்கு இருக்கும். நண்பர்கள் விஷயத்துல மட்டும் எச்சரிக்கையா இருங்க. சிலர் கூட இருந்தே குழி பறிப்பாங்க.



**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

வளமான நேரம்னே சொல்லலாம். உங்க நல்ல முயற்சிகள் எல்லாமே வெற்றி பெறும். பொருளாதார அபிவிருத்தி ஏற்படும். அதேசமயம் சில சுப காரியங்களுக்கும் தாராளமாவே செலவு செய்ய நேரும். கலைத் துறையினருக்கு வளர்ச்சிப் பாதை புலப்படும். பெண்களுக்குக் கேட்கவே வேண்டாம். எதிலும் வெற்றிதான். குறிப்பா, நிர்வாகத் துறையில இருக்கற பெண்களுக்கு புகழும் சௌகர்யமும் ஓங்கும். சிலருக்குப் புதிய வாகன யோகம் இருக்கும்.



**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

சின்ன விஷயங்களுக்காகக் கவலைப் படறதை நிறுத்துங்க, குழப்பமே உங்க ராத் தூக்கத்தைக் கெடுத்து, கண்ணெரிச்சலை உண்டு பண்ணும். ஆபீஸ்ல, அதிகாரிகளோட அதிருப்திக்கு ஆளாகாம பார்த்துக்கங்க. உழைப்பும் அலைச்சலும் அதிகமா இருக்கும். பலன் இல்லாம போகாதுன்னாலும் கொஞ்சம் ஓய்வும் முக்கியமில்லையா? பொது இடங்கள்ல சாப்பிடறது, ரயிலில் தொலைதூரம் பயணம் ரெண்டும் வேண்டாம். பிக்பாக்கெட்காரங்ககிட்ட உஷாரா இருங்க.

# நடக்குமென்பார்

## அக்னிசர்மா பக்கம்



## மகர ராசிக்காரரான சிவாஜிக்கு மனதுக்கு இதமான காரியங்கள் நடக்குமாம்!

# நடக்கும்!



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

சில வி.ஐ.பி.ங்க அறிமுகமும் உதவியும் இப்ப கிடைக்கும். சரியா பயன்படுத்திக்கறதைப் பொறுத்து எதிர்காலம் சிறப்பா அமையும். மருத்துவர்களும் ராணுவ வீரர்களும் புகழ் கூடப் பெற்று சந்தோஷப்படுவாங்க. சிலருக்கு ஃபாரின் போற வாய்ப்பு வரும். பணப் பிரச்னை இருக்காது. வியாபாரிகளுக்கு அமோகமான வாரம் இது. நல்ல லாபம் கிடைக்கும். குடும்பத்துல சிறு சலசலப்புகள் உண்டாகி, நீங்கும். ஆன்மீகத்துல மனசு ஆர்வம் காட்டும்.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

தொழில் தொடங்கப் போறீங்களா? லைன் கிளியரா இருக்கு. ஆரம்பிக்கலாம். அரசு ஊழியர்களுக்குப் பழைய பாக்கிகள் வசூலாகும். சேல்ஸ்மென், மெடிக்கல் ரெப்களுக்கு ஆதாயமான வாரம். ஆனா, அலைச்சலும் கடும் உழைப்பும் இருக்கும். கலைத் துறையினருக்குக் கொஞ்சம் சிரம தசைதான். வாய்ப்புகள் பறி போகும். பெண்கள், ஊர் வம்புல தலை விடாம இருக்கறது நல்லது. சிலருக்குக் கால், இடுப்பு ஏரியாக்கள்ல ஏதாவது பிராப்ளம் வரலாம்.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

சாதாரணமான வாரம்தான். காரியங்கள் மந்தமா நடக்கும். எதிர்பார்த்த விஷயங்கள் தள்ளிப் போகும். அதனால சலிப்பு உண்டாகும். வீட்டுல நல்ல காரியம் ஏதோ நடக்கப் போவுது. அநேகமா உங்களுக்கு ப்ரமோஷனோ, வெளியூர் மாறுதலோ வந்து குஷிப்படுத்தலாம். எதிரிகள் - தொழில்ரீதியா ரொம்பப் படுத்துவாங்க. விழிப்போட இருக்கணும். போட்டி, பந்தயங்கள், ஷேர் மாதிரியான முதலீடுகள் இப்ப வேணாம்.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

ஜாலியான வாரம். உல்லாசமா இருப்பீங்க. மனதுக்கு இதமான காரியங்கள் நடக்கும். வழக்குகள் சாதகமா தீர்ப்பாகும். ஆபீஸ்லேயும் நல்ல பேர், புகழ் உண்டாகும். இளம் ஜோடிகள், 'உலவும் தென்றல் காற்றினிலே'ன்னு ஹாயா ஹனிமூன் போவாங்க. உடம்பைக் கொஞ்சம் கவனிச்சுக்கங்க. பெற்றோர் நலத்துலேயும் கவனம் முக்கியம். பணம் கொஞ்சம் அதிகமாவே செலவாகும். கவலை வேணாம்; வரவும் அமோகமா இருக்கும்!



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உடல் நலத்துல கவனமா இல்லாட்டி ரொம்ப சிரமப்படுவீங்க. அநாவசிய வேலைகளை இழுத்துப் போட்டுக்காதீங்க. ஊர் வம்புகள் வேணாம். குறிப்பா, அரசியல்வாதிகளுக்குப் பலவித சங்கடங்கள் வரும். குடுமிப்பிடி சண்டைகளுக்குத் தயாரா இருங்க. பெட்ரோல் மாதிரி எரிபொருள் விஷயத்துல எச்சரிக்கையா இருக்கணும். வீட்டுலயும் உறவுகள் அவ்ளோ சுமுகமா இருக்காது. துர்க்கை வழிபாடு எல்லாத்துக்குமே நல்லது.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

உயர் பதவில இருக்கறவங்களுக்குப் பல சங்கடங்கள் உருவாகும்னாலும் பாட்டாளிகள் பாடு குஷிதான். நல்ல பணவரவு, உத்யோக உயர்வு, திருமணம்னு என்ஜாய் பண்ணுவீங்க. பெண்களுக்குக் காதல் அனுபவங்கள் இனிப்பானதா இருக்கும். நண்பர்கள் உதவுவாங்க. புதிய ஆடை, ஆபரணங்கள் சேரும். சிலருக்கு வீடு மனை வாங்கற யோகமும் உண்டு. ஒரு முக்கிய வெளியூர்ப் பயணம் ரொம்ப ஆதாயமா இருக்கும். வழக்குகளும் வெற்றி பெறும்.

**செப்டெம்பர் 22 முதல் 28 வரை**



இரண்டு நாட்கள் பூரண ஓய்வுக்குப் பின்பு தாமுவும் சூர்யாவும் சுறுசுறுப்பாய் எழுந்தார்கள். பைனல் செக்கப் ஆரம்பித்து விட்டது. உதவி இயக்குனர் மயன் உடன் வந்து சேர்ந்து கொள்ள, இந்திரங்கா ஏவுதளம் முழு வீச்சில் இயங்க ஆரம்பித்தது.

ஒரு வாரத்துக்கு முன்பிருந்தே வெளியாட்களின் அனுமதி தடைசெய்யப்பட்டு விட்டது. பணி செய்பவர்களும் கடுமையான சோதனைக்குப் பின்பே அனுமதிக்கப்பட்டனர். உள்ளே எல்லோரிடத்திலும் ஒரு பரபரப்பு. எவருக்கும் நிற்க நேரமில்லை. தாமுவும் சூர்யாவும் சில அஸிஸ்டென்ட்டுகளுடன் ஸ்பேஸ் ஈகிளில் புகுந்து கொண்டார்கள். இதர விஞ்ஞானிகள் மயனின் மேற்பார்வையில் லேப்பிலும் கண்ட்ரோல் அறையிலும் இறைந்து, கம்ப்யூட்டர் ஸ்கிரீனில் ஆழ்ந்து தகவல்களை சொல்லிச் சொல்லி சரிபார்த்து, தாமு சூர்யாவுக்கு உதவிக் கொண்டிருந்தார்கள்.

அப்பாவும் மகளும் அடுத்த இரண்டு நாட்களும் ஒரு நிமிடம் கண்ணை மூட வில்லை. ஒவ்வொன்றையும் சிரத்தையாய் கம்ப்யூட்டர் மூலம் அலசி...

மயன் அவ்வப்போது தவறுகளைக் கண்டுபிடித்துச் சரிசெய்ய உத்தரவிட்டுக் கொண்டிருந்தார். தாமு அடிக்கடி பெருமூச்சு விட்டார். எதையும் கசிய விடாத அழுத்தம் முகத்தில்.

"அப்பா என்ன?"

தலை குனிந்தார் துக்கத்தை மறைக்க தொண்டையை செருமிக் கொண்டார்.

"ஒண்ணுமில்லை!"

"ஸ்...ஸ்...ஸ்... சொல்லுங்க!"

"என்ன சொல்றது? ரஷ்ஷுவிற்காகத் துடிக்கிறேன்மா."

தலையிலடித்துக் கொண்டாள்.

"இல்லை சூர்யா! நான் ஒரு விஞ்ஞானி மட்டுமில்ல. அதற்கும் மேல் உங்களுடைய அப்பா! என் நாற்பது வயதில் உங்க அம்மாவை இழந்தபின் மறுமணத்தைப் பற்றி ஒருபோதும் எண்ணியதில்லை. நீங்கள்தாம் என் சந்தோஷம்."

அவளுக்கு இலேசாய்க் கண்கள் பனித்தன. ஆதரவாய் அவர் தோளைத் தொட்டாள்.

"அதை நினைக்கிற நேரமா இது? ஒரு பாசமுள்ள தந்தை என்கிறப்போ தன் மகனை உலகமே பாராட்டுவதைப் பார்க்கின்ற ஆவலும் இருக்க வேண்டுமே. இன்னும் இரண்டரை வருஷம் கழித்து அதுதான் நடக்கப் போகிறது. அப்போது பாருங்கள் செவ்வாயைப் பற்றிய புதுப்புது கண்டுபிடிப்புகளுடன் அவன் வரும்போது ஆஹா உலகத்திற்கே ஹீரோ ரஷ்ஷு. ஐயோ! நமக்கு எவ்வளவு பெருமை?"

"ஐயோ! உனக்கு எப்படிப் புரியவைப்பேன்?"

"போதும்... போதும்பா. இந்த வெட்டிப் பேச்சை இத்துடன் நிறுத்திக் கொள்ளுங்கள். கடைசி நிமிஷத்தில் ரஷ்ஷுவிடம் பேசி அவனை பேதலிக்கச் செய்து விடாதீர்கள்."

அப்புறம் அவர் எதையும் பேசவில்லை. முகம் இறுகிப் போய் வேலையில் மூழ்கிப் போனார். பேலோடு, சப் சிஸ்டம் செக்கப் - பவர் டிஸ்ட்ரிபூஷன், ஆர்டினன்ஸ், ஃப்ளைட் கன்ட்ரோல், புரபல்ஷன், எஸ்.எஸ்.ஐ.ஜி. ஆயிற்று. எல்லாம் முடிந்து கண்ட்ரோல் அறையிலிருந்து கிளியரன்ஸ் சிக்னல் வந்து விட்டது. மயன், சூர்யா, மற்ற அஸிஸ்டென்ட்கள் எல்லோரையும் அனுப்பிவிட்டு, மிஸ்டர் தாமு மட்டும் தனியே ரகசியமாக உள்ளேயிருந்த ரோபோவை ஆராய ஆரம்பித்தார்.

# உயிர்களைத்

லேட்டஸ்ட் மாடல். மாடல் எண் : POOKN. 1418. அஷ்டாவதானி. பாரலெல் ப்ராஸஸிங். மாலிக்யூலர் கம்ப்யூட்டிங்கில் பல படிகளைக் கடந்து சிந்திக்குந்திறன் படைத்தது. சென்ற நூற்றாண்டின் இறுதியிலேயே செயற்கை நியூரான், சைனோப்ஸ் முடிச்சுகளின் எண்ணிக்கைக்கு ஏற்ப வேலையாட்கள் முதல் விஞ்ஞானிகளின் உதவியாளர்கள் வரை தயாரிக்கக் கற்றுக் கொண்டிருந்தார்கள்.

ரோபோடை முழுமையாய்ச் சரிபார்த்து,



# தேடித் தேடி...

அவர் நிறைவாய் பெருமூச்சு விட்ட வினாடி, கவுன்ட் டவுன் தொடங்கியிருந்தது.

காலை பதினோரு மணி. அப்பாவும் மகளும் மனசு இலேசாகிப் போக, ஓய்வாக ஹாலில் உட்கார்ந்திருந்தார்கள். ரஷ்ஷு கடைசி நேர அறிவுரைகளை எஸ்.டி.ஏ. டைரக்டரிடம் பெற்றுக் கொண்டு சற்று முன்னர்தான் வந்திருந்தான். இத்துடன் நடுநிசி வரை அவனுக்கு கம்ப்ளீட் ரெஸ்ட் தான். தாமு ரஷ்ஷுவின் பிரிவை எண்ணி மனஉளைச்சலில் கண் மூடிச் சாய்ந்திருந்தார். தலைவரிடமிருந்து போட்டோ போன்.

**தி. தா. நாராயணன்**

திரையில் தலைவர் தாமுவை நேர் பார்வையாய்ப் பார்த்துப் பேசினார்.

"மிஸ்டர் தாமு! உங்கள் செக்கப் வேலை முடிந்து விட்டதா?"

"எஸ் சார்!" – வெறுப்பாய்ச் சொன்னார்.

"மிஸ்டர் மயன் அண்டு சூர்யாவின் வேலை?"

"எல்லா வேலைகளும் முடிந்து விட்டது சார்! இப்போதுதான் வந்தோம்."

"நன்றி மிஸ்டர் தாமு!"

"சார்! ஒரு..."

"உங்க ரிட்டையர்மென்ட்தானே?"

"......................!"

"கடிதத்தைப் படித்தேன். அதை அப்புறம் முடிவு செய்வோம். ரஷ்ஷுவைத் தேர்ந்தெடுத்ததற்கு என் மேல் கோபமா?"

"அரசு உத்தரவை விமர்சனம் செய்வது தேச விரோதம் சார்!" – அவர் குரலில் உஷ்ணம் இருந்தது.

"வெய்ட் தாமு! இந்த ப்ராஜக்டைக் கெடுக்க நம் எதிரிகள் அறுபது உளவாளிகளைக் களத்தில் இறக்கியிருக்கிறார்கள். அது தெரியுமா உங்களுக்கு?"

"அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம் சார்?"

"இருக்கிறது. சரியாக பத்து நிமிஷங்களுக்கு முன்னர் நீங்கள் உட்கார்ந்திருக்கும் உங்கள் வீட்டின் அடித்தளத்தில் சக்தி வாய்ந்த வெடிகுண்டு வைத்தார்கள் தெரியுமா?"

"ஐயோ!" – பட்டென்று எழுந்தார்.

"பதற்றமடைய வேண்டாம். வெடிகுண்டு செயலிழக்கம் செய்யப்பட்டு விட்டது. வைத்தவர்களும் பொசுக்கப்பட்டார்கள். அறுபதில் இருபத்தியெட்டுப் பேர் காலி. வெடித்திருந்தால் சுற்று வட்டாரமே மண்மேடாகியிருக்கும். தாமு அண்ட் ஃபேமிலி நோ மோர் என்று எல்லோரும் ஒருநாள் துக்கம் அனுஷ்டித்திருப்போம்" – தலைவர் சிரிப்பது கேட்டது.

"தாமு! இதில் ஏதாவது உங்களுக்குத் தெரியுமா?"

"இல்லை சார்! ஒரு சின்ன சப்தம் கூடக் கேட்கவில்லை."

"அதுதான் நாம்! இன்னும் கேளுங்கள். ஸ்பேஸ் ஈகிளை தகர்க்க மூன்று முறை முயன்று தோற்றார்கள். கடைசியாக நேற்று பைனல் செக்கப் நடந்து கொண்டிருந்தபோது ராக்கெட்டுக்கே பாம் வைத்து முடியாமல் செத்தார்கள்."

"எங்களுக்கு ஆச்சர்யமாக இருக்கிறது சார்!"

"எதிரியின் பலம் இப்போது புரிந்திருக்கும் உங்களுக்கு. என் வேலை எவ்வளவு கஷ்டம் என்பதுவுந்தான். எப்பொழுதும் நாலாவித கோணங்களையும் யோசித்து அலர்ட்டாயிருக்கும் செஸ் ஆட்டக்காரனைப் போல பத்து மூவ்மெண்ட்களுக்குப் பின் வரப்போகிற விளைவை யூகிக்கும் திறன் வேண்டும். பாருங்கள் இன்ஃப்ராரெட் கதிர்களையும், லேட்டஸ்ட் மாடல் ரோபோக்களையும் கூட ஒன்றுமில்லாமல் செய்ய அவர்களால் முடிகிறது. இனி அவர்கள் வேறு வழிகளில் முயற்சி செய்வார்கள். நாச வேலையை அவர்கள் உங்களிடமிருந்து ஆரம்பிக்கலாம். உங்களை எந்தவிதத்திலாவது விலைக்கு வாங்கலாம்."

"என் தேசப்பற்று அத்தனை பலவீனமானதா சார்?"

"அவர்கள் பலமானவர்கள். உங்களைப் பணத்தால்தான் வாங்க வேண்டுமென்பது இல்லை. நீங்கள் அவ்வளவு கீழ்த்தரமானவருமில்லை. ஆனால் எதிரிகள் உங்கள் பிள்ளைகளின் உயிரைப் பணயமாக்கி உங்களைப் பணியவைக்கலாம். பாசம் எதையும் வென்று விடும். அதிலும் இந்தியர்களாகிய நம்மிடம் இந்த நூற்றாண்டிலும் சற்றும் மாறாதது இந்தப் பாசமும், ஜாதிப் பற்றும்தானே? நம் சூப்பர் கம்ப்யூட்டரும் உங்களை உணர்ச்சிமிகுந்த மனிதர் என்றுதான் சொல்லுகின்றது. எனவே நான் முந்திக் கொண்டேன். ரஷ்ஷூவை தேர்வு செய்தது நான் உங்களுக்கு வைத்திருக்கும் முட்டுக்கட்டை!"

தாமுவுக்குக் கோபத்தில் மூச்சு வாங்கியது.

"ஓ.கே! இந்த அரசு ரகசியங்களையெல்லாம் உங்களிடம் சொல்லிக் கொண்டிருக்க வேண்டுமென்பது இல்லை. பால்ய சிநேகிதன் நீ. மேலும் என் ஆட்சியில் விலைமதிக்க முடியாதவர்கள் விஞ்ஞானிகளே. நாம் எதையெல்லாம் சாதித்து வல்லரசாகியிருக்கிறோமோ அத்தனைக்கும் கர்த்தா விஞ்ஞானிகளே. தலைவணங்குகிறேன். ப்ளீஸ்! என்னைப் புரிந்து கொள் தாமு! உலகில் எதுவும் என்னை பாதிக்காது. நாட்டின் சுபிட்சம் ஒன்றுதான் என்னுடைய டார்கெட். அதற்காக எதையும் இழக்கத் தயாராயிருப்பேன். என் உயிரையும் கூட."

தாமு நெகிழ்ந்து போனார்.

"சாரி சார்! என் ராஜினாமா மனுவை கேன்சல் செய்து விடுங்கள்."

சிறிது நேரத்தில் ஸ்பேஸ் ஈகிள் கிளம்பப் போகும் அதிகாலை நேரம். தேதி: 13.12.2156 கவுன்ட்டவுன் நெருங்கிக் கொண்டிருக்கிறது.

4015.... 4014.... 4013.... 4012.... 4011...

இரவு இரண்டு மணியிலிருந்தே இந்திரங்கா தளத்தில் ஏற்படும் சின்னச் சின்ன அசைவுகளைக் கூட ஐ.பி.எஸ். தன் எல்லா சானல்களிலும் ஒளிபரப்பிக் கொண்டிருக்கிறது. அகப்பட்ட ஒன்றிரண்டு உதிரி விஞ்ஞானிகளை ஐ.பி.எஸ். ரிப்

போர்ட்டர் குடைந்து கொண்டிருக்க, அவர்கள் முகத்தில் பெருமிதம் பொங்க பீற்றிக் கொண்டிருக்கிறார்கள். உலகமே பார்த்துக் கொண்டிருக்க, ராக்கெட்டின் மேற்புறம் கவிழ்ந்திருந்த கூரைகள் கம்ப்யூட்டரின் ஆணைக்கு வணங்கி, ஓரமாய் நகர்ந்து கொள்ள, பிரும்மாண்டமான உயரத்திலிருந்து பீச்சும் சோடியம் வேப்பர் விளக்குகளின் கூச்செரியும் பிரகாசத்தில், ஸ்பேஸ் ஈகிள் முதன் முதலாய் வெளிப்பார்வைக்கு வந்து ராட்சதனாய் ஜொலிக்கிறது!

மரண அமைதி! ஆங்காங்கே பக்கங்களிலிருந்த மனிதர்கள் வாகனங்கள் எல்லாம் நாற்பத்தெட்டு மணி நேரத்திற்கு முன்பே தொலை தூரங்களுக்கு விரட்டப்பட்டு, அந்த ஏரியா முழுவதும் அசைவுகள் ஏதுமின்றி அழுத்தமான அமைதி.

*3614.... 3613... 3612.... 3611... 3610... 3609..*

உள்ளே தரைக் கட்டுப்பாட்டு அறையில் விஞ்ஞானிகள் திரைகளில் ஆழ்ந்திருந்தனர். சரியாய் அறுபது நிமிடங்கள். பரபரக்கும் அறுபது நிமிடங்கள். அப்புறம் இந்த ஸ்பேஸ் ஈகிள், ரஷ்ஷு எல்லாம் கண் சிமிட்டும் நேரத்தில் சடக்கென்று காணாமல் மறையப் போகிறார்கள். முதன் முறையாக மனிதன் செவ்வாய்க்குச் செல்லும் ப்ராஜக்ட். எதிரிகள் எஸ்.ஈக்கு குண்டு வைத்த விஷயம் பரவியதிலிருந்து எல்லோர்க்கும் பயம். எங்கே? எப்படி? எந்த பயங்கரம் காத்துக் கொண்டிருக்கிறதோ? எந்த இடத்திலும் அவர்களால் நுழைந்து விட முடிகிறதே.

*2810... 2809... 2808.... 2807.... 2806...*

தூரத்தில் பார்வையாளர்கள் பக்கம் சலசலப்பு. தலைவர் நேரிடையாகவே வந்து விட்டார். சீக்கிரமே சலசலப்பு அடங்கி விட, மீண்டும் அமைதி சூழ்ந்து கொண்டது. எல்லோர்க்கும் அந்தக் கடைசி நொடியின் த்ரில்களை அனுபவிக்கும் ஆவல். ரஷ்ஷுவை அணைத்தபடி அழைத்து வந்த அதிகாரிகள் கைகுலுக்கி வாழ்த்துச் சொல்ல, ரஷ்ஷு கவச உடையில் அசைந்து அசைந்து ராக்கெட் அருகே செல்ல ஆரம்பித்தான்.

பார்வையாளர்கள் பக்கமிருந்து ஆயிரக் கணக்கான கைகள் உயர்ந்து, அசைந்து கொண்டிருக்க, தாமு பார்த்துக் கொண்டே நின்றிருந்தார். கண்ணாடித் தடுப்புக்கு அந்தப் பக்கம் ஒரே ஆரவாரம், கரகோஷம்.

'கண்ணே! ரஷ்ஷு!' - அவருக்கு கை கால்கள் உதறின. சே! நான் ஏன் இப்படியிருக்கிறேன்? என் சர்வீஸில் எத்தனை ராக்கெட்டுகளை ஸ்பேஸுக்கு அனுப்பியிருப்பேன்? தலையை உதறிக் கொண்டார். ரஷ்ஷு இப்போது ராக்கெட் அருகே மங்கலாய்த் தெரிந்தான். திரும்பி நின்று இரண்டு கைகளையும் உயர்த்தி ஆட்டி கடைசி வணக்கம் சொன்னான். தாமுவுக்குக் கண்ணீர் திரையிட்டது.

"ரஷ்ஷு! போய் வா!"

அவ்வளவுதான்! அப்புறம் லிஃப்ட் அவனை ராக்கெட்டுக்குள் தூக்கிச் சென்று இறக்கி விட, கதவுகள் அழுத்தமாக மூடப்பட்டு பூட்டிக் கொண்டன.

*2415.... 2414.... 2413.... 2412...*

தாமு இன்னமும் அசையாமல் நின்று கொண்டிருந்தார். வியர்த்துக் கொட்டியது. சனியன்! இந்த நேரத்தில் என் பக்கத்தில் இல்லாமல் சூர்யா எங்கே ஒழிந்தான்? யாரிடமாவது பெருமைபட்டுக் கொண்டிருப்பாள். எப்போதும் அவளுக்கு பாஸிட்டிவ் பக்கம் மட்டுமே தெரியும். நெகடிவ் பக்கத்தை யோசிக்கக் கூட மாட்டாள்.

"ரஷ்ஷு! நீ வரும் வரை நான் உயிரோடு இருப்பேனா?"

*2305.... 2304.... 2303.... 2302.... 2301...*

அப்போது மேலும் கீழும் மூச்சு வாங்க மிஸ்டர் மாலி தாமுவை நோக்கி ஓடி வந்து கொண்டிருந்தார். முகம் இருண்டு போய், அதில் கலவரம் தெரிந்தது.

(தொடரும்)

## க்விஸ் போட்டி – 5 முடிவு!

**சரியான விடைகள்:**

**1) அம்பிகாபதி 2) கௌரி 3) ஈராஸ் 4) காதல் கோட்டை 5) பத்மினி 6) டோடி 7) எரிக் சேகல் 8) பிப்ரவரி 14**

சரியான விடைகளை ஏரானமான வாசகர்கள் எழுதியிருந்தார்கள். அவர்களுள் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு ரூ. 200 பரிசு பெறும் அதிர்ஷ்டசாலி:

**Miss. Deepa. J**
**No. 154, III Main Road,**
**C.K. Achkattu,**
**Banashankari III Stage,**
**Bangalore - 85**

மழை வரும் போலத் தெரிந்தது. மேகம் அங்கங்கு முகம் மாறிக் கறுத்துக் கிடந்தது. கொடிகளில் காயப் போட்ட துணிகள், மழை வருவதற்கு முன்பான காற்றில் ஆடின. அநேகப் பெண்கள், கண்ணைச் சுருக்கி மேலே பார்த்தபடி, துணிகளை எடுத்தார்கள். சேகருக்கு, மழை பற்றிய பயம் வந்தது. மழை வந்ததனால் பயமே அன்றி, மழை பயமல்ல.

மழையை விட, அது வீட்டில் உண்டாக்கக்கூடிய சூழல், விரும்பத்தக்கது அல்ல. மழை வரும்பட்சத்தில், பெரியநாயகிக்கு முகம் சிவக்கும். உத்திரத்தின் ஓடுகள் விலகி, உடைந்து போயிருந்தன. அது வழியே, சரளமாக, மழை வீட்டினுள் நுழைகிறது. மேலிருந்து கைநீட்டி, ஹலோ சொல்லி உள்ளே வருகிறது, மழை. சொன்னால், நாயகி ரசிப்பாளா? நிச்சயமாக மாட்டாள். அவளால் முடியாது என்பதே உண்மை.

மழை நீர் வீட்டினுள் ஓடி, நிற்கவும் முடியாமல், உட்காரவும் முடியாமல் தத்தளிக்க வேண்டியிருக்கிறது. அது நிஜமெனினும், யதார்த்தமும் அதுவாகிப் போனதில்தான் சூட்சமமே இருந்தது. மாசம் பிறந்தால் கிடைக்கும் ஆயிரத்து எண்ணூறில், இதைவிடப் பெரிய தாஜ்மஹாலில் அவளைக் குடி வைக்க முடியாது. குழந்தைக்கு அடிக்கடி ஈரத்தால், உடல் சுகமில்லாமல் போய் விடுகிறது என்பதே பெரும்பாலான நாட்களில், நாயகியின் புலம்பலாய் இருக்கிறது. பத்துக்கு எட்டடி அறையில், படுக்க, சமைக்க, உட்கார, சாப்பிட என்று எதிர்பார்க்க முடியாது எனினும், அது பாதுகாப்பானதாகவோ, சௌகர்யமானதாகவோ அமையக் கூடாதா என்பது அவள் வாதம். பரம்பரை வீடு என்பதாலும் சொந்தமானதாக அமைந்து போனதாலும், டஞ்சன் அறைக்குள் நொந்து சாகணுமா என்றாள். அது ஏற்றுக் கொள்ளக்கூடிய ஒன்றுதானெனினும், வேறு வீடு வாங்கவோ அல்லது வேறு வீடு வாடகைக்காகவாவது பார்க்கவோ, பொருளாதாரம் இடம் தரவில்லை.

இதில், மூன்று மாதம் முன்பு விருதுநகர் ப்ராஞ்ச்சுக்கு வேறு மாற்றலாகி விட்டது. அவர்களிடம், "ஐயா! நீங்கள் தரும் சொற்ப சம்பளத்தில் (அப்படிச் சொன்னால் தனியார் கம்பெனிக்காரர்களுக்குப் பிடிக்காது) அல்லது நான் பெறும் சொற்ப வருமானத்தில், இரண்டு எஸ்ட்டாப்ளிஷ்மெண்ட் இயலாத விஷயம்" என்று சொல்ல முடியாது. 'போய் வா' என்று உடனே வேறு கணக்கனை அல்லது கணக்கரை நியமிப்பார்கள்.

ஊரில் ஆயிரம் ரூபாயைக் கொடுத்து விட்டு, விருதுநகரில் எண்ணூறு ரூபாயில் ஓட்ட வேண்டியதாயிற்று. போன புதிதில், வாரா வாரம் ஊருக்கு வந்து போனதில், செலவு இழுத்துக் கொண்டு போய், கடைசியில் மாத இறுதியில் நாராயணனிடம் கைமாற்றுக்கு நிற்க வேண்டியிருந்தது. அன்று இரவு, நாயகியின் கண்கள் கலங்கியிருந்தன. அக்குளில் கிழிந்து, தைத்தான சட்டையில் கண்களைத் துடைத்துக் கொண்டாள். இவள் அளவுக்கதிகமாக நைந்து போகிறாளோ என்கிற அச்சம் தோன்றிற்று. குழந்தை தூங்கியிருந்தான். இவன், அதன் கைகளை எடுத்து முத்தமிட்டான்.

"ச்சு.... எழுப்பிறாதீங்க. காலைல எழுப்பணுமில்ல? முத பஸ்ஸுக்கா போறீங்க?"

"ம்."

"அடுத்த வாரம் வர முடியாதில்ல?"

"ம்."

"எங்களையும் விருதுநகருக்கு கூட்டிட்டுப் போயிருங்க."

"........"

"சொல்லுங்களேன்."

"புரிஞ்சிக்க நாயகி."

"............"

இவன் மெதுவாக அவள் முகத்தை இருட்டுக்குள் ஏந்தினான். சீயக்காய்த் தூள், நல்லெண்ணெயோடும், வெந்தயத்தோடும் இழைந்த வாசம், அவள் தலைமுடியிலிருந்

# தமயந்தி

தது. வேர்வையின் நெடி மீறி அது, இவனை உள்ளழைத்தது. இவன் அவளை அள்ள முயன்றான். அவள், அவன் நெஞ்சில் கை வைத்துத் தள்ளினாள்.

"வேணாம். இது ஒண்ணுதான் கொறச்சல்."

"நாயகி..."

பதிலில்லை. வெறும் மூச்சுக்காற்றின் சப்தங்கள் அறையை நிறைத்தன. காலண்டர், மின்விசிறியின் சீற்றத்தில் டப்டப் பென்று நிசப்தத்தைக் கிழித்துக் கொண்டு ஆடிற்று. எழுந்து, கதவைத் திறந்து வெளியே வந்து, ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்தான். உள்ளே புகை நிறைய, மனசு இறுக லாயிற்று. அவனைப் பற்றின கவலைகள் அவனுக்கே வந்தது. அது ஆச்சர்யமாகவும் இருந்தது. அத்தகைய அக்கறைகள் தோன்றுவது அதுவே முதல் முறையாக இருந்ததால் கூட இருக்கலாம்.

"தூங்கலே?"

நாயகி, கதவோரம் நின்றிருந்தாள். தலைமுடி முன்னால் விழுந்து கிடந்தது.

"இல்ல" என்றான் இவன்.

"மழை வர்றாப்பல இருக்கு. பக்கெட்டை எடுத்து வைங்க. உத்தரத்து ஓட்டையாவது மாத்தியிருக்கலாம். எனக்குத்தான் பரிசு, எனக்குத்தான் பரிசுன்னு கடனக்கிடன வாங்கி, எங்களையும் கூட்டிட்டுப் போயாச்சு. வந்தாச்சு. இப்போ கடனயே அடைக்க முழிக்க வேண்டியிருக்கு? மேல் கூரைய எந்த பகவான் வந்து அடைப்பான்?"

இருட்டுக்குள் பக்கெட்டை ணங்கென்று வைக்கும் சப்தம் முணுமுணுப்புகளை மீறிக் கேட்டது. இவன் மீதமிருந்த சிகரெட் துண்டைக் காலடியில் போட்டு அழுத்தி அணைத்தான். உள்ளங்காலில் சுட்டு, அணைந்து போனது அது.

**நா**யகிக்குத் தான் எதுவும் அணைய வில்லை. தீபாவளி போனசுக்கு வந்த எழுநூற்றைம்பது ரூபாயை, உத்திரத்தை சரி செய்யத்தான் வைத்திருந்தான். அந்த நேரம், இவன் எழுதின கதைக்குப் பரிசு கிடைக்கக்கூடிய சூழல் ஏற்பட்டிருந்தது. அந்த விழாவிற்கு வர பெரியநாயகி விருப்பம் தெரிவித்திருந்தாள். பரிசை விழா மேடையில் அறி

விக்க இருந்தது ஒரு காரணமெனினும், பரிகத் தொகை, விழாவிற்குச் சென்று வரும் செலவை விட மும்மடங்கு அதிகம் என்பது தான் நிஜமான காரணம். போனசுக்கு வந்த பணம், ஊர் சென்று வரக் காணாது என்று முடிவெடுத்ததும் நாயகிதான்.

"எதுக்கும் ஒரு ஆயிரம் ரூவா நாராயணன் சார்கிட்ட வாங்கிக்கோங்க. பரிக கொடுக்கற நேரம், ஃபோட்டோ எடுக்க வேணாம்?" என்றாள். இப்படி நிறைய சந்தோஷங்களோடு துவங்கிய அந்தப் பயணம், கனவுகளையும் சுமந்திருந்தது. விழா மேடையில், பரிசு 'எழுத்துலக சக்கரவர்த்தி ராஜசேகருக்கு' என்று அறிவிக்கிறார்கள். பெரிய நாயகி சிரிக்கிறாள். கைத்தட்டுகிறாள். மீண்டும் வீடு திரும்பும்போது, வீடு, தங்க மண்டபமாய் மாறியிருக்கிறது. தேரோடும் வீதி, வற்றாத நதி, நிலைமாடங்கள், குயில்கள் என்று வாழ்க்கை பிரகாசமாகிறது.

என்றாலும், விழா மேடையில், பிரகாசமான விளக்குகள் மத்தியில் முடிவைத் தெரிவிக்கிறார்கள். இவனுக்கல்ல. பெரியநாயகி இவன் கைகளைப் பற்றிக் கொள்கிறாள். "விடுங்கப்பா" என்றாள். அதுதான் சரியான அணுகுமுறை என்று தீர்மானித்துக் கொண்ட இவனும், நாயகி சொன்னது போல விட்டு விடத் தீர்மானித்தான். ஆனால், அவளால் விட முடியவில்லை.

**ஊ**ருக்கு வந்த நான்காம் நாள், வெறும் மோரை, சாதத்துக்கு நாயகி ஊற்றியபோது, அவள் முகம் இறுகிக் கிடந்தது.

"குழம்பு வக்கலையா நாயகி"

"வைக்கலை."

"உடம்பு முடியலையா?"

"நல்லாத்தானே இருக்கு?"

"பின்னே ஏன் குழம்பு வைக்கலை?"

"தாக்க சுருக்கிக்கத் தெரியணும்."

"ஏன்?"

அவள், அவனை நிமிர்ந்து பார்த்தாள். சோற்றுப் பானைக் கரண்டியைப் பானையில் டொக்கென்று இடித்தாள்.

"பெரிய கதை எழுதுதேன்னு தேவையத்த செலவு செஞ்சாச்சு. இங்கென்ன வெளைஞ்சா கெடக்கு?"

"நான் சாப்பிடக் கூடாதுன்னு சொல்றியா? அல்லனா, சாப்பிடத் தகுதியத்தவன்னு சொல்றியா?"

அவள் மௌனமாயிருந்தாள். இவன், சாப்பிடாமல் எழுந்து கை கழுவினான். முன் படியில் வந்தமர்ந்தான். உள்ளே பாத்திரங்கள் உருளும் சப்தமும், இடைவிடாமல் முணுமுணுக்கும் இற்ற குரலின் ஒலியும் கேட்டுக் கொண்டேயிருந்தது. அடிப்படையான பொருளாதார நிலைப்பாடின்றி, இலக்கியம் நோக்கின பாதை, சூன்யமானது என்பது தெளிவாயிற்று. அவளுடன் இனி எவ்வாறு பேச முடியும்? எவ்வாறு மாதத்தில் ஒருநாள் வீடு நோக்கி வர முடியும் என்றும் தோன்றிற்று. அந்தத் தடவை, அவளிடம் ஏதும் சொல்லாமல், அவளும் எதுவும் பேசாமல், அவன் கிளம்பினான்.

பஸ்ஸில் ஏறி உட்கார்ந்ததும், அவனை யறியாமலே கண்கள் பொங்கின. தூசியைத் துடைக்கிற சாக்கில் கண்களைத் துடைத்துக் கொண்டாலும், அவள் மீது ஒருவித வெறுப்பு தோன்றிற்று. என்றாலும், அடுத்த மாதம் ஊருக்கு எப்போது போகலாம் என்றே இருக்க, இவனும் ஊருக்கு வந்து வீட்டுக் கதவைத் தட்டினான். கீழ் மத்தியத்தர குடும்பப் பிணக்குகள், பொருளாதார நிலைப்பாட்டில் எழுந்து, எது குறித்த இயலாமையின் பொருட்டோ தீர்ந்தும் விடுகின்றன. அதுபோலவே, கதவைத் திறந்த அவள், 'வாங்க' என்றாள்.

**பி**ரச்னை ஓரளவு தீர்ந்து போகாமலும், ஓய்ந்தும் போகாமலிருந்த சமயம் தான். மழை, திரும்பவும் வரவிருந்தது. வானிலை அறிக்கைகள் பொய்த்துப் போகச் செய்யவும், மழை வரும். மழை, அவ்வாறு வரும் சமயங்களில் விரோதி. பெரியநாயகியின் சாத்தான். சாத்தான் புகுந்த வீடு ஆகுமா?

மழை, தூற ஆரம்பித்தது. இவன் கண்களை இறுக மூடிக் கொண்டான். மண் வாசம், அவித்த வேர்க்கடலையின் மணம் போல 'குமைய' ஆரம்பித்தது. எழுந்து போய் பக்கெட்டை எடுத்து உத்திரத்து ஓட்டையின் கீழ் வைத்தான். நாயகி, மழையை விட வேகமாக, முணுமுணுக்க ஆரம்பித்தாள். மழை வலுக்கத் துவங்கியது. பிளாஸ்டிக் வாளியில் விழுந்த துளிகள், பேரிரைச்சலாய்க் கேட்டன. பெரியநாயகியின் விடாத முணுமுணுப்பும் கேட்டுக் கொண்டேயிருந்தது. திடுமென்று இருளும், அதை மீறிய வெளிச்சமும் மழைத்துளி மணிகள் தெறிக்கும் ஸ்பரிசமும் இவனுள் வெள்ளமென பிரவாகமெடுத்தது. நாயகியின் குரல் மங்கத் துவங்கும் பிரபஞ்சம் அது. மழை நீரும், மின்னல் குரங்கும் தாவித் தாவிப் போயின. முழுக்க நனைந்து கிடந்தது, மனசு.

இவனுள், கவிதை. ○

# KALKI SHOPPING PAGE



"கல்கி ஷாப்பிங்"
பக்கங்களில்
விளம்பரம்
செய்து
பயனடைவீர்!

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை – 97.
போன்: 2345622, 2345623

---

**மணமக்கள் தேவை**
**கம்ப்யூட்டர் ஜாதகம்**

அனைத்து சமூகத்திலும், ஆயிரக் கணக்கான வரன்கள் பெற உடன் பதிவு செய்ய தொடர்பு கொள்ளவும்.

**கம்ப்யூட்டர் ஜாதகங்கள் நொடிப் பொழுதில்**

| | | |
|---|---|---|
| ஆங்கிலம், தமிழ் | ரூ. | 60/- |
| எதிர்கால கணிப்புடன் | ரூ. | 150/- |
| கல்யாண பொருத்தம் | ரூ. | . 60/- |

**TO SOLVE ALL YOUR PROBLEMS CONSULT DIVINE ASTROLOGER OCCULTIST THETIYUR V. MAHADEVAN WITH PRIOR APPOINTMENT.**

**ஸ்வயம்வராலயா**
(GOVT. REGD.) (ESTD. 1980)

37, லேக்வியூ ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33. ☎ : 4746427/4742756. (Res) 4897241.
7A, சாந்தி விஹார் காம்ப்ளக்ஸ் லஸ், சென்னை - 4. ☎ : 4984278.
88/1, 16th Cross, 6th Main, Malleswaram, Bangalore - 55. ☎ : 3340146.

**All Pooja Enthra/Raksha Available Rates On Request**

---



ESTD 1955 உ Phone: 0431-704312 & 706823

இதற்கு முன்பு காசியாத்திரைக்கு போய் வந்த அன்பர்களின் வேண்டுகோளின் படி ஷோலாப்பூர், பண்டரிபுரம், நாசிக்பஞ்சவடி, ஷிர்டி சாய்பாபா வஜ்ஜிரேஸ்வரர் மற்றும் நம் நாட்டிலேயே அபூர்வ அருங்காட்சியமாகிய S.L World யும் பார்த்து வரும் வாய்ப்புடன் கூடிய **வர்த்தகர்களுக்கு ஏற்ற 10 நாட்கள் கொண்ட மகத்தான**

## பண்டரீபுரம் யாத்திரை ஸ்பெஷல்

22-11-99 ம் தேதி (கார்த்திகை 6)சென்னையிலிருந்து ஒரு தனி 3 டயர் கேரேஜ் புறப்பட்டு **ஷோலாப்பூர் - பண்டரிபுரம், கோபால்பூர், மும்பை, வஜ்ரேஷ்வர், நாசிக் பஞ்சவடி, திரியம்பகேஷ்வர், ஜோதிர்லிங்கம், ஷிர்டி சாய் பாபா தரிசனம் மும்பாய் -சென்னைக்கு திரும்புகிறது.** II ஆம் வகுப்பு 3 டயர் ஸ்லீப்பர் சார்ஜ் –காலை காபி டிபன் 2 வேளை போஜனம், சோலாப்பூர் to பண்டரிபுரம் – பம்பாய் to நாசிக் – ஷிர்டி போய் வரும் பஸ் சார்ஜ், லோகல்நகர் சுற்றி பார்க்கும் பஸ் கட்டணம் கம்பெனியாரின் சிப்பந்திகள் மற்றும் நிர்வாக சர்வீஸ் சார்ஜ் உள்பட **ரூ. 5675/-** கீழ்பர்த், நடுபர்த், சைடு பர்த்துகள் தேவை என்றால் **ரூ. 2500/-** வீதம் அட்வான்ஸ் செலுத்தி முன் பதிவு செய்து கொள்ள வேண்டுகிறோம்.

16 நாட்கள் கொண்ட குஜராத், ராஜஸ்தான் மாநில பஞ்ச துவாரகை யாத்திரை 10.2.2000 –வது தேதியில் சென்னையிலிருந்து நவஜீவன் எக்ஸ்பிரஸ் மூலம் ஒரே கேரேஜில் ரிசர்வ் செய்து அகமதாபாத் சென்று துவாரகை சோமனாத், ஜெய்ப்பூர் மவுண்ட் அபு மற்றும் பல க்ஷேத்திரங்களை தரிசித்து மும்பாய் வழியாக சென்னைக்கு வந்து சேர்கிறோம். ரயில் – பஸ் போஜனம் தங்கும் ஜாகை வசதி உள்பட நபருக்கு ரூ. 6675/- மூன்று மாதங்களுக்கு முன்பே பதிவு செய்து கொள்ள வேண்டும்.

**26.2.2000-வது தேதியில் மகா சிவராத்திரி ஸ்பெஷல் காசி யாத்திரை ரூ.6275/-மட்டும்**

16 டிக்கெட்டிற்கு ஒரு டிக்கட் சலுகை உண்டு / முழுமையான விபரம் வேண்டின் 4ரூ ஸ்டாம்ப் அனுப்புதல் வேண்டும்

**ஸ்ரீநாமகிரி டிராவெல் சர்வீஸ்,(Regd.)**
34,A/2 அக்ரஹாரம், மேலசிந்தாமணி, திருச்சி- 2. Ph : 704312, 706823



# முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

அணுகினால் அணுகு பவன் எம்பெருமான் என்று சொன்னேன். பத்தடி அவன்கிட்டே நாம் நெருங்கினோமானால் அவன் நூறடி நம்மிடம் நெருங்கி வருவான். கிட்டே போக வேண்டும். போகிற வரை நம்மை விட்டுப் பிடிப்பான் பரமாத்மா.

ஆனால் அவனைக் கிட்டே நெருங்கி கைங்கர்யம் பண்ணுவதிலே ரொம்ப சிரமங்கள்.

பகவான் நம்மை அதற்கு வரிக்க வேண்டும். உனக்கேயாக என்னைக் கொள்ளு என்று பகவானை நாம் பிரார்த்திக்க வேண்டும். ராமானுஜர் அப்படிப் பிரார்த்திக்கிறார். 'பிரபோ! நாராயணா! விஷ்ணு! உன்னுடைய திருவடியிலே நித்ய கைங்கர்யம் எனக்கு இருக்க வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன். நீ ஈந்தருள வேண்டும்' என்று மஹாலக்ஷ்மியைப் பார்த்துக் கேட்கிறார். "நீங்கள் இருவரும் ஒப்புக் கொண்டால் அல்லவா எனக்கந்த கைங்கர்யம் சித்திக்கும்" என்கிறார். நாமாகப் பண்ணக் கூடியதல்ல- அவன் நம்மை ஏற்க வேண்டும்; வரிக்க வேண்டும்.

சேஷத்வம் என்பது எல்லாமே-நாம் உள்பட- இயற்கையிலேயே அவனுடைய சேஷனாய் இருப்பது. அவனுடைய உடைமையாய் இது மொத்தம் இருப்பது. அவன் அனுபவத்திற்கென்றே மொத்தம் இருப்பது. அவன்தான் இவை அனைத்துக்கும் எஜமானன்.

-இதைத்தான் உபநிஷத் சொல்கிறது:

'போக்தா, போக்யன், பிரேரிதா' என்று.

போக்தா-ஒருவன். போக்யம் என்பது ஒன்று; பிரேரிதாதான் பகவான்.

போக்யம்-அனுபவிக்க வேண்டிய பொருள்; போக்தா அதை அனுபவிக்க வேண்டியவன்.

ஒரு மாம்பழத்தோப்பில் மாம்பழம் கிடைக்கிறது. மாம்பழமானது அனுபவிக்கப் பட வேண்டிய பதார்த்தம். அதனால் போக்ய வஸ்து. அதைச் சாப்பிடக் கூடியவன் போக்தா. 'இந்த மாம்பழத்தை இவன்தான் சாப்பிட வேண்டும்' என்று பகவான் நினைத்தால்தான் சாப்பிட முடியும்.

ஒருத்தர் என்னிடம் வந்து மாம்பழத்தைக் கொடுத்து, நீங்கள் தான் சாப்பிடவேண்டும் என்றார். நான் என்ன பண்ணினேன்...? இங்கே வந்து என்னை வணங்கிய ஒருவரிடம் அதைக் கொடுத்தேன். அவர் என்ன பண்ணினார்...? ஓர் ஓரமாகப் போய் உட்கார்ந்து சாப்பிட்டுக் கையலம்பி விட்டுப் போய்விட்டார்!

கொடுத்தவர் நான் சாப்பிட வேண்டும் என்று கொடுத்தார். -கையிலே கிடைத்தது போக்யம்.

ஆனால் போக்தா யார்?... வேறொருவர்! அடியேன் சாப்பிட வேண்டும் என்று **அவன்** நினைக்கவில்லையே!

இது மாம்பழ விஷயத்துக்கு மட்டும் அல்ல. அவன் நினைத்தால்தான் எதுவும் நடக்கும். அவன் சங்கல்பம், பண்ணிக் கொண்டால்தான் நடக்கும்.

போக்தா, போக்யம், பிரேரிதா என்பதற்கு விசேஷார்த்தம் என்ன வென்று கேட்டால் அவன்தான் மூன்றுமே! போக்தாவாகவும் இருக்கிறான், போக்யமாகவும்

# குறையொன்றுமில்லை

இருக்கிறான், பிரேரிதாவாகவும் இருக்கிறான். மூன்றும் அவனே என்கிற ஞானம் நமக்கு வேண்டும்.

நம்மையெல்லாம் பகவான் அனுபவிக்கிறான். ஆனால் நமக்குள்ளே அவன் இருக்கிறான். அவனே போக்யன் என்றும் சொல்லப்படுகிறான்.

இதைத்தான் இன்னொரு இடத்திலே சாஸ்திரமானது நிமித்த காரணம், உபாதான காரணம், சஹகாரி காரணம் என்று சொல்கிறது.

எல்லாவற்றுக்கும் அவனைத் தவிர வேறு ஒரு காரணம் இல்லை. மூல காரணம் அவனே.

கஜேந்திரன் பகவானை ஸ்தோத்திரம் பண்ணுகிறபோது 'நமோ நமஸ்தே காரணாய' என்கிறான்.

எல்லாவற்றுக்கும் அவனைத் தவிர வேறு காரணம் இல்லை. மூல காரணம்



அவன்!

'நீ நிஷ்காரணன்; காரணமில்லாதவன் நீ, அற்புதமான காரணம் நீ, காரண காரியமும் நீ, அகாரியமும் நீ, அகாரணமும் நீ...' இப்படிச் சொல்லியிருக்கிறது பகவானை!

ஏதாவது ஒன்று சொன்னால் புரியும். அத்தனையும் சேர்த்துச் சொல்லிவிட்டால் அவனைக் காரணம் என்று நினைத்துக் கொள்வதா? காரியம் என்று நினைத்துக் கொள்வதா? அகாரணம் என்று நினைத்துக் கொள்வதா? அகாரியம் என்று நினைத்துக் கொள்வதா...? என்னவென்று நினைத்துக் கொள்வது அவனை?

மத்வாசார்யார் தமது பாஷ்யத்திலே மற்ற ஆசார்யர்கள் சொல்லாத ஒரு விஷயத்தை இது பற்றிச் சொல்கிறார்.

அகாரணம் என்று சொல்கிறோம். அகாரணம் என்பதற்கு எல்லோரும் என்ன பொருள் கொண்டார்கள் என்றால், காரணம் இல்லாதவன் என்று பொருள்.

ஆனால், மத்வாசார்யார் சொல்கிற அழகை கவனிக்க வேண்டும்–

**'அ' என்கிற அக்ஷரத்துக்குப்** பொருளாய் இருப்பவன் **ஒருவனே.** காரணம்– இதுதான் 'அ'கார சப்தத்தினால் (அகாரணம் என்கிற சொல்லில் உள்ள 'அ'காரம்) உணர்த்தப் படுகிறது என்கிறார்.

**ச**ம்ஸ்கிருத பதமிருக்கிறதே அதை எப்படி வேண்டுமானாலும் அர்த்தம் பண்ணி விஷயத்தைக் தெளிவுபடுத்திக் கொள்ளலாம். அத்தகைய உயர்ந்த பாஷை அது.

சம்யகு க்ருதம் சம்ஸ்கிருதம் – சம்ஸ்கிருதம் என்று ஏன் பெயர் வந்தது என்றால், நன்கு செய்யப்பட்டது என்று அர்த்தம். அந்த மாதிரியான உயர்ந்த பாஷை அது.

இதனால் மற்ற பாஷைகளைக் குறை சொல்வதாக ஆகாது. நஹி நிந்தா நியாயம் என்று சொல்வது இதை. பிற மொழிகளைக் குறைத்துச் சொல்லாமல் சம்ஸ்க்ருதத்தை உயர்த்திச் சொல்வது.

மற்ற எல்லா பாஷைக்கும் மூல பாஷை சம்ஸ்கிருதம்.

ஆந்திர தேசத்துக்குப் போனோமானால், தேட தெலுங்கு என்பார்கள். ரொம்ப ம்ருது மதுரமான பாஷை!

அந்த தியாக பிரும்மம் சக்ரவர்த்தித் திருமகனை அந்தத் தெலுங்கு பாஷையினாலே சாக்ஷாத்கரித்தார்.

'நன்னு பாலிம்ப நடசிவச்சிதிவோ சுவாமி?' என்று கேட்கிறார் ராமனிடம். அவனை நேரே பார்க்கிறார். பார்த்து அந்த பாஷையிலேயே அழகாகச் சொல்கிறார்.

தமிழ் பாஷையிலே வல்லுனரான பாரதியார் 'சுந்தரத் தெலுங்கினில் பாட்டிசைத்து' என்றார்.

சுந்தரன் விளங்கும்படியான தெலுங்கு தேசம் என்று அர்த்தம் அதற்கு.

சுந்தரன் என்றால் யார்...? நரசிம்ஹன். ஆந்திர தேசத்தில் தடுக்கி விழுந்தால் நரசிம்ஹ க்ஷேத்திரம்தான்.

கிருஷ்ணா நதி தீரத்திலேயே பஞ்ச நரசிம்ஹ க்ஷேத்ரங்கள்–மங்களகிரி, வேதாத்ரி, மட்டபல்லி, வாடபல்லி, கேதவரம் என்று ஐந்து நரசிம்ஹ க்ஷேத்ரங்கள். அப்படிப் போனால் யாதகிரி, இப்படிப் போனால் சிம்மாசலம்; இப்படிப் போனால் புஷ்கிரி என்று எங்கு பார்த்தாலும் ஒரே பர்வதம்; எங்கு பார்த்தாலும் ஒரே நரசிம்ஹ மயம்! அஹோபிலம் ஒன்றே போதுமே! ஒன்பது நரசிம்ஹரும் அங்கே எழுந்தருளியிருக்கிறார்கள்.

சுந்தரத் தெலுங்கு நாட்டில் இப்படி எங்கெங்கும் காணப்படுவதால்தான் நரசிம்ஹனுக்கு 'அழகிய சிம்ஹம்' என்று பெயர். அவனை ஆராதிக்கிறவர்களுக்கெல்லாம் அழகிய சிங்கர் என்று பெயர்.

அழகிய சிம்மமானவன் இருக்கும்

## அருள்வாக்கு

"**எ**ல்லா உயிர்களும் ஒன்றே;
எல்லாவற்றிலும் ஈசுவரன்
இருக்கிறான்' என்று ஒருத்தன்
உணர்கிறபோதுதான் அவனுக்கு
அருள் உண்டாகிறது. இவன் தன்
மநுஷ்யர்களுடன் ஸமமான நிலையில்
இருந்துகொண்டு பிரியம்
காட்டுவதைவிட இன்னும் ஒருபடி
கீழே இறங்கி, தன்னைக் குறைத்துக்
கொண்டு, மற்றவனை ஈசுவரனாக
நினைத்து தான் ஸேவை செய்கிறான்.
"நைச்சியம்" என்று இதை
வைஷ்ணவர்கள் விசேஷித்துச்
சொல்வார்கள். தன்னைத்
தாழ்ந்தவனாக, நீசனாக நினைத்து
இன்னொருத்தனுக்கு ஸேவை
செய்வதுதான் "நைச்சியம்." இப்படி

தேசத்து மொழி என்பதால் 'சுந்தரத் தெலுங்கு' என்றார்!

இப்படி, உலகத்திலே ஒவ்வொரு பாஷையையும் எடுத்துக் கொண்டோமானால், அந்தந்த பாஷையிலே ஓர் அழகான ருசி; ஒரு நைபுண்யம்; இழுக்கின்ற சக்தி அந்தந்த பாஷைக்கும் இருக்கிறது.

எல்லா பாஷைக்கும் மூல பாஷையான தேவ பாஷை இருக்கிறதே, அந்த பாஷை ஏற்றமுடைய பாஷை. அந்த பாஷையிலே சொன்னால் பகவானுக்குப் புரியும்! எல்லா பாஷையும் பகவானுக்குப் புரியும்தான். ஆனால் அந்த பாஷையிலே இன்னும் விசேஷமாகப் புரியும்!

ஆஞ்சநேயன் அசோக வனிகையிலே சீதையிடம் எப்படிப் பேசலாம் என்று யோசனை பண்ணுகிறான். எப்படிப் பேச்சை ஆரம்பிப்பது?

'சீதாபிராட்டி கீழே இருக்கிறாள். அவள் மனித இனத்தைச் சேர்ந்தவள். நானோ குரங்கினத்தைச் சேர்ந்தவன். அவள் நம்மை உகக்க வேண்டுமானால் அவள் பேசுகிற பாஷையிலே நாம் பேசினால்தான் நன்றாக இருக்கும் என்று மனுஷ்யர்களுடைய பாஷை- அதிலும் அவளுடைய மாமனாருடைய கிருஹத்திலே, கோசல ராஜதானியிலே, அயோத்தியிலே எப்படிப் பேசுவார்களோ அப்படிப் பேசினான்.

இதை லௌகிகத்திலேயும் நாம் பார்க்கலாம். ஒருத்தருக்கொருத்தர் தெரிந்த பாஷையிலே நாம் பேசினோமானால், கிட்டே ஓடி வருவார்கள். பரிச்சயம் அதிகமாகப் போய் விடுகிறது. ஒருத்தருக்கொருத்தர் பார்த்திராதவர்களையும் பாஷை சேர்த்து வைக்கிறது. அவர்களிடத்திலே பந்துத்வத்தை, பிரேமையை உண்டு பண்ணுகிறது.

நமக்கெல்லாம் ஒரு தொடர்பு, அன்னியோன்யமாயிருக்கிற ஒரு வாய்ப்பு எதனால் ஏற்படுகிறது என்று வேதம் சொல்கிறபோது 'வாக்கினாலேதான் ஏற்படுகிறது' என்று சொல்கிறது. அப்படிப்பட்ட வாக்கை ரொம்ப ஜாக்கிரதையாக வைத்துக் கொள்ள வேண்டும் என்றும் சொல்கிறது. ஆகையினால் சம்ஸ்கிருதம் என்கிற வாக்கு இருக்கிறதே சம்ஸ்கிருதமான வாக்கு. சாமஸ்க்ருதி என்று சொன்னால் அழகான பாஷை அது. அதை அனுபவிக்க அனுபவிக்க ரொம்ப ரம்மியமாய் இருக்கும்.

(தொடரும்)



இவன் தன்னைக் குறைத்துக் கொள்கிறபோதுதான் இவனுடைய அன்பு வெறும் பேச்சாக, எண்ணமாக மட்டுமில்லாமல் அதற்குக் காரிய ரூபத்திலேயே தெய்வீகமான சக்தி உண்டாகி, அது 'அருளாக' ஆகிவிடுகிறது! கொஞ்சம் கூட மமதையே இல்லாமல், "நாம் பெரியவர், உபகாரம் பண்ணுகிறோம்" என்ற அகந்தையே இல்லாமல் இவன் ஸமஸ்தப் பிராணிகளிடமும் ஈசுவர ஆராதனையாக அன்பைச் செலுத்துகிறபோது, அதுவே இவனை ஸகல பிராணிகளுக்கும் மேலே உயர்த்தி விடுகிறது. இவனுடைய அன்பு வெறும் பேச்சாகவும் எண்ணமாகவும் மட்டுமில்லாமல், காரியத்திலேயே ஈசுவராநுக்ரஹத்தை வாங்கித் தரக் கூடிய அருட்சக்தியைப் பெற்று விடுகிறது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடிஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

# டுப்பியின் குடும்பம்

அலமு; அரஸ்













Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 950/- (Air Mail)

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392 /99* Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka